ஸ்ரீ திருநந்திகேசுவரர் பரிக்ஷித்து மகிபதிக்கு

திருவாய் மலர்ந்தருளிய



# நந்தி வாக்கியம்



# அட்டவணை



முற்றிற்று

## ஜாதக அலங்காரம்

### (மூலமும் ஆதிவிரிவுரையும்)

இது சோதிடத்தில் பழகுவோர்க்கு அதிக அவசியமானது எளிதில் அறியும் பொருட்டு எழுதப்பட்டிருக்கிறது ஒவ்வொரு ஜாதகரும் அறிந்து கொள்ள வேண்டிய திதிகளின் பலன்களும், நட்சத்திரத்தின் பலன்களும் யோகங்களின் பலன்களும், விபரமாய் கூறப்பட்டிருக்கின்றன. நட்பாட்சி யுச்சம், பகை, நீசம் இவற்றின் விவரமும் துவாதசி பாவம் கிரக சாரங்கள் கிரகங்களின் நட்பு, சமம், பகை பாவங்களின் பலன்களின் சக்கரங்களுடன் மிகவும் தெளிவாய் விளக்கப்பட்டிருக்கின்றன. பெண் ஜாதகங்களில் அழகு புத்திரர் மலடி, பதிவிரதை நடத்தை, அமங்கலை முதலியவற்றை விபரமாகவும் கோட்சார பலன்களையும் இராசிகளின் கிரகங்கள் நிற்கும் கேட்பதை குரு சொல்வதும் வெகு விமரிசையாகயிருக்கிறது. தானே புத்தகத்தை வைத்து பார்த்துக் கொள்ளலாம். பிறருக்கும் சொல்லலாம் வெகு எளிய நடையிலும் ஏராளமான படங்களுடன் தெளிவாகவும் சுலபமாகவும் மேனாட்டு அறிஞர்கள் பிரபல மேதாவிகள் படங்களுடன் தெளிவாகவும் சுலபமாகவும் மேனாட்டு அறிஞர்கள் பிரபல மேதாவிகள் படங்களுடன் வெளிவந்து விட்டது. சுமார் 400 படங்களுடன் அடங்கியது பெரிய மேதாவியும் கைரேகை அனுபவமம் வாய்ந்த நிபுணருமான சிவசுப்பிரமணியம் அவர்களால் இயற்றப்பட்டது.

**விலை ரூ. 100/-**

## சோதிட ஆசான்

பிரபல ஜோதிட வித்வான்கள் பத்திராதிபர்கள் நற்சாட்சி பெற்ற நூல்

ஒவ்வொருவரின் கோட்சார விதிகளும் கிரக ராசிகளும் நட்சத்திர பலன்களும் கிரகசாரங்களும் கண்டாதி கண்டங்களை பிறர் உதிவியின்றி அறிந்து கொள்ளும் முறையும் விவாக பொருத்த நிமித்தங்களும் அரிய விஷயங்களும் மற்றும் பொருத்தமுள்ள பலவித சோதிடமர்ம விஷயங்கலெல்லாம் இதில் அடங்கி இருக்கிறது வேறு சோதிட புத்தகம் தேவையில்லை. 4 பாகங்கள் அடங்கியது.

**விலை ரூ. 120/-**

# முகவுரை

நெடிய கடல் சூழ்ந்த காசி யெங்கணுஞ் சிறப்புற்றோங்கும். மானிடர்கள் தத்தமது திரிகாலங்களி னிருவினைப்பயன்களை நன்குணரும் பொருட்டு சச்சிதானந்த சுயம்பிரகாச தேஜோஸ் மயஸ்வரூப நீலகண்ட திரிகேந்திர சடாமகுடதாரியாகிய ஸ்ரீ சிவபெருமானா ராதியிற் கருணையுற்றுமையவளுக் குபதேசித்ததை யாங்குற்ற திருநந்திகேசுவரருஞ் செவியுற்றவராய் பின்ன மோர்காலத்தினுலகின் கண் மன்னுயிரனைத்துந் தன்னுயிராமெனச் செங்கோனடாத்திப் மன்னரும் புகழ் படைத்த பரிக்ஷித்து மகிபதிக் குரைத்தனராக.

இவ்வரிய நூலுலகத்தின் கண் சுக்கிலபட்சத் திந்துவாமெனப் பொலிவுற் றிருக்கினு மிங்கிதனைக் கண்ணுற்றோர்க்கன்றி, ஏனையோர்க்கரிதுணர் பாண்மைத்தாமாதலி னித்தகைய விருள்கடிந்து பகற்கான்றெழுதரு மிரவியனைய தூஉஞ் சோதிடருக் கிருகண்மணி போன்றதுமான மிகவாச்சரியகரமுள்ளப் பலன்களடங்கிய விவ்வரிய நூலைத் தம்மளவேயாக மறைத்துவைத்து வாளாமறந்து போகா தெல்லோருக்கும் பயன்படும்படி வெளியிடுவோமெனுமிந் நூல் சிலகாலங்களுக்குமுன் முழுவதும் வெளியிடாது சிலவற்றோடு பிரதமலக்கினமட்டும் அதினின்று வெளிவந்திருக்கின்றமையையுங் கருதி, ஆங்கியானும் பலநாளாக முயன்றரிதிற்பெற்ற இவ்வரிய நூலை ஏட்டுப்பிரதிகளில் பலவாறாகச் சிதைவுற்றிருந்ததை யிருந்த வண்ணம் ஒருவாறு சீர்படுத்தி மற்ற 11 - லக்கினங்களும் மிக அபூர்வமான வாரூடப்பலன்களும், மனைமுகூர்த்த லக்கினபலன்களும் மனைக்குக் கிரகமடைக்கும் விபரமுமின்னுஞ் சிலவற்றுடன் ஒரே பயிண்டாகச்சேர்த்து எம்மால் வெளியிடப்பட்ட மிக வாசரிய கரமான பலன்களடங்கிய பாக்களாகிய இதை வாசிக்கும் சோதிடருக்கு மேனையோருக்கு மளவிடற்கரிய சந்தோஷம் விளைவிக்குமென்பதி லையமிராதென்பதெமக்குத் திண்ணந் திண்ணம்.

இங்ஙனம்

ஆர். அப்புசாமிபிள்ளை

பாலக்காடு.

பரமபதி துணை

# நந்தி வாக்கியம்



### விநாயகர் துதி

அரனுமையவள் தமக்கு ஆதியிலுரைக்கநந்தி
பருவநற்பரிக்ஷித்தாம்பூ பாலனுக்குரைத்தவிந்நூல்
பெருமைசேர்பொருளையானும் புவிதனில் மேவுதற்குக்
கரிமுகன் தொந்திமுக்கண் கணபதிகாப்பதாமே.

### நூன்முகம்

சரராசிகளாகிய மேடம், கடகம், துலாம், மகரம் இவை நான்கும் 11-ஆம் ராசிகளையும், ஸ்திரராசிகளாகிய ரிஷபம், சிம்ஹம், விருச்சிகம், கும்பம் இவை நான்கும் 9-ஆம் ராசிகளையும் உபய ராசியாகிய மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இவை நான்கும் 7-ஆம் ராசிகளையும் பார்ப்பார்கள்.

### விபரம்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மேட | முதற்கால் | கும்பத்தின் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 2. | ரிஷப | முதற்கால் | மகரம் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |

| | | | | |
|---|---|---|---|---|
| 3. | மிதுன | முதற்கால் | தனுசு | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 4. | கடக | முதற்கால் | ரிஷபம் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 5. | சிம்ஹ | முதற்கால் | மேடம் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 6. | கன்னி | முதற்கால் | மீனம் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 7. | துலாம் | முதற்கால் | சிங்கத்தின் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 8. | விருச்சிகமுதற்கால் | | கடகம் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 9. | தனுசு | முதற்கால் | மிதுனம் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 10. | மகர | முதற்கால் | விருச்சிகம் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 11. | கும்ப | முதற்கால் | துலாம் | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |

| | | | | |
|---|---|---|---|---|
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |
| 12. | மீன | முதற்கால் | கன்னி | 4-ங்காலையும் |
| | ஷை | 2-ங்கால் | ஷை | 3-ங்காலையும் |
| | ஷை | 3-ங்கால் | ஷை | 2-ங்காலையும் |
| | ஷை | 4-ங்கால் | ஷை | 1-ங்காலையும் |

ஆகையாலினிப் புகலப்புகும் பலனியாவு முக்கியமாய் இராசிகளின் சுபாவமெனுங் காரகங்களையு நோக்குகளையு மாதாரமாகக் கொண்டுஞ் சிற்சிலவிடங்களில் மாத்திரம் கிரகங்களைக் கொண்டுமிவற்றை யறிவுடையோராய்ந்துணர்வாறாக. எவ்வாறெனில் மேற்கூறிய சரராசியாகிய மேடத்தின் முதற்பாதமானது கும்பத்தின் நாலாம்பாதத்தையும், இது துலாத்தின் முதற்பாதத்தையும் இது சிம்ஹத்தின் நாலாம்பாதத்தையும், இது மேடத்தின் முதற்பாதத்தையும் நோக்குங்கா லிவ்வோரைகளுக் குரிய பலன்களும் பொருந்துமல்லால் முற்கூறிய பலன்களும் பொருந்துமல்லால் முற்கூறியது மினிக்கூறுவதுமாகிய பொதுப்பாடல்கலாலு முணர்க.

லக்கினத்திற் குரிய கடிகையை நான்குபங்காக்க ஒவ்வோர் பங்குக்காகுங்காலத்தையே ஓரையெனப்படும்.

அன்றியும் சரந்திர முபயமா மிராசிகண் முறையே 4,3,2,ஆம் பாகங்கள் பாலாரிட்ட வோரையெனப்படு மாதலா லவ்வோரைகளுக்குத் துவாதசப்பலன்களு முரைக்கவில்லை யென்பதையுணர்க.

மேடலக்கினபலன் முன்னமச்சிட்ட இந்நூலின் முதற் பாகத்திற் காணவும்.



# நந்திவாக்கியம்

## விருஷபோதயப்பலன்

ரிஷபலக்கினமேயாகில் நேருடன்கீழ்மேல்வீதி
மருவிய வாசல்தெற்கு வதில்சந்து தெற்கேயுண்டு
பருகியகிழக்குக்கோவில் பாழ்கிணறக்கினிமூலை
தருவியமேற்கிலம்மன் தடாகமுமெத்தவுண்டே. 1

## வேறு

வில்லவன் சனியு மதிபுக ரிவர்கள் விரும்பியே பட்டமந்திருக்க
சல்லாபமான ரிஷபலக்கினத்தில் சதிருடனுதித்த பாலகற்கு
சொல்லியதெற்கு வடக்குடன்வீதி சூக்ஷமாம் மேற்புறம் வாசங்
கல்லினால்ஜலத்தால்முள்ளினாற்கண்டம் கண்டு பின் நிவர்த்தியுமாமே.2

## ரிஷபத்தில் பாவாதிபர்கள் நின்றபலன்

பாரினிலிடபந்தனில் ஜனித்தோற்குப்பார்க்க வனாக்ஷியாயிருக்கில்
வீரியமுடனே தேகரோகத்தான் வேதனை ரோகத்தாலடைவன்
பாரினிற்றனத்தோன் புந்தியேநட்பாய் பலமொடு கேந்திரமிருக்கில்
மீரியச் செல்வன் வித்தையுமுடையன் வேந்தர்கள் பிரியசெல்வீகன்.3
மாறியநிலவு மூன்றாதியுச்சம் வலிவொடு கேந்திரமிருக்கில்
பேரியர்பெண்ணே சகோதரமாகும் பலன்பல பேர்களைக்சேர்வன்
கோருமுபாயத் தந்திரமுடையன் கோதையர் நட்புளனாகும்
தூரியச்சத்துரு தங்களை ஜயித்தல் சொல்மிக யோகியமிவனே 4

## வேறு

அரசேநான்கா மாதிபதியமர்ந்து கேந்திர மேறிநிற்கில்
மிரசும்பகையா மிதிலன்னைமுற்றும் துன்பமுறும் பிணியாம்
தரையில்யார்க்கும் செல்வமதைத்தருவன் துறவிக்கினி யவனாம்
முரைசேய்வசனன் வித்தையுளன் முந்திப் பூர்வமிலையாமே. 5

## வேறு

முந்தியப் பூர்வபேதம் மொழிந்திடு மைந்தோனிற்கச்
சந்ததினருக்குப் பேதம் சார்ந்திடு மந்சியத்திற்
வந்திடும் பெண்ணுண்டாகி வருமாணே களன்றி
வந்திடுமம்மான் வர்க்கம் வேதனை யடைவாராமே. 6
எப்படி யம்மான்வர்க்க மிடரென்று சொன்னீரய்யா
சொற்படி பஞ்சமாதி சூழ்ந்து கேந்திரத்தில்நிற்கில்

தப்பிதமில்லை மன்னா தண்டுக்கோ விரயமாக
இப்படி யமர்ந்ததாலே யிடரம்மான் வர்க்கமென்றோம். 7
ஆறாதி கேந்திரத்தி லமர்ந்திடப் பலனைக்கேண்மோ
தேராத ரோகமென்கத் தெரிவையர்க்க லக்கந்தாரம்
மாறாகு மன்னியதேசம் மாரல்காண் நிலையில் விர்த்தி
கூராகும் சப்தமாதிக் குணத்தினைச் சொல்லக்கேளாய் 8
சொல்லக்கேள் சப்தமாதி சுகமுடன் நட்பாய்நிற்க
வெல்லக்கேள் நலம்வேறாகும் விளங்கிடுங் குடும்பம்பெண்ணால்
எல்லையிலரசர் துன்ப மெழில்தனம் விரயமாகும்
புல்லிய சகோதரங்கள் புதல்சுக பேதமாமே. 9
தொல்லையாம் ருணமுண்டாகுஞ் சொற்பகை தனையுண்டாக்கும்
வல்லபமெட்டாமாதி மருவடி லாயுள்விர்த்தி
சொல்லுமே புத்திரவீனம் சுகமுள புத்திரனொன்றும்
அல்லலாம் பாக்கியாதி யமர்ந்திடி லில்லாள் நோயே. 10
ஆயுத மதனாரிட்ட மவனியிற் பிரிதுன்பாக்கியம்
தேடியும் வேறொருவர் கொள்வர் சேர்க்காமற் றோனேநிற்கில்
சேய்கருத் துடையன் மிக்க சிறந்தநற் கணிதமுள்ளான்
ஏயகாரியத்தில் வல்லனெழில் சுபவிரயன் சொல்லே. 11
சொல்வெகு வுபாயதந்திரி சுகம்வெகு பேதமுண்டாம்
சொல்லரசரைப் பகைத்து சொற்புவி திரிபவனாகும்
எல்லை லாபத்தோனிற்க வோசுகந் தொழிலிலாபம்
அல்லலிவ் வியத்தோனிற்க வாக்கம்பூப் பிறருக்காமே. 12

## (ரவி மதி நின்ற பலன்)

இன்பமாரிடபந்தன்னிலே பகையாயெல்லைமார்த் தாண்டனுமிருக்கில்
துன்பமாஞ்சுகங்கள் பேதமேகாட்டுஞ் சுகமன்னை வர்க்கத்திற்றோஷம்
அன்பொடுமதியே யுச்சனாயிருக்க வதில்சுகமன்னை வர்க்கத்தால்
இன்பமாம் பெண்பாலுடன் சகோதரமா மிடரிலைதாய் சுகமாமே. 13

## செ - பு - வி

உதித்தன ரிடபந்தன்னிலே சேயுமுதயமாய் வந்தஜாதகற்கு
விதித்தனற் பூமிசேர்க்கையா மேகம்விளங்கிய தாரமேபிணியாம்
பதிதனில்புந்தி புத்திரலாபம் பலமொடுதா னம்மான்சுகமே
கதியொடுமன்ன னிற்கப்புத்திரனோ காலாந்தரத்தினிற் செல்வன் 14

அதிபனாமாயுள்தீர்க்கமாமரசர் அகமகிழ்தொழிலையேயுடையான்
சதிசெய்வன்சிரேஷ்டன் விர்த்தியாம்பகையேசார்ந்திடும் பலன்களெனச் சொல்வாய்
அதிபனாம்பிருகு ஆக்ஷியாயிருக்கி லடைவுடன் சத்துரு ஜயிப்பன்
முதியமால்துரோகி நீலனேயிருக்கிற் முன்பூர்வ பேதமாம்பிணியே. 15

## ரிஷப முதலோரையின் பலன்

திரமெனுமிடபத்தின் முதலோரைத் தென்வடல் வீதியேயாகும்
பரவியகிழக்கு முகப்பதுவாசல் படர்விருத்தெதிர்மனை சிறப்பாம்
உரமெனும்வடக்கு திசைதனிற்சந்து வுற்றிடும்தென்திசை சிறப்பாம்
கரமுடன் பூர்வங் கலங்கிடாதிருப்பன் கன்னியர்தத்து புத்திரனே. 16
விடைதனில் முதலோரைக்கு மிக்க நற்பலன்கள் கேளாய்
இடையெதிர் மனைக்கு மூவரிடரொடு பாகமீனம்
தடையில்லை விர்த்திசெல்வந் தழைத்திடும் வடபால்சந்து
கடைமனை யொன்றீங்காண் லருதுவாரால் கோவில் 17

### வேறு

இனியமனை தென்பாக மிரண்டு மனையிலொன்
றின்பமிலை தென்பக்க மிருபெண்ணின் விர்த்தி
தனியமனை வாழ்க்கையது மத்தியினி லீனம்
தருவதுவு நிலையிலோர் தனித்த சுகபேதம்
கனிமொழியா லாலயமும் தென்பாகத் துண்டு
கங்கையது தென்கிழக் காகு மிதுவன்றி
சனிமுதற் பாவிகளின் பார்வையே யாகில்
தலமதில் விருக்ஷங்கள் தழைத்தவிடமாமே 18

### வேறு

தருவது தந்தை யாதீனமிரண்டுந் தரணியிலாதியிற் கன்னி
வருவதுகும்ப ராசியின் நிலைமை மன்னர்கள்மனையினோரமதாம்
பெருகியமனையா மாதியிற்பிதுர்கள் பெலனேழுவர்க்கத்தில்நிலமை
திருகியற் செல்வம்நான்குபேர்விர்த்தித் திரமெனுமனுபவம்சொல்லே 19
தந்தைகாலத்தில் விர்த்தியேமூன்று தலமதில்நிலை யிரண்டாகும்
வந்தையேயேக னன்னியதேசம் விரும்பியப்பெண்வழிச் செல்வன்
சந்ததியொருவர்க் குண்டுகாண்தலத்திற் தனமுண்டு ஜாதிகன்றானும்
தந்தையினிளையசதோரன்றனக்குத் தத்துப்புத்திரனெனச்சொல்லே 20

## வேறு

ஏரதனின் முதலோரை நிலையே யாகி
விரும்பவர்கள் நிலையாகு மின்னங்கேளு
நேரதரம் ஜாதகற்கு வயதோ ரேழில்
நிலையன்னைக் கண்பமெனத் திரமாயோதும்
பாரதனிற் தலங்களுக்குக் கிரைந்தில் செல்வன்
பயஞ்சோராலே பலவிரயங் காட்டும்
கூறுவர்பின் வடகிழக்கு திசையிற் போவன்
குடதிசையிலும் போக்குக் குணமிவ்வாறே 21

## வேறு

ஓதியவயதுப் பதினைந்திற் செல்வ முற்றிடுமீன்ற தந்தையர்க்கு
பேதியாதிதற்கு மன்னரால் வழக்குப் பெலமொடு விரயமேசெய்யும்
நீதியில் ஐயமாம் பூமியிற்வழக்கு நிலையெனப் பெண்கலகங்கள்
கோதியக்குடும்பந்தனில் மிகக்கலகங்கொள்வதுநிலையெனப்படுமே 22
ஆதியிற்பூர்வம் பேதமாயிருப்பா ரவனியிற்ஜாதகன் றனக்கு
பாதிகாண்வயது முப்பத்துமூன்றில் பற்றியக்கண்ட மொன்றுளது
நீதியாயறுபத்தோ டிருமூன்றிற் நிலையுள மாரகமோதும்
தீதிருபத்துக் கைந்தினுக்கப்பால் செல்வானென் றுரைப்பதுவே 23
இரண்டெனுமதிபர் சரத்துளோர்நட்பா யிருந்திடில் வித்தையின்பலன்கள்
திரண்டிடுமேன்மை யிருவிதவித்தை சிறந்திடுந்திரமிது காணும்
பிறந்தசேய்தனக்கு நேத்திரசுகங்கள் பெலமுடன் குடும்பமும் விர்த்தி
அறிந்திடச்செல்வம் தந்தைக்குமதிக மறிவதுநிலையிவ்வாறாமே 24
திரிதியப்பலன்கேள் சகோதரமேழுத் திரமதில்விர்த்தியே யைந்து
வருமிதிலாண்கள் வலிவுடன்மூன்று வகையுளபெண் ணிரண்டாகும்
தருமிதில் விர்த்தி சகோதரர் பூமித் தனம்சுயார்ச் சிதமெனப்புவியிற்
பெருமையாய் வாழவனென் வுரைசெய்வாய் பெருமையிந்நூல்வதிசயமே 25
நாலாதிபலன்கேள் மதிக்குநான்காதி நலமுடனுதயத்தோர் சகிதம்
மேலாகுமன்னைச் சுகமெலாந்தீது மிகுரோகமென்பதுநிலையே
காலதிற்பிணியாம் கந்மதிலூனங் கருதுவரிப்படி பலன்கள்
சர்வமாய்த்தலம் வுட்டசுவர்க்கத்தால் சஞ்சலமுற்றுமே யிருப்பன். 26
ஐந்திடமதிதனக் கைந்திடந்தன்னை அரவுடன் பாபிகள் பார்வை
சொந்தமாயிருக்கின் ஜாதகன் றனக்கு சொல்வது புத்திரவீனம்

வந்திடுங்காலாந் திரத்தினில் புத்திராள் வருஞ்சுகமன்னை கண்டமுமே
விந்தையாயிருபத் தேழினில்மாரகமென விளம்பினர் நந்திதேவே. 27
பலனதையறிய தம்மான்கள் பூர்வம் பலமொடு கிழக்கு மேல்வீதி
தலமதில்தென்பால் வீடெனலாகுந் தரணியிலிருமனை யுண்டாம்
குலமதிற்செல்வன் யோகவானென்றுக் கூறுவரிவன்வய தேழில்
நிலையோடம்மான்கள் சுயார்ச்சிதமனையில் நிதியுடனிருப்ப னென்றோதே 28
சத்துருதானப் பலனெவ்வாறென்னில் ஜாதகன்றன்னிட வயது
பத்திரண்டதனில் ஜலத்தினாற்கண்டம் பாலகன்றனக்குச் சத்துருவே
மித்துருவாவா ரரசரால் வழக்கு மிகுத்திடுமதில்ஜய முண்டாம்
சொத்துகளதனை விரயமேசெய்வன் சொல்வது குணமில்லையாமே. 29
சத்தம பலன்கேள் களத்திர மொன்றுந் தலமதிற் கிழக்கு மேல்வீதி
சித்தமாய் வடபான் மனையிரு குடும்பம் சேர்ந்திடும் விர்த்தியே யொன்றாம்
உத்தியாங் கிழக்குதிசைதனிந் பெண் ணாலுறும்வயதிருபதற்கபமாம்
மத்தியிற் கண்டங் களத்திரந் தனக்கு வந்துடன் சௌக்கியமாமே 30
ஏழிட மதனாற் களத்திர மதற்கிடரிலை நிறம் சிகப்புளதாம்
தாளிடஞ் சமனே உருவதாம் தயவு தாக்ஷண்ய சற்குணமுள்ளான்
சூளிடங்க களத்திர வர்க்கத்தால் சுகங்கள் சுக மெனலாகும் பலன்கள்
வாழிடம் செல்வங் களத்திர விழியில் மண்மனை பொருள்களுண்டாமே 31

## வேறு

சுகங்க ளெவ்வாறு சொல்லும் சுக்கிரன் நீசனோடு
அகமதுக் குடையோன் கர்மமாகிடு லெவ்வா றுண்டாம்
மகவிலா தேங்கிப் பின்னும் மற்றொரு விவாகந்தன்னை
சுகம்பெற நாடிகொள்வன் சொல்லுவர் முப்பத்தாறே. 32
தக்க வெட்டாதி யாயுள் தீர்க்கம்தாம் தலமதிற் கண்ட மேழினிலே
மிக்க பத்தாண்டி லக்கனியம்மை மிகுத்துடன் சௌக்கியமென்க
பக்குவமிருபதே டிரண்டாண்டிற் படர்செடி மரத்தின் மீதிருந்து
சுக்கியே விழுத் யிதிற்கண்ட முளதாய் கருத்துடன் சௌக்கியமாமே, 33
ஓதிய தொன்பதா மிடப்பலன் கேள் உறுந்தந்தை சுகமெலாந் தாழ்வு
வேதனைப்படுவர் ரோகத்தால ருணத்தால் வேறொரு தலபேத மதனால்
தீதிது வெல்லாம் ஜாதகன் வயது சிறப்பிக்க மைந்தினுக்கப்பால்
சோதிக்கச் செல்வ முண்டு மாதுருக்குச் சுகமெலா மதிகமா மென்றே. 34

அதிகமாந் தந்தை தனக்குமே கண்ட மாரெட்டா மாண்டினிற் றுன்பம்
விதியதா மிருபத் தேழ்வய தன்னில் விலகிய கண்டமொன்றாகும்
பதிதனிற் பகுதி சேர்த்திட மைந்தர்க் கைம்பதுவுட னொருநான்கில்
இதிற் பிதாவரிட்ட மாகிடு மென்று யியம்பினர் நந்தி நற்றேவே. 35
பத்தினிற் குடைய பலன்றனை கேளும் பற்றிய புவி யதிகாரம்
சுத்தநன் மனத்தன் சுபத்தினல் விரையம் செய்வன்காண் தொழிலிருபிரிவாம்
உத்தமன் யோக நட்புளள் செல்வ னுன்னிய மன்னர்கள் நட்பன்
இத்தலமதனிற் றெய்வ சிந்தையனா மியம்புவே னின்ன முஞ் சுகங்கேள் 36
அறிவதுலாபத் ததிபலா பலன்க ளதிகாரரால் தனலாபம்
தெறிவது கீழ்ப்பால் வடகிழக்கதனில் சிறப்புடன் லாபமத்திசையாம்
குறிப்பது பூமி வியாபார மதனாற் கொள்வது சபலாபமென்க
ரெறிப்படுமன்னிய தேசத்தின் பொருள்கள் நேசரால் வருமெனச் சொல்லே 37
விரையாதி பலன்கேள் விளங்கிடு மனையாம் வேந்தர்கள் மந்திரி நட்பாம்
துரைமன்னர் மகிழும் கட்டட விர்த்தி சொல்வது தந்தையர் சுகமாம்
நிறையொடு செவ்வங் களத்திர வர்க்கம் நிலையினாற் சௌக்கிய மென்க
திரஞ்சுக முடையன் நற்பத மடைவன் சிறப்புள்ள ஜாதகனாமே. 38

*ரிடப முதலோரை பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## ரிடப மிரண்டா மோரையின் பலன்

விடைதனி லிரண்டாமோ ரையில்ஜனிக்கில் வீதியுங்கிழக்கு மேற்காகும்
திடமுடன்தெற்கு வாசல் காணாரல் திரமுள கங்கையாங் குளந்தான்
வடமுடன் கோலில் வடக்கினிலுண்டா மன்னர்கள் மனைவட கிழக்காம்
உடனிரு பக்கமுள மனைப்பாழா முறுதியா மாதி பூர்வீகம். 39

### வேறு

பாங்குள விடை யிரண்டா மோரையின் பலனைக்கேளாய்
தீங்கிலா னெதிரி னிற்றான் திரமாக வேக மீனம்
நீங்கிய மனயையின் பக்கம் நிலைகிழக் கதிலோர் சந்து
ஆங்கனல் பட்டவீடு வதன் மேற்கில்பாழ் மண்ணாமே. 40

### வேறு

தந்தைக்கு தந்தை சகோதர மைந்துத் தலைமையா மிரண்ட தில்விர்த்தி

முந்தியப்பூர்வ மிரண்டிட மென்பா முற்றிலு மோரிடம்பேதம்
விந்தை யாய்சிங்க மேடத்தில் நிலமை மிக்கநற் சுபரொடுப்பார்வை
வந்திட லன்னியர் நிலைதனி லிருப்பார் வருமிருப் பிரிவள மண்ணே. 41

வேறு

சீராக ஜாதகற்கு சிறந்திடு மாயுள் தீர்க்கம்
நேராகு மண்பதல்லால் நிலையிரண் டதனிற் கண்டம்
பாராளும் யோக மென்பர் பற்றிய வயதீ ரேழில்
மாராத யோகம் கீர்த்தி வருஞ்சுகம் வலுவுண்டாமே. 42

வேறு

நிறமது பொதுவாஞ் சமனுரு வனுமாம் நீதியுமுடையவனென்க
கரமதிற் றளும்பு கன்னதில் மச்சம் கடினகோபத்தனையுடையன்
திரமது புத்தி கீர்த்திவான் செல்வன் சிறப்புளன் றனத்தினாற் பலன்கேள்
வரமுடையவன் காண் வாணிவரக்குடையன் வரும்வித்தையிருவிதமுளனே. 43

வேறு

தலமதிற் றனாதிகோணம் சார்ந்து பயந்தானாகப்
பலகவி கணித வித்தை பலமுடன் பாலற்குண்டாம்
நிலைகுடும்பங்கள் விர்த்தி நிலைசெல்வ மன்னியபாஷை
விலகிய வித்தை யெல்லாம் விளங்கிடும் ஜாதகற்கே 44
வரும்நிலை மூன்றாம்பாகம் வண்மைகேள் சகோதரங்கள்
பெருகிய தைந்து விர்த்தி பெலனிரண்டாண்பால் விர்த்தி
தரும்நிலை பென்னிரண்டு தசைமிசை யோகம் சொல்லும்
குருகிய சத்துரு விர்த்தி குடும்பத்தி லிளையோன் தூர்த்தன். 45

வேறு

தலமதிற் றனாதிகோணம் சார்ந்து பயந்தானாகப்
பலகவி கணித வித்தை பலமுடன் பாலற்குண்டாம்
நிலைகுடும்பங்கள் விர்த்தி நிலைசெல்வ மன்னியபாஷை
விலகிய வித்தை யெல்லாம் விளங்கிடும் ஜாதகற்கே 46
வருமநிலை மூன்றாம்பாகம் வண்மைகேள் சகோதரங்கள்
பெருகிய தைந்து விர்த்தி பெலனிரண்டாண்பால் விர்த்தி
தரும்நிலை பென்னிரண்டு தசைமிசை யோகம் சொல்லும்
குருகிய சத்துரு விர்த்தி குடும்பத்தி லிளையோன் தூர்த்தன். 47

### வேறு

வாகனதானப் பலனைதைக் கேண்மோ வாகனம் மண்மனை யுடையோன்
பாகவான றர்ம்ம வழிதனில் பேதம் பகருவன் பலர்களால் சுகவான்
விவேகவா னன்னைப் பகையுளனாகு மிக்கப் பின்புத்தியே யுளனாம்
சோகமே நிலையாம் சுகத்தினாற் கெடுதி சூழ்பாவிப் பார்வையிப்பலனே 48
அன்னைக்கோரிட்ட மறிவதுப் பலன்கே ளாண்டிரண்டினிலொருகண்டம்
வின்னமாம் வயதோ ரேழினிற் தீர்க்க மாரக மென்பது திண்ணம்
உன்னிய வன்னை சுகமெலாங் கெடுதி யுறுவம்மான் விர்த்தியிற் செல்வம்.
பின்னலைந்தம்மான்நிலமையைப்பிரித்துப்பெலமுடனெடுத்துறைப்பதுவே. 49

### வேறு

உரைத்திடக்கே ளம்மான்க ளிரண்டுபேர்க
ளொன்றுவிர்த்தி யொன்றுமிக புத்திரதோஷம்
நிறைந்திடவே சுகங்கன்று நானகதாகும்
நிலையாண்டி லம்மான்கள் நேரானபகையாம்
குறைவுண்டா மம்மான்கள் குடும்பமதுபிரிவாய்
கோள்பகையாம் குடும்பத்திற் குணமிலையிப்பலனே
தரைமிசையிற் தந்தைவர்க்க மதனால்மேன்மை
தணிவதனாற் சுகமிலைகாண றனித்திருப்பதாமே. 50
புத்திரனாற் பலன்கேளு மந்தியத்தில்
பெண்ணிரண்டு தான்விர்த்தி பெருமையென்க
மித்திரனாம் புத்திரனோ மேன்மையோகன்
மேலான வயதைந்துக் கப்பாற்செல்வம்
சித்திரம் போலழகுடையன் கோபிக்காமி
செல்வமுளன் பூமிதனிற் பொருளுமுண்டாம்
பத்தியதாம் பத்தாண்டிற் சுபங்கள்வித்தைப்
பண்புடைய சௌக்கியனாம் பலனிவ்வாறாமே. 51
பலமுடைய வாறாகிப் பலனைக்கேளாய்
பகையுளோன் சகோதரனைப் பாகஞ்செய்வன்
நலமிலைகாண் பெண்ணாலே பிணியுமுண்டாம்
நாரியரால் வெகுபொருளும் சேதமாகும்
தலமதனிற் பகையுளனாம் சோரராலும்

தனவிரையம் சஞ்சலமும் தலத்திற்பேதம்
விலகிடா குணமுண்டா மிருபத்தெட்டில்
வேறாகும் குணமொன்று விபரங்கூறே. 52

## வேறு

ஓதுவதே ழாமாதியின் பலன்கே ளுண்மையாந் தாரமே யோகம்
தீதிலையதனிற் தென்வடல் வீதித்த றங் கீழ்பால் மனையெனலாகும்
பாதியம் மனையிற் பாவமே யீனம் பற்றிய தன்னிலைப்பெண்ணாம்
சோதினையாக பார்க்கிலோ தந்தைத்தொடரே கன்விர்த்தியி லாமே. 53
நலந்தரும் சுபமே ழாதி சுகங்கள் நன்மையாந் தாரமே யோகம்
பலமொடு ஆடைமா தழகுள்ளான் பலத்தினில் யோகமே யுள்ளான்
விலகிய நிறமோ பொதுமிக்க குறியாள் விளங்கிய நற்குணமுள்ளாள்
தலமதில் மேன்மை புத்திர சுகங்கள் சாற்றுவரிந்நிலைப் பலனே 54
அட்டமபலன் கேளாயுளின் விபர மறிவதைப்பதுவு மல்லாது
திட்டமா யிரண்டாண்ட தனில்மாரகமாம் தீரமா எடுத்துரைப்பதுதான்
விட்டிடக் கண்டம் யோகமே பத்தில் விரும்பிய பாக்கிய பலன்கேள்
நாட்டமொன்றில்லை வயது வீரைந்தில் நலமுடன் றந்தை யோகியுமாம் 55
அன்னிய மாதர் தந்தையின் சுகங்க ளன்றதில் மன்னர்கள் மகிழ்ச்சி
வின்னமொன்றில்லை தந்தையே யோகி விந்தையிற் பிரபலமுடையன்
தன்னியனாகும் திரிபுரத்தகனன் தாட்களை நாளு மதுகிப்போன்
முன்னமே பூர்வமிலை சுயராச்சியந்தா னுறஞ்சுக மாலயம் நிலையே. 56
காமாதி பலன்கேள் வித்தையால் பூமிகருதிய மித்திரர் தன்னால்
வாமமில்லாத விர்த்தியால் பெண்ணால்வரும் ஜீவனங்களே மேலாம்
தர்மசிந்தனையில் பேதைமையுடையன் தலமதில் வஞ்சக வெண்ணம்
துர்மன்னர் சேர்க்கை சகோதரப்பீடை துர்க்கவான் கலகனென்பதுவே. 57
இலா பாதிப்பலன் கேளரசரால் வடக்கு நாடிய திசைதனில் லாபம்
மேலாகுந் தொழில்கள் விர்த்தியா முலகில் மூத்தவர் பிறந்துமே நசிப்பார்
சோலையின் நிலையாய்க் குடும்பத்தில் பகையாம் கொடியலாபத்தினைப்பற்றி
மேலாகும் நட்போ ரினத்தினால் விரையம் மிகுந்திடும் பகையிதுவாமே. 58
விரையாதி பலனோ மன்னரால் விரையம் வீடது வடப்பக்கம் வழக்காம்
நிறையொடு கிழக்கு திசைதனில் பூமி நிலைப்பதுமதில் விவகாரம்
தரைமிசை கர்மியென்பது நிலையாம் தரணியிற் கலகனாயிருப்பன்

குறைவதாச் சாரந்தனில் மிகப்பேதங்கொள்வது மின்னிலைப் பலனே. 59

*ரிடப மிரண்டாமோரை பலன் முற்றிற்று*

* * *

## ரிடப மூன்றா மோரையின் பலன்

காணலா மிடபத்தின் மூன்றா மோரைக்
கணிதமுடன் ஜனித்தோர்க்கு வீதிசொல்வோம்
பூணலாம் தென்வடவாய் மேல்முகப்பு
புரிவாக ஜலகங்கை யெதிரில்தோன்றும்
வீணாகு மிருபக்க மனைகள்பாழாம்
மேதினியி லாதீன மொன்றேகூறும்
தோணுமது பூர்வமதை விட்டுநீங்கி
சுக்கிரற்கு வுச்சதிசைத் தோன்றிநிற்பர் 60
ஏறதனில் மூன்றாவ தோரைகேளாய்
எதிர்மனையில் கூபமிரு பிரிவாம்பூமி
நேரதாய் சந்தொன்று காலிமண்ணாம்
நிலைநாற்கா லிடமாகும் நேரிலாரல்
தீரமிகு பக்கமனை வடபால்விர்த்தி
சிறப்பில்லை பெண்விர்த்தித் தியங்கிநிற்பாள்
கூறுமனை தென்பக்கம் பிரிவுண்டாகிக்
குடும்பமது கலகமதாய் கோளுண்டாமே 61
அறிவதுகேள் பிறந்தவிடம் பூர்வமாகு
மதிகாரஞ் சுயராச்சிதமாம் வடகிழக்கில்
தெரிவதுகாண் தந்தைசகோ தரமேயாறு
சிறந்தவிர்த்தி நான்கென்றுத் திரமையோது
திரிதியமாம் தந்தைக்குத் தந்தையாகும்
சேர்ந்தபிதுர் வர்க்கமெனத் திறங்கண்டோது
புரிவதுகா ணிப்பலன்கள் நிலையேயாகிற்
பூரணமா யிக்கனிதம் பொருந்துமாமே. 62

### வேறு

பொருந்திய லக்கினம் பலமதாமாயுள்

பொருந்தவே யாண்டொன்றில் கண்டம்
திருந்திய சுபர்களாக்ஷி யாயிடினும்
திறமிலை மூன்றினி லரிட்டம்
வருந்தனம் பிதுர்க்குவருங் கர்மஞ்செய்யான்
வலுவொடு சகோதரம் விர்த்தி
குருகிய சுபமாம்சகோ தரன்றன்னாற்
கூடிய தந்தை மாரகமே 63

**வேறு**

சந்திரன் செவ்வாயோடு சார்ந்திடநீசமாக
சந்திரனுரிவதாக சுக்கிர னிரட்டையாகில்
வந்திடும்ஜாதகற்கு வலுவில்லை யாயுள்தானும்
பந்தமாய்மாதாவோடு பற்றியக் கைலைசேர்வன் 64
சொல்லுவாய் திங்கள் நாலின் சிறந்திடும்பிதாவின்வர்க்கம்
வல்லப நால்வராகும் வலுவுள்ளக் கீர்த்திமானாம்
எல்லையில் வாகனங்க ளியல்புள வியாதியார்த்தல்
சொல்லவு முடியா மேன்மை சுகமதை யடைவர்தாமே 65
பாக்கிய மதனில்பானு பால்மதி யிருக்கத்தம்மை
வீக்கிய செவ்வாயாதல் விரும்பிய விருவர் தன்னை
நோக்கிடக் காரிதானும் நுவலுவோம் பலன்கள் கேளாய்
தூக்கியே கொடியேசுற்றி சுந்தரன் பிறப்பன்றானே. 66
பிறந்திடும் ஜாதகற்கு பெலன்மச்ச முகத்திலுண்டு
உறைந்திடுந் தாயினுக்கு வுதிரமாம் பெருக்குண்டாகும்
சறிந்தபி ரைந்துநாளில் ஜாதகன் மரணமென்று
அறிந்திட தரணிதன்னி லறைந்தனர் நந்திதேவே. 67

*ரிடப மூன்றாமோரை முற்றிற்று*

* * *

## ரிடப நான்கா மோரையின் பலன்

திரமுடன் விடையி னான்கெனு மோரை ஜெனித்திடிற் கீழ்மேலாம் வீதி
மரைவிலாச்சந்து வீடது தனியாய் வழி நடை குடியிருப்பன்றி
பரவியப் புழுதி மண்ணரு கினிலே பயிர்கிளை தழைத்த தவ்விடமாம்
உரமெனும் பூர்வ மில்லையாம் பூமி உருதிகாண் விர்தி யிவ்விதமே 68

விடைதனில் நான்காமோரையிற் பிறக்கில் வீடெதிர் மனையிரு பிரிவாம்
யிடைதனிற் கீழ்பால் தன்னிலுஞ் சந்து யிடரதாம் பாழ்மனை கீழ்பால்
திடமதின் மேல்பா லிருமனை விர்த்தி சிறந்திடு மொன்றதில் மேன்மை
கடற்போலச் செல்வம் தந்தை காலத்தில் கதித்திட யோகமாமென்றே 69
யோகமே பிதுரின் தந்தை காலத்தி லுடன் விர்த்தியைந் தினில் மூன்று
பாகவான் மேன்மை யிருபாகம் விர்த்தி பலமென வோதுவர் நிஜமே
யோகவான்றந்தை விலகியே யிருவ ரொன்றதில் மேன்மை காண் செல்வன்
தோகையர் பாகம் தன்னையே யடுத்து சுகமனுபவிப்ப னென்றோதே 70
வருகுவு தன்னை சுகமெவ்வா றென்னில் வலுவொடு பிதுராகி மூவர்
தருவது சுகங்களில்லை காண்விருத்தி சார்ந்திடும் நிலையதிலிரண்டு
பெருகிய வம்மானதி லிருவிர்த்திப் பெலமொடு வாதீனபேதம்
உருகியசுகங்கள் பூமியும் விரைய முற்றிடும் பலனென வோதே. 71
இதுநிலையாகி லிடப நாலாங்கா லின்பமாய் ஜனித்தவராகும்
கதியொடு தேகம் நிறஞ்சி கப்புளதாம் கதித்திடா தேகமேயுளதாம்
பதிதனிலா யுளருப தல்லாது பலமொடோ ர ாண்டெனு மோதும்
நிதியெலாம் விரையந் தந்தையின் சுகங்கள் நிலையில்லை விரையமென்பதுவே. 72
மனமுடனறிய தனத்தினோன் சரத்துள் மருவியே வருகுவாரதற்கு
இனமுடன் வித்தையிரு விதப்பலன் காளிடரதா மினிய நல்வாக்கு
தனமது குறைவாய். பாபிகள் சகிதம் சஞ்சலக் குடும்பமே கலகம்
இனமதிற் களத்திர வர்க்கமே பகையா மிடர்பிணி சஞ்சலமாமே. 73
வலுவொடு தனத்தோன் சத்தியவாக்கு வருஞ்சுகம் வாலிபத்தப்பால்
பலன்புவிவிர்த்தி சேர்க்கையான் மித்திரர் பலத்தினால் சுகம் பின்னாலுண்டாம்
கலைமதி பார்வைக்குடும்பத்தோன் சகிதம் கணிதம்கேள் மன்னனேசௌக்யம்
பெலமொடு சமன்காண் விர்த்தியன் றொழில்கள் பேசுவரிந் நிலைப்பலனே. 74

## வேறு

தேரியே மூன்றாம்பாகஞ் செய்கைகேள் சகோதரங்கள்
பாரினில் பெண்பால் விர்த்தி பலன்விர்த்தி நான்கிற்பாதி
தேரியே நிற்குமாண்கள் சிறப்பில்லை சட்துரு நாசம்
கூறினரிவ் வாறாகக் குணமில்லை யின்னங்கேளே 75
வலுத்திடும் நான்காமாதி வருமுயத்தோர்பார்வை
பெலத்துடனிருக்கவன்னை பெரும்விர்த்தி யாயுள் தீர்க்கும்

சலித்திட விருந்தே யன்னை தாழ்வது யிருபத்தெட்டில்
தலத்தினில் மரணமுப்பான் சார்ந்திடு மாண்டொன்றாமே. 76

## வேறு

அன்புடனைந்தாம் பாகத்தின் பலன்கேளம்மான் களைந்ததில் மூன்று
இன்பமாயொன்று விர்த்தியு மேன்மை யிடுக்கணே மற்றபேர்களென்க
துன்பமொன் றில்லைபுத்திர விர்த்தி சூழ்ந்திடு மெட்டினிலைந்து
அன்பொடு விரத்தியதி லொரு பெண் காணமர்ந்திடும் பலனென வோதே. 77
ஆறாகுமிடத்தின் பலனெவ்வா றென்னிலறிவது சத்துருநாசம்
தூறாகும்பூமி ருத்தினால் விரையம்சொல்வது ரோகமேயுடையன்
தேறாதரோகம் பிருகு காரகமே சேர்ந்திடும் பிணியினாற் றுன்பம்
மாறாது முப்பானேழினுக் கப்பால் வரும்பிணி மாரகவென்றே. 78

## வேறு

ஆறாகு மிடத்திலே தானமர்ந்துமே வியாழனிற்க
தேறாத ரோகமெவ்வாறு தெரிப்பட வேண்டுமையா
தூறாகு முச்சிதன்னில் தோன்றிடச் சம்மந்தானும்
சீறாகுந் தோளின் பக்கம் சிறுத்துமே பல்லொன்றீனம். 79
இவ்விதப் பலன்கள் தாமுமிருந்திட வின்னஞ்சொல்வோம்
கவ்விய நான்காமாண்டில் கடிந்திடும் சர்ப்பந்தானும்
செவ்விய பிதாவினுக்குச் செய்தொழில் மேன்மையுண்டாம்
ஒவ்விய குணத்தினாலே வுயர்மனை யுண்டாம்பாரே. 80

## வேறு

சத்தமப் பலன்கேள் ஜாதகன் றனக்கு தாரமே யுபயமதாகும்
சித்தியா முபயதாரத்தில் புத்திராள் சிறந்திட நிலையெனச் சொல்லும்
விர்த்தியா மெனறீறதில் முதற்றாரம் விரும்பிய திசைதனைச் சொல்லும்
பத்தியாய் முன்னால் பாறினிற்றென்கீழ்பலன் விர்த்திகன்னி பார்வையுமே. 81
நிலையெனச் சொல்லும் அதில் விர்த்தி மூன்று நிலை வீதிதென் வடலாகும்
கலைமதிக் கேழா மதியின் பார்வை கலந்திடப் பின்தார மிதற்கு
தலைமை காண்வீதி தென்வடல் கீழ்மேற் சந்துள வீதியு முளதாம்
பலமுள்ள குடும்பம் விர்த்தி மூன்றுளது பற்றிய செல்வம் பேதமுமே 82
முன்சுகமில்லை மத்தியிற் சுகமாம் மேவீயப் பலனதைச் சொல்லும்
பின்சுகம் பேதமாதீனங் கலகம் பேசுவர்க் குடும்ப மிரண்டுளது
தன்சுகங்கள்க ளத்திரவர்க்கத்திற் புத்திராள் தாழ்வது வாகுமென்றறைவாய்

வன்சுகம்பூமி குணத்தினால் மாறும் வருகுமிப்பலனெனச் சொல்லும் 83
அட்டமப்பலன்கேளாயுள் தீர்க்கமதாமாண்டைந்திற் கண்டரோகமுமாம்
கிட்டியப்பலனைக்கொடுத்திடு மென்கக்கேடெல்லாம் விர்த்தியா மென்பார்
நட்டமிலாத மன்னவர்க் கேந்திரம் நலமுடனிற்பறே யாகில்
துட்டர்கள் சேர்கையில்லை காண் விர்த்திசூழ் மந்திரியூகியா மென்னே. 84
பாக்கிய பலன்கேள் தந்தை காலத்திற் பற்றியச் செல்வீக மெல்லாம்
நீக்கியே விரையமே மைந்தினிற் கண்டம் நின்றிடும் பத்தில் பாரகமே
தேக்கியக் குடும்ப மன்னையால் விர்த்தி சொல்வது நிலைசுயராச்சிதம்போல்
பாக்கியமில்லை விரைய மேபூர்வப் பலனில்லை தலபேதம் நட்பே. 85
ஜாதகர்வயது பத்தினுக்கப்பால் தருமெட்டில் தவராமல் செய்யும்
நீதியா யிருபத்தைந்தி லோர்பேதம் நிலையிரண்டிட மதில்மாரல்
ஓதியமனையை விட்டு தென்மேற்கு ஓடுவனிரண்டங் காணும்
பேதியா முப்பானான் பின்னிலைக்கும் பெலமொடு விர்த்தியாம் சொல்லே. 86

**வேறு**

பலமொடு பத்தாமாதி பற்றிய நிலைகள் கேளாய்
தலமதில் பூமியாலும் சார்ந்ததி காரத்தாலும்
குலமதில் விர்த்தி மத்தியம் குணமது வியாபாரத்தால்
விலகிலாப் பலனுமேன்மை விளங்கியே யிருப்பராமே. 87

**வேறு**

லாபாதி பலன்கேளதில் சுபலாபம் நலமில்லை மத்தியப் பலனாம்
மேலாகு மத்தியந் தன்னிலே கீர்த்தி மிகுந்திடும் சுகமெனலாகும்
தூலமிப் பலன்காண் பூமிவிர்த்தியினால் சொல்வதின் னிலைபலாபலன்கள்
சீலமாம் லாபங் கொடுத்திடும் விர்த்தி சிறந்திட்டபின் சுகமென்றே. 88

**வேறு**

வருந்தும் விரையப் பலன்கேளாய் வாழுமிரண்டு மனையுளதாம்
திருந்தும் செல்வ மந்தியத்திற் சிறந்தே யிருக்கும் திறமையென்க
அருந்து மோக்ஷஜாதகன் காணறிதல் கீர்த்தி சுபவிரையம்
பொருந்தும் செல்வமேலாகப் பூமிநட்பால் பலனாமே. 89

*ரிஷப லக்கினப் பலன் நான்கு*

*ஓரைக்கும் செய்யுள் – 89*

*முற்றிற்று*



# மிதுனோதயம்

மிதுனமே வுதயமாகில் மேற்கது கிழக்குவீதி
ததிபெறும் கிழக்குவீடு தடாகமும் கிட்டவுண்டு
பதிபெறு மரசு தென்மேல் பாற்குளம் வடக்குதிக்கிற்
சதிருடனிருக்குமென்று சாற்றினார் நந்திதேவர் 1

## மிதுனத்தில் பாவாதிபர்கள் நின்ற பலன்

சிறப்புடனே மிதுனமது ஜனன மாக
திறமையொடு ஜன்மாதி யாக்ஷிகேந்திரம்
சிறப்புடனே நின்றதினால் பலன்கேள் மன்னா
தேகமது சுகமுள்ளான் செல்வமுள்ளான்
குறிப்புடனே தனாதிபதி கேந்திரத்திற்
குணமுள்ள வன்னைசுகங் குடும்பவிர்த்தில்
தெரிப்புடைய வளர் மதிக்குச் செல்வமுண்டாம்
தேய்மதிக்குப் பொருள்விரயம் செல்வந்தாழ்வே 2
திரமுடைய மூன்றாதி பகையாய்நிற்க
சீர்சகோதர மிரண்டு பெண்ணொன்றாகும்
மறப்பில்லைகா ணான்காதி யாக்ஷிகேந்திரம்
வலுவாகி லன்னைசுகம் வாகனாதி
திறப்படு மைந்தாதிபதி மிதுனந்தன்னில்
சிறந்தநட்பு வுடனேதா னெழிலாய் நிற்கக்
குறைபடா வித்தையம்மான் வர்க்கமேலாம்
கொடுமையா மிப்புவியிற் புத்திரவீனம். 3

### வேறு

குறிப்புடனாறா மாதியேசெவ்வாய் கூறுமியாழ் தனில்நட்பாய்
சிறப்புடன் நிற்கப்பாலாற்கு ரோகம் சிறந்திடும் குணத்தினால்பூமி
குறைபடுஞ்சுகமே மாறுமென் றுரைப்பர் குணமில்லை சகோதரநாசம்
குறைபடாதேழா மாதியே மிதுனம் குணமுடனுறில் பலனுரைப்போம். 4

### வேறு

கண்டமிதுன மதில்தானே கனகனிற்கக் களத்திரத்தால்
கொண்டவிரயந் தாரமது கூறுமூன்று விர்த்தியொன்று
துண்ட மனைவிதன்னாலே சுகங்களற்ப மென்றோதும்
உண்டாமெட்டா மாதிசனி யுறில்தீர்க்காயு ளெனவுரையே. 5
நின்றபாக்கியத்ததிபன் நேராய்நீலன் கேந்திரத்தில்

கண்டீர்தந்தை சொத்தெல்லாம் கலகமன்னியர்க் காகுமல்லால்
தொண்டர்தமக்குச் சுபவிரயம் சூழுங்கோவில் தனில்விரயம்
பெண்டீர்தனக்கும் நோயுளதாம் பேதைநட்பன் கர்மாதி. 6
உண்டாமிதுன மதிவிருக்கில் யோதுமன்னியர் பூமிதனில்
உண்டாம் வழக்குயதிகாரி யுடன் மேற்பகையாம் விரயமது
தண்டார்லாபத் ததிபன்றான் சாந்துநட்பாய்க் குஜனிருக்கில்
பண்டேசுகமா மாரல்வட பாலில் வழக்கா மிருவர் பூமி 7
மிண்டிவிரும் பலதில்வழக்கு மேவுஞ்சுகந்தா னிலைமனைவி
அண்டவிரயத் தாதிபதி யசுரகுருவே யதிலிருக்கில்
முண்டிவழக்கே தானிடுவன் முற்றுஞ்சத்துரு விரயமென
மண்டைதனில் பயன்விதித்த மார்க்கத்துரைத்தார் நந்தீசர் 8

## வேறு

## ரவி நின்ற பலன்

இரவியே மிதுனராசியிலிருக்க யினியலக்கின மதுவாகில்
பரவியவிர்த்தி சகோதரமிரண்டு பலமுடன் விர்த்தி பெண்ணொன்றாம்
விரவியச்செல்வமுண்டு மாமனுக்கு விளங்கிய யோகமாமேழில்
திரவியம்பிதுர்க்கொன்றில்லைகாண்மிக்கச் சேயன்னை வழியினாற் செல்வன் 9

## மதி குசன் புதனின்ற பலன்

செல்வமா மதியேநிற்கில் சிறப்பில்லை யம்மான்வர்க்கம்
வல்லபம் சமனாந்தேகன் மன்னவர் நட்புளோனாம்
கல்லலே யில்லையுந்திக் கணிதமேகற்பன் யோகன்
சொல்லெலா மிருதுவாகும் சுகமுள்ள வாகனத்தன் 10

## வியாழ நின்ற பலன்

ஜனனமா மிதுனந்தன்னில் சார்ந்தநற் குருவேநிற்கில்
தன்மவா னதிகாரங்கள் சார்ந்திட வித்தையுண்டாம்
கன்மாதி யானதாலே களத்திரவர்க்கத் தோடம்
தின்மையொன்றில்லை சுக்கிரன் சூழ்ந்துஜன்மத்தின் நின்றால் 11

## சுக்கிரன் சனி நின்ற பலன்

வன்மையா மல்மான்வர்க்கம் வரும்பகைக் களத்திரமுண்டாம்
துன்பமாம் புத்திரதோஷம் செய்துமே யந்தியத்தில்
கன்மமே புரியவேகன் கன்னியுமூன்றே யாகும்
வன்மையாய் நீலனின்றால் வருந்துயர்ப் பூர்வம்போமே. 12
போவது மெய்தான்தேவே புந்தியின்வீட்டில் நீலன்

மேவியேநிற்க தோஷம் விபரங்க ளெவ்வாறு சொல்லும்
தாவிய வட்டமாதி சார்ந்ததால் விரயமுண்டாம்
பாவியே கேந்திரம்பார்க்கப் பலன்தீர்க்க மாயுளென்னே. 13

## மிதுன முதலோரையின் பலன்

விரும்பியதோர் மிதுனமதில் முதலோரைக்கு
மேதினியில் வீதியது கீழ்மேலாகும்
குரிப்புடனே வடமுகப்பு வெதிரில்விர்த்தி
கூறுவது யிருபக்க மனையுஞ்செல்வம்
தறிப்பாக வடப்பக்கங் கங்கையுண்டாந்
தரணிதனில் தழைத்தசெடி மரங்கள் நிற்கும்
சிறப்புடனே யன்னைவர்ங்கந் தன்னில் பூமி
சிறந்திருக்கு மெனச்சொல்வர் திறமையீதே. 14

### வேறு

தீரமாய்மிதுனந்தனில் முதலோரை ஜனித்திடில் பலனதைக்கேளாய்
தூரமாம்வீதிக் கீழ்மேலாம்தென்பால் சுதனன்னை மனைதனில் ஜனனம்
பாரமாகியதோர் மனையெதிரினிலே பாகமாய்த் திருதியமனையாம்
சேரவம்மனையி லொருமனைச் செல்வம் சிறந்திடும் பெண்ணனுபவமே. 15
கூரவுங்வட மேற்றிசைதனிற் கோவில் குணமொடு குடும்பத்தில் கங்கை
கூரியகங்கை யதற்குப்பின்கீழ்பா லோர்சந்து வுறுதியாமருகில்
காரியின்பார்வை வியத்தினோன் பிருகுங் கலந்திடப் பாவியாய்வருவர்
தேரியதனாற் கீழ்பாகமிருவர்ச் சிறந்திடப் பெண்ணொருமனையே. 16
எதிரினில்வடபால் கீழ்த்திசையதனிலிரு பெண்ணினிலைகளெவ்விதத்தால்
பதிதனிலுரைக்கப் பலனதிற் சொல்வோம் பாலனே பாபிகள்நட்பு
நிதியெலாம் விரயஞ்செய்து பெண்ணாலே நிலையெனக்குடும்பத்தில்நிற்பன்
மதிபாபியோடுக் கூடியேயிருக்கில் வருமேல்பாற சந்தெனச்சொல்லே. 17
சொல்லுவதப்பாலோர் மனைவிர்த்தி சுகமுடனிருமனை தள்ளி
வெல்வதுசந்தா மதற்கருகினிலே விருக்ஷமும் வழிநடை மூன்றாம்
மெல்லியதருகே யிருஜல வாய்க்கால் விருப்பமாய் கூடியேயொன்றாய்
வல்லபமாக வருமிது நிலையேல் வழங்கிடு முதலோரை யென்றே. 18

### வேறு

தண்டது முதலோரைக்குச் சாற்றுவதொன்று கேளாய்
கண்டதில் நிறமோசெம்மைக் கருதுவன் குறியரூபன்

விண்டெனு மினியசொல்லன் வேந்தர்நட்புளனாங் கீர்த்தி
துண்டெனு மியோகமுள்ளன் சுதனில்லை யின்னங்கேளே. 19
சொல்லிய நிலைகளெல்லாம் சுகமில்லை விபரமாக
முல்லையி னிதழ்போறபேத்து முடிவுடனெடுத்துச் சொன்னால்
துல்லியமாகத் தோன்றும் சுகதுக்க விபரமீது
அல்லவெ யரசேகேளா யாயுளின் விபரமெல்லாம் 20
கல்லின்மீ தெழுத்தாமீதுக் கணிதமா மிதனையோத
மெல்லியாள் கிருபைதன்னால் விளங்கவே நிலையைச் சொல்வோம்
வல்லப மிதுனவோரை வந்தோறகாயுள் தீர்க்கம்
கொல்வது அறுபதல்லால் குணமூன்றான் டொன்றேயோதும் 21
ஓதிய வுபயசிந்தை யுடையவன் ஞானிநட்பன்
பேதிப்பன் பெண்கள்வார்த்தை பேசுதற்கொப்பான் மேலும்
ஆதியாய்ப் பூர்வந்தன்னை யடைந்திட வதிற்சுகங்கள்
கோதையர்க் கலகத்தாலே குடிநிலை பேதமாமே 22
யாழ்தனிற் பிறந்தாறாகி லதிர்பிதுர் பாட்டனேழு
தாழ்வதில் விர்த்திமூன்று தனியொன்று நிலையாமென்பர்
பாழ்பூர்வஞ் சுயராச்சியங்கள் பலனிரண் டடிமாய்நிற்கும்
வாழ்மனை துலைபாகத்தில் வருமாதி குடும்பமாமே 23
தந்தை காலத்தில்விர்த்தி சகோதர மைந்துண்டாகும்
விந்தையா யிரண்டுவிர்த்தி விளங்கிடுமொன்று செல்வம்
புந்தியின் விபரமீது பொருந்திய பாபிநட்பால்
வந்திடும் சகோதரங்கள் வலுவில்லை யென்றுகூறே 24
கூரிய நிலைகள் தந்தைக் குணமுடனிடங்கள் சொல்லும்
தேரியபாக்கியாதி யதற்குப்பின் விரயத்துள்ளோர்
பாரினில் சரங்களேறி பற்றியேயிருந்தால் பாலா
மீரியததனால்வீதி விளம்புவ னதனைக்கேளாய் 25
அறிவது பாட்டன்பூர்வ மாகிடுங் கீழ்மேல்வீதி
தெரிவது பிதுர்காலத்தில் சிறப்பிக்கும் வீதிமூன்று
பிரிவுள்ள வீதிதன்னில் பெலன்தென்பான் முகப்புவீடாம்
அறிவதிந் நிலைக்குமேல்பா லாலயமுண்டா மாதோ 26
ஆலய மிருக்குமன்னை யதனவிபரங்கள் கேளாய்
சாலவுந் தாயின்தந்தை சகோதர மிரண்டேவிர்த்தி
கோலமா மிரண்டுவம்மான் குறிப்பிடும் பெண்கள் மூன்று
தூலமிப்பலன்கள் தன்னை சொல்வது நான்கிற்றானே. 27

இன்பமாய் ஜாதகற்கு இன்னமும் பலன்கேள் மன்னா
துன்பமே யில்லைசெல்வம் சுகமுடன் கீர்த்தியோகம்
அன்பொடு மருண்டசிந்தை ஆலயம் செய்வன் விர்த்தி
தன்பொருள் தர்மத்துள்ளே சகலமும் விரையஞ்செய்வன் 28

வேறு

அடைவுடனே தனத்தாதி கேந்திரமேறில்
அதில்வித்தை விபரங்க ளறியக்கேளாய்
இடரில்லை யிருவித்தை யுடையச்செல்வன்
இன்பமொடு செல்வீக மிடரொன்றில்லான்
திடமதுகேள் தனமுடையன் யோகன்விர்த்தி
தேய்மதிக்குக் குடும்பத்தில் கலகனென்க
வுடன் குடும்பந் தனிலிருவர் பெண்ணாற்றுன்ப
முற்றுலகம் நிலையென்று வுறுதிகூறே. 29
பெருகியப் பெண்ணின் விபரம் யாதெனிலோ
பெருகு மாதர்க ளிருவருக்கும்
குருகியநட்பும் பேதமே யாகிக்
குணமிலை சஞ்சலப்பகையாம்
தெரிவதாமன்னை சுகமுடன் செல்விச்
சிறப்புடன் நற்குண முள்ளான்
அருளினில்மிக்கத் தனமுள்ளாள் தர்மி
அறிவுடன் யோகிய ருறவே 30
உணர்வொடு மூன்றாமதியின் பலன்கே
ளுற்ற வெய்யவ னுபயத்தில்
மனமுடன் கூடிநின்றிடில் விர்த்தி
மகிழ்சகோ தரமுள தேழாம்
குணமொன்று விர்த்தி பெண்ணிரண் டுளதாய்க்
கூறுவர் மற்றவர் விரயம்
துணைவர்கள் பாகமிலை யிவனேகன்
சொல்வ தின்னிலைப் பலனென்றே. 31
நான்காதிபலன் கேளன்னையே பிணியாம்
நலமில்லை வயது மீறேழில்
தீங்காதாங் கண்டம் நிவர்த்தியா மிருபான்
சேர்ந்திட மரணமங் குளது

தாங்கியவர்க்கம் சுகமில்லையேகன்
தலமதை நாடியே யிருப்பன்
பாங்குட னிஃதே பலனெனச்சொல்லும்
பாகம் நான்காதியின் பலனே. 32
அறியகேளரசே ஐந்தினுக் கைந்தோன்
அவர் சரமாதிப் பத்தியங்கள்
பிரியகே ளம்மானாதியிற் சுகங்கள்
பெலமில்லைப் பின்சுகஞ் சமனாம்
தெரியகேள் நிலவுக் கைந்தினைக் கொண்டு
திரத்தாதி கூடியே யிருக்கில்
உரியநற் பலன்கள் கீழ்மேலாம்வீதி
யுறுமனைத் தென் பக்கமாமே. 33
பாலனே கேளாய் பத்தினுக் கெட்டைப்
பாவர்கள் கூடியே பார்க்க
கீலமா யெதிரி லுளமனைக் கெடுதிக்
கீழ்ப்பாக மெதிரினில் சந்து
தூலமா யாரலங்குண்டா மருகில்
சொல்லுவது கங்கையுமுண்டாம்
சாலவிப் பலன்களனுபவ மாகச்
சாற்றுவாய் தரணியோர் தமக்கே 34
ஐந்தினுக்குடையோ ரதற்கேழுக் குடையோ
ராவுடன் கூடியே பார்க்க
முந்தியப் புத்திராள் பலனெலாங் கெடுதி
முறுஞ்சுகம் பெண்ணிரண்டுளது
வந்திடும் புத்திரன் வாலிபம் நீங்கி
வரிலே கன்விர்த்தி யேயாகும்
சொந்தமாய்க் கர்மபுத்திர னொருவன்
சுயராச்சிதம் நிலையெனப்படுமே. 35
ஆண்டிடு மாறாமாதியுங் கோண
மதில்சுபர் பார்வையின் பலன்கேள்
தூண்டியச் சத்துரு நாசம் செல்வீகன்
சுகஞ்சமம் குணங்கள் தானில்லை
நீண்ட வாறாதிக் காறினைப்பாவி

நீலன் பாபிகள் நட்பாய் நிற்கில்
வேண்டியச் சத்துருநாச மன்னவரால்
விளங்கும் செல்வீகமென்றுறையே 36
குருகிய வேழாமாதியின் பலன்கேள்
குணமுடன் களத்திர மேகம்
மருவியக்கோண மாகிடில் வீதி
வருவதுப் பிரிவுமுன் றுளது
தெரிவது கீழ்மேல் வீதியின் வடபால்
சிறந்திடு மனையது வாகிப்
பிரிவதுகுடும்ப மிரண்டுளதற்குப்
பெலமுள்ள நிலையெனப் படுமே. 37

வேறு

பன்னியப் பருவமங்கை பகர்சமன் ரூபமாகும்
மின்னிய தேககாந்தி மிகுத்திடும் புத்தியுள்ளாள்
உன்னிய வார்த்தைச் சொல்வாளுறுதியாம் தெய்வபக்தி
பின்னியப் பூமிபோன்றும் பெலமுட னடைவளாமே. 38
மேவியவட்டமாதி விளம்பியப் பலன்கள் கேளாய்
யேவிய தாயுள் தீர்க்க மெட்டினிற் கண்டமொன்று
தாவிய ஜலத்தினாலே சாற்றியக் கண்டஞ்சொல்வோம்
ஆவிகா ணாயுள்தீர்க்க மடைவது நிலைமையென்னே. 39

வேறு

உகந்த பாக்கியாதி பலனெவ்வாறெண்ணி
லுற்றிடுந் தந்தைக்கு வீரைந்தா மாண்டில்
மிகுந்த வேழில் பிதுர்க்குத் துன்மரணங்காட்டும்
மேவியதோர் பூர்வமது விரயங்காணிலையாம்
சுகந்ததனம் சுயராச்சியங்கள் நிலையதுகளுண்டாம்
சொல்வதுகாண் தரணிதனில் தந்தைசமனாதி
ஜகந்தனிலே மிகப்பகையா மனதுதனில் துன்பந்
தடையில்லா தனுபவிப்பான் சாற்றுவாயே. 40

வேறு

பத்தினால் பலன்கேள் விர்த்தி பூமியினால் பலன்தொழில் வியாபாரமதனால்
சித்தியாம் தொழில் களன்னியதேசம் சிறத்துடன் போய் வியாபாரம்
யுக்தியால் மேன்மை யடைவது கீர்த்தி யுணர்வொடு சௌக்கியமென்க

பத்தியாய்த் தெய்வமூல மாய்ச்செல்வன் பகருவாயோகவா னென்றே 41
விரும்பியலாபப் பலனெவ்வாறென்னில் விளங்கியப் பூமியாற் பலனாம்
வருந்தொழில் நெட்டு விர்த்தியாலரசர் வழுத்திய நிலையதாம் பலனே
வரும்பொன்னன்பாவிப் பார்வைக ளிருந்தும் வருந்தொழில் விர்த்தியாமென்க
தரும் சுகங் கிழக்கு வடமேற்கு திசையில் சாற்றியலாபமாம் சொல்லே. 42
வியமதின் பலன்கே ளிருமனையுண்டாம் விரும்பியதொரு மனை விர்த்தி
நயமுடன் பூமிக் கட்டட மொன்று நலமொடு விர்த்தியாமென்க
ஐயமுடன் பூமி யன்னியர் தலத்தில் சிறந்திடும் வடகிழக்கதிலே
பயமிலையென்க மாலயத்தருகில் படமுடனிலை யெனப்படுமே. 43

*மிதுன முதலோரை முற்றிற்று*

✲ ✲ ✲

## மிதுன மிரண்டா மோரையின் பலன்

கண்டீர் மிதுன மதிலிரண்டாங் காலின்வீதித் தென்வடலாம்
உண்டாங் கிழக்குத் திசைமுகப்பா முறுதி யெதிரில் சந்துண்டாம்
கொண்டவிரண்டுப் பக்கமதில் கூறும் மனைகள் விர்த்தியதாம்
சென்ற வாதீனங்களிலே திரமாயிரண்டு பாகமதே. 44
சிறந்தமிதுன மிரண்டாங்கால் திறமைகிழக்கு முகப்புளதாம்
நிறைந்தமனைக்கு யெதிர்பக்கம் நேராய்ச்சந்து மங்குண்டாம்
பிறந்தபாலன் மனைக்கருகே பெலமாம் வடபாலிமனையாம்
சிறந்த செல்வம் தென்பக்கம் சேருஞ்சுயராச்சிதம் பெண்ணிலையாம் 45
இருந்துப்பெண்ணின் குடும்பமதி லிருவர்பாக மதிலுண்டாம்
திருந்தும் பிறந்த மனையிருவர் சிறந்தேயிருப்பா ரெனசொல்லும்
பொருந்துமனைக ளிருபாகம் பூமி யொருவ னனுபவமாய்
அறிந்தயிவ்வா ராக்ஷியுச்ச மமர்ந்த கோளால்பலன் சொல்லே. 46
சோதிக்கத்தந்தை சகோதரமாறு சொல்லியதொன்று பலயீனம்
ஆதியிற்பாட்டன்வர்க்கமே யிரண்டுவதிலொன்று நிலையெனப்படுமே
நீதிகாண் தந்தை வர்க்கமேபூர்வம் நெறியோடு நிலையிரண்டுளதாம்
ஓதியப்பூர்வம் நிலையான்றுவிர்த்தி யுறுஞ்சுனமன்னையில் மூன்றே. 47
மூன்றதிலிரண்டு விர்த்தியும் தந்தை முறுமாம னேகனேயாகும்
உணர்வொடுசெல்வம் தீதெனலாகும் உற்றிடு மனையதேயீனம்
தனமதுமாமன் வர்க்கத்தில்விரயம் சார்ந்திடும் பாபிகள்பார்வை
கனமுடனிருக்க வீதி கீழ்மேலாய்க் கதித்திடும் வடமுகப்பென்றே. 48

கூறியஜனன மாகிடிலதற்கு குணமுடனாயுள்கா னொன்றில்
தேரியக்கண்ட மாண்டிரண்டதனில் சிறந்தமாரக மெனவோதும்
ஏறிய தந்தைவர்க்கத்தில் கர்ம மினிதென வான்டொன்றில்செய்யும்
மூரிய மனையு மிருபாகக்கலகம் முற்றிடும்பலனென வோதே. 49

***மிதுன மிரண்டா மோரையின் பலன் முற்றிற்று***

* * *

## மிதுன மூன்றா மோரையின் பலன்

யாழதின் மூன்றா மோரையின் பலன்கேளதில் வீதிப் பிரிவுமூன்றுளதாம்
பாழிலை வடக்கு முகப்பதாமெதிரில் பலனில்லை யருகினில்விர்த்தி
தாழ்விலையிரண்டு கட்டடமாகும் தரணியில்விர்த்தி பூர்வீகம்
தாழ்விலைசெல்வம்சுயராச்சிதமேன்மை தனியைநல்யோக்கியமே பெறுவன் 50
கண்டிடமிதுன மூன்றாவதோரைக் கருதுவன் வடமுகப் புளதாம்
உண்டெனுமெதிரி லிருமனையாமொன்று றுதிகாண் பெண்ணலை யென்பார்
துண்டெனுங் கீழ்பாலொருமனை தள்ளிச்சொல்லுவாய் கீழ்ப்பக்கம்சந்து
மிண்டியமேல்பா லிருபாகமொருவர் விரும்பியமனை வழக்காமே. 51
வழக்கத்தில்தென்கீ ழாரலாங்கலகம் வந்திடுமதிற்சந்து முளதாய்ப்
பழக்கமாமதனை யாரலால் மாரல் பற்றியவியாஜ்ஜிய மோது
தழைத்திடுமாதிப் பூர்வமேபேதம் சஞ்சலப்பூமியாமோதும்
பிழையில்லை சுயராச்சித பூமியேநிலையாய் பேதகமுன்னிலைப்பலனே. 52
தரும்சுகம் தந்தை வாக்காதியைந்து சஞ்சலவிர்தியே மூனடறாம்
பெரும் பலன்றந்தை காலத்திலேகன் பெலனெனவாதீன பேதம்
வருஞ்சுகமம்மான்வர்க்க மேயிரண்டு வர்க்கமும் தோஷமேயாகும்
அருஞ்சுக மம்மான் சுகமில்லை யன்னை அறிவது சுகமெனப்படுமே. 53
அன்னையின்வர்க்க மாதீனமதனி லடர்வீதிகிழக்கு மேற்காகும்
வின்னமாந்தென்மேற் றிசைதனில் கோவில் விளங்கிடும் வடமேற்கில்கங்கை
உன்னிய சுகங்கள் முன்னிலைவிர்த்தி யுற்றவாதீனங்கள் பேதம்
கன்னியர்நட்பால் தலமதுமாறுங் கருதுவரிந்நிலைப் பலனே. 54

### வேறு

நவின்மிதுன மூன்றாவதோரை பலன்கேளாய்
நாடியதோர் சமனுறுவம் நாட்டிற்பொது நிறத்தன்
புவிதனிலே யோகனிவன் பிறந்தைந்திற் செல்வன்
பெலன்றந்தை யேழதனில் பேதமதாங்கண்டம்
தவறியே யன்னையினால் விர்த்தியதிலுண்டாம்

தன்னியர்க்குத் தொழில்செய் தவனியிற்கலங்கி
கவலையதாய் மனதிகி லடைந்தீரொன்பான்மேல்
கவனிப்பான் றொழிலதனை கண்டறிவீர்தானே. 55

## வேறு

தொழில்தனைக்குறித்து குணத்தினால் மேன்மை
சுகத்தினை யடைவனென் றோது
பழியதாம்பூர்வ நிலையில்லை மூன்றுப்
பக்கத்தில் நிலைமனை யீனம்
பொழிவதுக்கடகம் துலைமிதுனந்தான்
பொருந்தியக் கட்டடம் நிலைமை
விழியதுமுப்ப னாண்டப்பால் விர்த்தி
விருப்பமாங் கட்டட மென்பாய் 56
சாய்ந்திடுந்தந்தை வர்க்கத்தால் பொருளும்
தன்மையாய் விரையமங்குளது
வாய்ந்திடும் தந்தை வர்க்கமே மூன்று
வருமதி லிரண்டுதான் விர்த்தி
சேர்ந்தவாதீனம் பேதமாய் மாறும்
சிறப்பில்லை யன்னியர் பாகம்
கூர்ந்திடுஞ் சுயராச்சிதம் புவிநிலையாகும்
கொள்வதின் னிலைப்பல னென்றே. 57
இலங்கியவாயு எறுபதோடல்லா
தீதிரண் டொன்றுமேயாகும்
துலங்கியச்செல்வ மிருபதல்லாதுச்
சொல்வது நான்கினின் மேலாய்
பலன்தொழிலபதினே ழாண்டினில் விர்த்தி
பகருவாய்ச்செல்வ மேன மேலாய்த்
துலங்கிய விர்த்தி மன்னர்கள் பேட்டி
சொலித்திடுமின்னமுங்கேளே. 58

## வேறு

காணும் தனாதி யால்பலன்கள் கருதும்வித்தை நடுவயதில்
பூணுமுதிர்ந்த வயதுதனில் பொருந்தும்வித்தை யிருவிதமாய்த்
தோணிமுறுதி வாக்குடையச் செல்வன் தர்ம சுகவிரயன்
வாணுக்கிருபை யுடையவனாம் வருமேசெல்வம் வாலிபத்தில் 59
பொருந்து மூன்றுள் மூன்றாதி பூமிதனக்கு மூன்றாதி

திருந்துமிவர்கடனைக் கொண்டும் சேர்ந்தச்சேயின் பலன்சொல்க
விரும்புமிளையோ ரைந்தாகும் மிக்க நிலையே மூன்றுளது
வருந்துமூன்று சகோதரத்துள் வருவானேக மென்பதுவே. 60
நாலாமாதி பலன்கேளாய் நலமாம்பூமி விர்த்தியுளன்
மேலாமியோகன் வாகனத்தன் மிகுந்தசெல்வன் பிதுர்மேலாய்
பாலனன்னைச் சுகமல்லால் பற்றுமம்மான் சுகமில்லை
போலாம் யோகமம்மானோ பொருந்தான் சத்துருப்புவியிலென்னே. 61

வேறு

ஆகியவறா மாதியின் பலன்கே ளவர்திரராசியின் பார்வை
யோகியர் நட்பாம் சத்துருவீனம முந்தியில் ரோகமே யுளனாம்
மேவியதந்தை வர்க்கத்தில் பகையாம் விரும்பியக்குய்யத்திலரோகம்
தாவியருணங்க ளுண்டுபின்மாறும் தலமதில் பலனிதுவாமே. 62
சூடியதேழா மாதியின் பலன்கேள் சொல்வது தாரமே யோகம்
நீடியபுந்தி திசைதனில் களத்திரம் நேர்தரு கிழக்கு மேற்காகும்
வாடியவடபால் மனையதிலிருவர் வர்க்கத்தில் சகோதரமூன்று
தேடியவ்வாறு நிலைதனிற்களத்திரம் சேர்ந்திடுமிரு பதின்மூன்றே. 63
ஆண்டிடுமாயுள் பத்தினிற்கண்டமது நீங்கிவாறிரண்டதனில்
மூண்டிடுமாயுள் எறுபதோடைந்தா முடிவினில் மாரகமிதற்கு
தூண்டிடும்ரோகங் குய்யத்திற்பிணியாம் துன்பிலையுட னிவர்த்தியுமாம்
மாண்டிடுங்கண்டம் சுரத்தினாலென்று வழுத்தினர் நந்திநற்றேவே. 64
பாக்கிப்பலன்கேள் தந்தைகாலத்தில் பற்றிய சுகமெலாங் கெடுதி
நீங்கியசுகங்கள் கயராச்சிதமதனால் நிலையெனவோதுவரச்செல்வம்
தேக்கியச்செல்வ மாதீனபேதம சுயார்ச்சிதநிலைதனில் விர்த்தி
சேர்க்கையாந் தர்மசிந்தையுமுளனாம் சிவாலயமுடித்திட வல்லன். 65
பலமுடன்பத்தா மாதியின்பலன்கேள் பற்றிய ஜீவனமறிதல்
நிலமொடுத்தொழில்கள் வியாபாரமதனால் நிலபேதமுளதொழில் விர்த்தி
துலைதூரமதனி லன்னியதேசஞ் சூழ்ந்திடுந் தொழிலினாலாபம்
பெலமொடுமுப்பா னோடொருவொன்பான் பெருகிய விர்த்தி பூமியுமே. 66
அறிவது பூமி விர்த்தியாமென்றீ ரதுவெவ்வா றடைவதுசொல்லும்
தெரிவதுகிருஷி மூலவர்க்கத்தால் தேறிய ஜீவனமாகும்
பிரிவது விர்த்தி சகோதரம்வேறாய் பேதமடைவதின்னிலையில்
குருகியப் பூமிக் கட்டடமொன்றுக் கொள்கைகா ணின்னிலைப்பலனே. 67
வரும்லாபபலன்கேள் மன்னனே மகிழ்ச்சிவருஞ்சுகம்வடமேற்குத்திசையில்
தருமதிலாபம் மரசர்கள் பேட்டித்தையலர் மனமகிழ்ச்சியுமாம்

பெரும்பலன் சுபமாம்யோகமேன் மேலும் பெலமுள்ள மண்மனையுண்டாம்
உரும்பொருள் விர்த்தி நாற்பதோடொன்றி லுறும்யோகமுஞ் சமனாமே. 68
விரயாதிபலன்கேள் நன்மனையுண்டாம் விரும்பிய வர்க்கத்தால் விரயம்
மறையவர் நட்பால் ஞானக்கேள்வியன்காண் மனதினில் சஞ்சலமுடையன்
குறைவிலாச்செல்வன் மன்னையால் விர்த்திக்குணமுடனாற்பதோடைந்தில்
முரியனல்லன்னை மாரகமாகு முடிவினில் மோக்ஷஜாதகனே. 69

*மிதுன மூன்றா மோரையின் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## மிதுன நான்கா மோரையின் பலன்

வருவதுயாழியின் நான்காவதோரை வரின்மூன்றுப் பிரிவுள்ளவீதி
திருவுளவீடு தென்பக்கமனையாந்திரமாரலெதிரினிற் றோன்றும்
குறுகியசந்து மெதிரினில்நிலமை கோவிலாலயமது மேற்காம்
அறிவதுவிரண்டு பக்கமுமனை கலாதீன பேதமாமென்றே. 70

### வேறு

தண்டதிலே நான்காவ தோரையாகில்
தனிமனையா மேற்கி லாலயமாங் கங்கை
உண்டதின் மேற்பக்கமொரு மனையேகாலி
யுடனருகில் சந்துண்டா மிருவர்பாகம்
கண்டிடலாங் கீழ்பக்க மூவர் பாகம்
கதித்திருவ ரதில் தனிமை கன்னி நட்பாம்
கொண்டகீழ் திசையிற் பொதுமனையு மொன்றுக்
கோள்பகைகள் சஞ்சலமாங் கூறுமன்னா 71
பலமுடன் பிதுரின் பிதுராதி ஐந்து
பலமொடு விர்த்தியில் மூன்று
நிலையொடு தந்தை சகோதரமேழு
நிலைவிர்த்தி மூன்றென லாகும்
பலனிதில் விர்த்தியன்னியர் நட்பும்
பற்றிய தாதீனம் பேதம்
தலமதில் விர்த்தியாகவே யிருப்பார்
தரைமிசை யின்னிலைப் பலனே. 72
சிறந்திடுந் தேக காந்தியு முடையன்
தெரிவது ரூபமே சமனாம்
பிறந்துட னன்னை வர்க்கத்தில் கர்மம்
பேதகந் தந்தை வர்க்கமுமாம்

சிறந்திடும் பூமிதன மெலாம் விரயம்
சிறப்பது மத்தியப் பலனாம்
அறிந்திடு மிவ்வாறாகவே யிருக்கில்
அறைதண்டு நான்கெனுங் காலே. 73
நிறையுமோ டாயுள்தீர்க்கமா மறுபான்
நிலையிரண் டாண்டினிற் கண்டம்
திறமுடன் தீர்க்கச்சொல் வீரமுள்ளன்
சிறந்திடு மாறாண்டுக் கப்பால்
குறைவில்லை பூமி தந்தைக்குச் சேருங்
குடும்பத்தில் சுபவிரய மாகும்
முறையொடு மேலான யோகமுங்கீர்த்தி
முற்றிலும் சுகமெனப் படுமே. 74
தன்பலனறிதல் தனாதி கேந்திரத்தில்
தருங்கர்ப்பப் பஞ்சமன் பார்க்கில்
மனதினிற்றெளிவு வாக்கினிற் சிறப்பாம்
வரும்வித்தை யிருவித மாகும்
கனமுளன் செல்வன் குடும்பத்தில் விர்த்திக்
கருதிய மன்னவர் சிநேகன்
இனமதில் நட்பன் இனியசத்துருக்க
ளிலையெனப் பகருமிவ் விதமே. 75
சறிந்திடுமூன்றா மாதியின் பலன்கேள்
சகோதர மூன்றுள ததனில்
குறைந்திடு மொன்று விர்த்தியிலிரண்டு
குறிப்பது பெண்ணிலை யென்பார்
மறைந்திடும் பகைஞர் சத்துருநாசம்
மதிக்கு மூன்றாதியால் பலன்சொல்
சிறந்திடும் சேய்க்கு மூன்றாதி தன்னால்
சேய் காரகங்களா லுரையே. 76
காணலாம்நான்கா மாதியின் பலன்கேள்
கருதுவ ருபயத்துள் ளுபயம்
ஊணவேபாபி நட்புளன் பார்வை
யுறுமன்னை வர்க்கமே தோஷம்
தோணவுமேக லதிலம்மான் விர்த்தி
சொல்லுவ தாதீன பேதம்

பூணல்காண் கீழ்மேல் வீதியாமருகில்
பொருந்திய சந்துண் டாலயமே. 77
தோண்டியவன்னைக் கண்டமேமுப்ப
துடனொரு வைந்தினுக் கப்பால்
தூண்டியக்கண்ட மிப்பலன் சுகங்கள்
சொல்வது ஜாதகன் வயதில்
மூண்டிடும்பூமி தொழில்விர்த்தி யதனால்
முற்றிலும் சுகமென வோதும்
தாண்டியப்பூமிக் கட்டடம் விர்த்தி
தருமிரு நிலையெனப் படுமே. 78

**வேறு**

வருந்துலைக்கே ழைந்திடமே திரராசியதனில்
வரும்பாவர் வீக்ஷண்ணியம் வந்திடலப் பலன்கேள்
பொருந்து மம்மான்வர்க்கமதில் தந்தைவர்க்கமிரண்டு
பொருந்துமொன்று தனியாகும் புதனுக்குப்பலனே
தருந்துலைக்குச் சுபர்பார்வை யுடனிருக்கப் பத்தில்
தனவிரயம் மன்னைவர்க்கம் தனபேதமாகும்
திருந்தியக் கேந்திரமதனில் காரிமாலிவர்கள்
சிறந்திருக்கப் பலன்றிறமை செப்புவரிவ் விதமே. 79

**வேறு**

ஆறாதிபலனோ சத்துருநாச மன்னியர் நட்புளனாகும்
தேறாது குணங்கள் நிலையில்லை ரோகந் திறமில்லை யிவ்விதப்பலனே
மாறாது பூர்வந் தன்னிலே சுகங்கள் வலுவுடன் பிதுராதிநட்பாய்
கூறியவிர்த்தி சுகமதாய்ச்செல்வங் கூறுவரின்னிலைப பலனே. 80
சத்தமபலன்கேள் களத்திரமிரண்டு தரணியிற்பிதுவர்க்க மதனில்
உத்தமக்களத்திரம் தென்வடல்வீதி யுணர்வுட னிருவிதமாகும்
சித்தியாந்தென்மேற் றிசைதனில்கோவில் சிறந்திடுங் களத்திரவீடு
உத்தியாமிதனி லிப்பலனென்று வோதுவரின்னிலைப் பலனே. 81
களத்திரவுருவஞ் சமனெனலாகுங் கன்னியர் பொதுநிற மென்க
உளத்தினில் தர்மசிந்தையுமுள்ளான் உற்றிடுங் குணமுளாளென்க
இளைத்திடுந்தேகம் வாக்குநல்லுறுதி யின்பமே செய்குவ ளிளையாள்
கிளைத்திடும் புத்திரான் சௌக்கியமுள்ளாள் கேந்திரக்கோண மிப்பலனே 82
எட்டாதிபலன்கேள் ஜாதகர்க்காயு ளெழிலறுபத்தது விரண்டாம்
கெட்டிடுமிரண்டைந் தேழினிற்கண்டம் கெடுதியேயில்லைகாணிதிலே

தொட்டவெட்டாதி யதற்கெட்டாமாதி சூழ்தற்கு கெட்டுக்கெட்டோன்
கட்டமாஞ்சக்கிர தசையினிலரிட்டங் காணுமென்றுறுதியா யுரையே. 83
பலமுடன் பாக்கியப்பலனதைக் கேளாய் பற்றியதந்தைக்குச் செல்வம்
சலமதில் விர்த்தி பிதுர்ச்சமனாதி சாற்றியப் பிதுர்பிரிவில்லை
பலமொடு தந்தைக் கண்டங்கள் கேளாய் பற்றிய ஜாதகன்றனக்கு
பெலமது முப்பத்தொன் பதிலரிட்டம் பேசுவதின் னிலைப்பலனே. 84

## வேறு

நான்காதி பாக்கியாதி நலமுடன் விரயமேறில்
பூன்கனே மாமனேகன் பொருந்தியத் தலமேபேதம்
வேன்க ஜாதகன்தன் வீட்டில் விரும்புவன் மேன்மையுண்டாம்
தோன்கவே பாக்கியாதி சொல்லுநற் பலனைக்கேளாய் 85
பிதுருவின் பிதாவாலான பெலன்குணம் தன்னையெல்லாம்
பிதுருவால் நிவர்த்தி செய்து பெலன்பூமி தனையடைவான்
விதியது ஜாதகற்கு விளங்கிடும் பத்தாண்டிற்குள்
பதிகளும் பலத்துப்பின்னால் பலன்றனை யடைவன்றானே. 86

## வேறு

ஓதியபத்தா மாதியின்பலன்கே ளுறுதியாந்தந்தையின் தொழிலே
பேதியாதிதற்கு மன்னர்கள் மகிழ்ச்சி பெலன்பூமி கிருஷிமூலத்தால்
ஆதியாம் பூர்வ நிலையொடுச் செல்வ மவனியிற்றந்தைக்கு மேலாய்
கியாதியையுடைய ஜாதகனென்றே கணித்தனரிப்பல னோதே. 87
நலந்தருமிலாபத் தாதியின் பலன்கேள் நன்மையாந்தனலாபமுண்டாம்
குலந்தனில் சிரேஷ்ட யோகவான்கீர்த்தி கொடுப்பதுலாபமே வடபால்
பலன்தருமிலாப் மிருபதில்யோகம் பற்றிய சுகமென வெந்தை
நலந்திகழ் நந்திநாதனேயுரைத்தார் நாட்டினில் தீங்கிலாதறைவாய் 88
விரும்பியவிரய பலனெவ்வாறென்னில் விருப்பமாய் மனையது விரண்டாம்
தரும்பலன் சுகவான் கீர்த்திநல்மோக்ஷம் சாற்றியமனை கட்டடங்கள்
வருஞ்சுகமன்னிய தேசசஞ்சாரம் வரும்நிலையாலயம் செல்லல்
பெரும்பலன்கீர்த்தி செல்வீகமேன்மை பெலனெனலாம் வாலிபத்தாமே. 89

***மிதுனலக்கின நான்கு ஒரைக்கும் செய்யுள் - 89***
***முன் லக்கினம் 1 - க்கு செய்யுள் - 89***
***ஆக மொத்தம் செய்யுள் - 178***
***மிதுன லக்கினப் பலன்***
***முற்றிற்று***

❀ ❀ ❀

## கடகோதயம்

கடக லக்கினமாயிந்துக் கடுகியோ ரைந்தில்நிற்க
திடமுடன் செவ்வாய்தானும் தெளிவுடன் மூன்றில்நிற்க
மடமயி லாளேதெற்கு வடக்குள வீதியாகும்
அடமுடன் மேற்குவாயில் அதுசந்துக்கடுத்தவீடே 1

### (கடகத்தில் பாவாதிகள் நின்ற பலன்)

நன்மைதரு நண்டினில் வளர்மதியு மாக்ஷி
நலமாகப் பிறந்தஜாதகன் பலனைக்கேளும்
திண்மையில்லை மன்னவர்கள் பேட்டியுண்டாம்
தேகமது சிவந்திருப்பன் செல்வன்கீர்த்தி
தர்மமுள்ளன் யோகியென்பார் தேய்மதிக்குத்
தனவிரயம் தாரசுகம் பேதத்துன்பம்
வின்னமில்லை யிரண்டாதி வெய்யோனிற்க
மேதினியில் ஜனித்தோன்றன் விபரங்கேளே. 2
அன்னியரால் பொருள்சேர்க்கை வாக்கிற்பேதம்
அடுத்தோரை பேதித்தே கலகஞ்செய்வன்
துன்னிய மூன்றாமாதி துணைவர்நாசம்
சொலுமொருபெண் விர்த்திநான் காதிநிற்க
மன்னர்பகை யுண்டன்னை தோஷமிக்க
மாறுசுக வீனமாதீனம் பேதம்
பன்னியவைந் தாதிபதி நிற்கப்புத்திரன்
பகர்தோஷ மினையோர்க ளரிட்டம்பின்னும் 3
ஆதீன பேதமதாங் களத்திரதோஷ
மாமன்னை வர்க்கமதில் தோஷமாகும்
மேதினியில் சுபர்பார்வை யாகில்விர்த்தி
விளங்கியதோ ரம்மானு மேகனாவான்
பாதியாமாறாதி நிற்கச்சத்துரு
பலபேர்க ளுண்டரிவை பகைவன்மிக்க
காதலால் யோகியரைக் கூடிநட்பால்
கனமாகுந் தலபேதம் திரிவன்றானே 4
காரியவல் லபன்சொன்ன வார்த்தைதப்பான்
கானகத்தி லன்னியமா யிருப்பான்றானும்
ஊரியவே ழாமாதி நிற்கத்தார

முபயமா மதுவீனங் குணபேதத்தன்
ஆருமன்னி யரைச்சேர்ந்து வதிகாரஞ்செய்
தாள்வனாங்கோபியெட்டா மாதிநிற்க
தேருமா யுள்தீர்க்கமில்லை களத்திரதோஷம்
செப்புவாய் கோள்கலகஞ் செய்வானாமே. 5
அடர்ந்துமே பாக்கியத்தோ னிற்கத்தந்தை
யதிகசுகம் பூர்வீகம் சத்துருக்கள்
துடர்ந்துபின் ஜயமாகும் நஷ்டமில்லை
தீதாகும் பத்தாமா தியுமேநிற்க
இடராகுந் தொழிலீனம் நலமேயார
லியல்விலாப் பெண்களினால் கலகமுண்டாம்
படர்துஷ்டர் செய்தொழிலே விர்த்தியாகும்
பகருவன் லாபத்தோன் பலனைக்கேளே. 6
துன்னியநற் களத்திரத்தால் மிக்கயோகம்
சொல்லுமதில் நஷ்டமென்ப தில்லையில்லை
கன்னியரால் பொருள்சேரும் விரயத்தோனுங்
கனகமுடன் கடகத்தில் நின்றானாகில்
இன்னிலத்தி லரிவையினால் கெடுதிமெத்த
வெழிலான பொருள்விரயம் சுகமுந்தாழ்வு
வின்னமதாந் தொழில்கெடுதி விகற்பமென்று
விளம்பினாற் நந்தீசர் வேந்தர்கோவே. 7

## இரவி நின்ற பலன்

ஆதித்தன் கடகமேறி யதுஜன்ம மாகவந்தால்
பேதித்துத் தலபேதத்துள் பிதுர்நிலை விட்டுநீங்கும்
சோதித்துப் பார்க்கில் மூன்றோன் றுணைவரே யற்பமென்க
வாதிக்க வேண்டாம்பாலா வலுத்தால்நல யோகவானே. 8

## மதி நின்ற பலன்

யோகவான் மதியேநின்றா லுடலதிற் பிணியொன்றில்லான்
விவேகவா னதிகாரங்கள் மேதினிதனிலே தர்மம்
சோகமில் லாமற் செய்வன் சுகமுளோன் யோகிநட்பன்
பாகமாம் பூமியெல்லாம் பலநாளு மாளவல்லோன். 9

## செவ்வாய் நின்ற பலன்

வல்லவ னைந்தாமாதி வருநில மகன்றானின்றால்

செல்வமும் பூர்வபேதம் சிறந்தகட் டடமுமீனம்
இல்லைகாண் புத்திரசோக மிருபெண்ணு மேகவானாம்
சொல்லுவ தம்மான்வர்க்கம் சுகமெலாமீனமாமே. 10

### புதன் நின்ற பலன்

இடரில்லை மூன்றாமாதி யினியபுந் தியுமேநண்டில்
திடமதாய் நிற்கச்செல்வன் சிறப்புடன் வாலிபத்தில்
வடதிசை தன்னில்செல்வம் வந்திடும்பூமிலாபம்
கடகமா மதனில்மன்னன் கருதியேநின்றால்கேளே. 11
குடையோக மதிகாரங்கள் கொடியோரை ஜயிப்பனென்க
கொடியிடை சிறந்தமெய்யன் குலவுமாந் தெய்வபக்தி
விடையுளோ னிற்பானாகில் மிக்கதோர் களத்திரசெல்வன்
தடைபடுஞ் சனியேநிற்கில சஞ்சல களத்திரனாமே. 12

## கடக முதலோரையின் பலன்

கண்டீர்கடக முதலோரைக் கருதும்வீதித் தென்வடலாம்
கொண்டபூர்வ மன்னையிடங் குறிப்பாய்க்கிழக்கு முகப்பாகும்
விண்டேபோகுமிருபக்கம் விளங்காததற்குக் கீழ்கங்கை
உண்டாமனையே பாழாகு மோதுமிவ்வாறு பலனாமே. 13

### வேறு

நண்டதில் முதலோரைக்கு நாடியப் பலன்கேளாய்
உண்டெனு மெதிரில்மன்னா வுளமனை யிரண்டுபாகம்
கண்டிடல் கங்கைதென்கீழ் கன்னியில் கோவிலுளைடாம்
துண்டதாம் வடபால்சந்து சூழ்ந்திடுமன்னைவீடே. 14

### வேறு

தக்கதந்தைப் பலன்கேளாய் தனிமையாகும் பிதாவினுக்கு
மிக்கதந்தைப் பிதுரிருவர் மேலாம்யோக முடையவர்காண்
தக்கதரணி தனில்கீர்த்தி தனமோடாயுள் தீர்க்கமுளன்
துக்கமில்லை போகமது சுகமேயடைவா னென்றோதும். 15
அன்னைவர்க்கத் தம்மானோ வறிதல்மூன்று பேராகும்
வின்னமில்லை யதிலொருவன் வேறாயிருப்ப னவன்றந்தை
பன்னுமிரண்டு விர்த்தியதாம் பகரும்பாபர் பார்வையுறில்
இன்னும் சுகங்களம்மான் களிடராயிருப்பா ரெனச்சொல்லே. 16
சொல்லும்வீதி தென்வடலாம் சூழுமருகில் சந்துண்டாம்

வெல்லும் தென்கீழாலயமாம் விரும்புமனையோ யிரண்டுளதாம்
நில்லும் குடும்பந்தனிற் சுகங்கள் நேருமத்திய சமபலனாம்
கல்லலுண்டா மிருபக்கம் கருதும்பலன்க ளிவ்விதமே. 17

வேறு

குறிப்பது கடகமுதலோரை ஜனிக்கில் குணமுடன் பாலகற்குப்பலன்கேள்
தெறிப்படும்பூர்வம் ஜாதகன்னிறமோ திறமையாய்ப் பொதுவெனவாகும்
நெறிப்பது நீண்ட வடிவமாம் உருவம் நீடியயோகமே யடைவன்
சிறப்பதுசெல்வம் வாலிபந்தன்னில் சேர்ந்திடுமியோமமாமென்றே. 18
தலமொடுதனாதி பலனெவ்வாறென்னில் சாற்றிடுமிருவித்தை யிளனாம்
பலமொடுகுடும்ப விர்த்தியாஞ்செல்வம் பற்றிய தன்னியபாஷை
விலகிய செல்வ மாதீனபேதம் விரும்பியமன்னவர் நட்பாம்
உலகினில்விர்த்தி யோகமே சமனென் றோதுவரின்னிலைப்பலனே. 19
திடமதுமூன்றா மாதியின் பலன்கேள் சிறந்திடும் சகோதர மூன்றாம்
இடமதில்விர்த்தி யிரண்டெனலாகும் விரும்புபெண் ணொன்றுதானிலமை
இடமதில் சத்துரு வில்லையேபாலா யினிகர்ணபூஷன முண்டாம்
உடனடிமைகளும் சேர்க்கையேயொன்று வுறுதிகானிவ்விதமோதே 20
நவில்வதுநான்கா மாதியின்பலன்கேள் நன்மனைகட்டட முண்டாம்
புவிதனில்பூமி வானகஞ்சிறப்பாம் புகழ் சுகவித்தையுமுளனாம்
தவறிடாதன்னை சார்ந்திருபத்தேழ் தன்னிலேமரணமுற்றிடுவாள்
கவலையாங்குடும்ப மதுமுதல்சமனாங் கவனிப்பாயிந்நிலைப்பலனே. 21

வேறு

குருகிய பஞ்சமாதி கோணகேந் திரத்தின்பார்வை
தருமதிலிரண்டு வம்மான்சகோதரம் விர்த்தியென்க
பெருகியப்பூர்வபேதம் பெலமுடன் சுயராச்சிதங்கள்
வருந்திர மரசேயம்மான் வரும்வீதி கீழ்மேலென்னே. 22
தாங்கியவீதிக் கீழ்மேல் தரைமிசைத் தென்பால்வீடு
ஓங்கியச்செல்வம் பின்னால் வோதுவர் சமனேயாகும்
நீங்கியமனையில்செல்வம் நிலையதாயிருப்பர்பாலா
ஆங்கிவர் சுகங்களெல்லா மாதியில் சௌக்கியமாமே. 23
சுகமுடன் ஜாதகற்கு சுதன்விர்த்தி யைந்துண்டாகும்
ஜகமதி லிரண்டுவிர்த்தி தலத்தினில்நிலையாமென்க
பகலவன் பாரோன்பார்வைப் பற்றியேயிருப்பாராகில்
மகவுண்டாம் விர்த்திமூன்று வரும்நிலையிரண்டா மென்னே. 24

### வேறு

பேசியவாறா மாதியின் பலன்கேள் பெலமொடு சத்ருவீனம்
வீசிய ருணங்க ளுண்டுபின்னிவர்த்தி வேந்தர்கள் பகையுளனாகும்
தாசிகள்நட்பு பொருள்விரயங்கள் சார்ந்திடும் பிணியினா லரிட்டம்
காசிலாரோகம் சலத்துவசாரத்தால் காட்டிடும் ரோகமாமென்னே. 25

### வேறு

உரியவேழா மாதிபலன் யோகதார மொன்றாகும்
பிரியமில்லாத் தாரமது பேசுமன்னை வழியதுவாம்
குரியவீதித் தென்வடலாய்க் கூடும்பிரிவு வீதியதாம்
தெரியநிறமோ கருமையதாம் சோந்தசுதனும் நிலையொன்றே 26
எட்டாமாதி பலன்கேளா யினியவாண் டைம்பதில்மரணம்
திட்டமாக மூன்றாது தீரம்பத்தும் பதினொன்றில்
கட்டமாகக்கண்டங்கள் கருதுமிதுவே ரிலையாகில்
துட்டமாய்க்கண்ட மைம்பதினில் துணிவாமரணம் தப்பாதே. 27

### வேறு

ஐந்தினுக் கைந்தாமாதி யதன்பலன் தந்தைக்காவாம்
விந்தையாய் முப்பானாண்டில் மிகுமரணங்கள் செய்யும்
சுந்தரமாகச் செல்வம் சுயராச்சித நிலைகளென்க
முந்தியப் பூர்வமில்லை முடிவுமிப் பலன்களோதே. 28
காரியத் தானத்தாதி கனகேந்திரத்தின் பார்வை
வீரிய மாகப்பூமி விர்த்தியால் ஜீவனங்கள்
பாரினிற்றொழிலோவிர்த்தி பற்றியச்செல்வமோங்கும்
மீறிய யோகங்கர்ம மிகுத்திடும்நான்கென் றோதே. 29

### வேறு

நன்மைதரும் லாபாதிபலன் றன்னைக்கேளாய்
நாடுநான் காதிபதி கவியாம் நற்பலன்கள்
தின்மையில்லை சுகஞ்செல்வம் வாலிபத்தில் கீர்த்தி
சிறந்தசுக மக்கினியின்றிக் கதணிலுண்டாம்
தன்மையோடு கீர்த்திசுகம் செல்வமதிலுண்டாந்
தருமனைக ளிரண்டிடத்தில் தன்மையுட னிலையாம்
உன்னியநன் மனைபூமி யன்னியருக்காகு
முறுஞ்சுகங்கள் வேறாகு முடிவுமிதுவாமே. 30

### வேறு

அரியதோர்வியத்தா னாதியின்பலன்கே ளன்னியர் தங்களால்விரயம்

தெரிவதுசயன சுகமிலான்மனைகள் சிறப்பில்லை கட்டடமழிவாம்
கரியகோள்முதல் கம்பாபிகள் பார்வைக் கலந்துடனிருக்க விப்பலன்கள்
புரிவதுதேச சஞ்சாரமேநட்பு பொருந்துமிப் பலனெனவோதே. 31

*கடக முதலோரையின் பலன் முற்றிற்று*

* * *

## கடக மிரண்டா மோரையின் பலன்

சிறந்திடும்கடக மிரண்டாவதோரை ஜனித்திடுங் கீழ்மேலாம் வீதி
பிறந்திடும்வீடு தென்முகப்பெதிரில் பெலமுள்ள மனைகளுமாகும்
வருந்தனம்விர்த்தி யிருபக்கமதனில் வலுவுள்ள மனைகளுமாகும்
அருந்தவத்தாலே பிறந்திடும்ஜனன மவனியில் பூர்வீகமென்னே. 32

**வேறு**

கடகமிரண்டா மோரைபலன் கருதுமெதிரி லிருபாகம்
திடமாஞ் செல்வம் வடமேற்கில் சிறந்த கோவிலாலயமாம்
வடமாயருகி லுள்ளமனை வலுவேயீன மிவ்விதங்காண்
இடமாமேற்கி லருகாக இனியகங்கை யென்றுறையே. 33

**வேறு**

பேதமில்லை கடகமதி லிரண்டாமோரைப்
பெலமுடைய ஜாதகன்காண் பெருமையீது
சேதமில்லை ஜாதகற்கு தேகந்தானும்
சிறந்தமா னிறங்காந்தி யுளனேயாகும்
நீதியாயரச னென்றே கீர்த்தியுள்ளன்
நீதியுடையன் தீர்க்காயுளன்றிமிக்க
வேதியர்கள் நட்புளனாங் கீர்த்தியோகன்
வேந்தர்பகை தனில்ஜயமாம் விபரமீதே. 34
வாக்குபலன் றனைக்கேளும்வித்தை பலவிதங்கள்
வலுவுடையச் செல்வன்காண் மனமகிழ்ச்சியுள்ளன்
நீக்கியகோணங் குடும்பமதி லிரவிநிற்கில்
நிலையில்லை காண்பாதிநாட் செல்வமென்க
சேர்க்கைமன்னர் நட்பாகும் சிறந்தசுகவீனம்
செய்கையது துறவிபோல் திறமையுள்ளோனென்க
பார்க்கவனால் குடும்பமது பேதங்களாகிப்
பாலனன்னிய தேசமதில் பாலன்றிரிவன்றானே. 35

### வேறு

இரவியால் பலன்கள்தானு மெந்தவாறென்று கேட்கி
லுரவியு முபயம்நின்று மியம்புதன் மனையைப்பார்க்கப்
பரவிய குருசேய்தம்மைப் பங்குபாதனுமேப் பார்த்தால்
மருவிய தந்தைமூன்று மதித்தவோ றாண்டில்மாள்வன். 36
பாக்கிய மதனில்பானு பண்டிதனிற்கத் தம்மை
நோக்கிடக் காரியேழில் நுவலுவதெவ்வாறு சொல்லும்
பாக்கிய முடையதந்தைப் பற்றியதனங்க ளுண்டாம்
நீக்கிடும் பாலன்றன்னை நிகழ்த்துவாய்க் குடும்பம்விட்டே, 37
குலைந்திடும் குடும்பம்விட்டுக் குணமுள்ள தனங்கள்நாசம்
அலைகுவா ரிடம்பேதித்து அன்னியர்தம்மைச் சேர்ந்து
மலைவுறாதே கேள்மன்னா மதித்திடான் மனைவிதன்னால்
விலைமது பானத்தாலே மேவுவன் சுகமில்லானே. 38

### வேறு

இருகுருவு மெதிரெதிரே நோக்குமாகி
லியம்புகிறேன் பிதாவின்வர்க்க மியல்பாய்க்கேளு
அருளுடைய பிதுர்வர்க்க மூன்றுதன்னி
லழிந்திடுவ னொருவனுமே யவத்தமாகிப்
பிரிந்திடுமே யொருவன்றான் பேதைதன்னால்
பெலன்குறைந்து பேதகமே யாவன்பாரு
வருந்துங்காண் தந்தைக்கு வறுமைமெத்த
வன்மைதன சுகமுண்டு வறைவாய்த்தானே. 39

### வேறு

பாரினில்மூன்றா மாதியின்பலன்கேள் மற்றியசகோதர னேகன்
வீரியமுள்ளோன் சத்துருநாச மிகுத்திடும் பூமியும் பொருளும்
தேரியமன்னர் வணங்கிடயோகன் செல்வன்காண் கீர்த்தியுமுள்ளான்
கூரியக்கர்ண பூஷணமுதலாய்க் கொடுத்திடு மாடைமேன்மையுமே. 40
நான்கினாற்பலன்கேள் ஜாதகன்றனக்கு நல்லமூன்றாண்டினி லன்னை
தீங்கில்லைகண்ட மைந்தில்மாரகமாந் திறமைகாண்பத் தனில் செல்வம்
தாங்கிய வதிகாரங்களேயுண்டாம் தையலர்ப்பகையுள னின்னம்
ஓங்கியப்பிதுர்க்கு நட்பில்லையன்னிய ருற்றிடம் நிலையிற் செல்வம். 41

### வேறு

வருவதுவாகனப் பலன்கள் வரும் வாகனங்கள்

வருமியோகி நட்புடையன் மன்னர்க்குமேலாய்த்
தரும்யோக மைந்துமுதல் செல்வீகமென்றுச்
சாற்றுவர்களிந்நிலையிற் றலமைந்திலோதும்
பெருமம்மான் வர்க்கமதில் சுகமிலைகாண் கெடுதி
பேசுவதம்மானால் பெரும்பகையே யுண்டாம்
தருமசிந்தை யுடையவன்காண் சத்ருவுக்குக்கர்மி
தர்மவா னென்றுரைப்பர் தருமிவ்வாறுபலனே. 42
ஐந்திடத்தாற் பலன்கேளாய் ஜாதகற்குவித்தை
யறிதல் பலவித்தைவரு மறியவதி காரம்
புந்தியுங் கேந்திரமாக வருவதிலைந்தோன்
பெருங்கோணம் பெறின் பலன்கள் பெலமுளனாம்புத்திரன்
கந்திரமாய்த் தான்பகைத்தே யிருப்பனைந்தா மாதிக்
கர்மத்தானாதிபதி யானதினாற் பலன்கள்
விந்தையதாய் மன்னவர்க்கு மன்னவராய் மேன்மை
மிகுந்தசுக மிப்படியா மேன்மைநந்தி வாக்கே. 43

வேறு

ஆறாதி பலன்கே ளதில்ருணம்யாவு மழிந்திடும் ரோகமேயில்லை
தேறாது சத்துரு பலனெல்லாம்நாசம் திங்களுக்காறாதி பலனே
கூராகும்புந்தி தனக்குமாறாதிக் கொடியவைந்தாதியும் பகையாய்
மாராதுவரு வாரானதினாலே மன்னுமிப்பலனென வோதே. 44
இடரிலாமேழா மாதியின்பலன்க ளேகதாரத்தினை யுடையண்
திடமதுகீழ்மேல் வீதிதென்பக்கம் தெரிவதுதார மந்நிலையில்
கடகமாந்திசையில் களத்திரனிலைமைக் கழறுவத்தில்மிக நன்மை
உடலுள்ளமட்டும் பகைக்கலங்க ளூற்றிடும்தாரமாம் தானே. 45
அட்டமபலன்கே ளாயுளின் விபர மறிவதுஜாதகன் றனக்கு
திட்டமாயெழுப துடனிரண்டதனிற் றிரமுள்ளமாரக மோதும்
இட்டமாய்ச்செல்ல மத்தியிற்கண்ட மிடரில்லையின்னமும்பலன்கள்
துட்டர்கள் சேர்க்கையுள்ளவனாகுந் துணிவு டனிப் பலனோதே. 46
கருதியவொன்பா னாதியின்பலன்கேள் கண்டிடும் பாக்கியவிர்த்தி
திரிதியமாதிப் பூர்வமேநாசம் சிறந்திடு மிந்நிலைப் பலனே
வருந்தந்தைதனக்கு மேலதாஞ் செல்வம் வருவது மிருபத்தேழதனில்
தருவதுகண்ட மாரகமென்றே தரும்பலனிவ்வித மாமே. 47
பன்னும் பத்தாதி பலனதைக்கேளாய் பத்தினிற் பாபரேயிருக்கில்

துன்னும்நல் லதிகாரம்மிகக்கல்வி செல்வமுண்டாவது மன்றி
மன்னுநற்குருவால்பார்வையேயாகில் மன்னரால் வருஞ்செல்வபூமி
தன்னினத்தொழிலாற்சவுக்கிய மென்று சாற்றினார்நந்திநற்றேவே. 48

நிறைந்திடும் லாபாதிபல னெவ்வா றென்னில்
நேரிழையால் பொருள்கூடும் நாட்டில் மேன்மை
குறைந்திடா யோகமது செல்வங் கீர்த்திக்
கூறுவதுசெல்வீகங் குணமும் லாபம்
மறைந்திடா யோகமது வியாபாரத்தால்
வருவதுகேள் வடகிழக்கில் வருமேலாபம்
சிறந்தபாக்கியங்கள் செல்வ மேன்மையாகும்
சிறப்பிக்கும் நிலையென்று திறங்கண்டோதே. 49

வேறு

வியமதின்பலன்கேள் ஜாதகன்றனக்கு மிகுத்திடு மனைக்கட்டடங்கள்
பயமில்லையிரண்டு நிலையென்பரதற்குப் பகருவாய் மத்தியிற்செல்வம்
கயமதி லன்னிய தேசசஞ்சாரங் காரகத்தாற்பல னறிதல்
ஜயமொடுமோக்ஷ ஜாதகனென்றே செப்புவாய் ஜகத்தினோர்தமக்கே. 50

***கடக மிரண்டாமோரையின் பலன் முற்றிற்று***

✲ ✲ ✲

## கடக மூன்றாமோரையின் பலன்

தேரவன் மூன்றாவ தோரைதன்னில்
ஜெனித்தோன்றன் வீதியது பிரிவுமூன்று
தேருகின்ற வீடதுவும் வடமுகப்பு
திறமை வடமேற்கதனி லாலயங்கள்
கூரெதிரில் மனைமூன்று பிரிவேயாகும்
கூரையது பாதிமனை விர்த்தியுண்டு
சேருவதுரிருபக்க மனையுஞ் செல்வம்
சிறந்திருக்கு பூர்வீகந் திறமையாமே. 51

வேறு

கதித்திடுங்கடக ராசியிலோரைக் கனிதமாமூன்றினிற் பிறக்கில்
விதித்திடுமாயு ளைம்பதல்லாது மிகுமாறில்மாரக மோதும்
பதித்தனர் மத்தியசெல்வமே மிகுதிப் பாலர்க்குக் கேந்திரமதனால்
மதித்தனர் சுபரும்பாபரும் பார்வை வருமாயுளிவ்வித மரசே. 52

## வேறு

சரமெனுங் கடகந்தன்னில் சாற்றிமூன்றா மோரை
உரமுடன் வந்தோர்க்கெல்லா முறுதிகாண் வயதைந்தேழில்
மரமதிலிருந்து வீழ்தல் வரும்நாற்கால் பயமுண்டாகும்
கரமெனுங் கங்கைதன்னில் காட்டியகண்டஞ் சொல்லே. 53
வந்திடுங் கண்டம் பின்னால் வரும்நல மென்றேசொல்லும்
சிந்தையிற் றெளிவில்லான்காண் தியங்கிய மனத்த னாகும்
முந்திய தனங்களெல்லா முற்றிலும் விரயமாகும்
சந்ததி பலனிவ்வாறு சாற்றிய நிலையீ தாமே. 54
தனத்தாதி பலன்கேள்மன்னா சாற்றிய வித்தையற்பம்
இனத்தினால் நட்புபேத மிடரில்லை குடும்பஞ்செல்வம்
மனத்தினில் நன்மையுள்ளன் மன்னரால் மகிழ்ச்சியுண்டாம்
கனத்துடன் பூமிசேர்க்கைக் கைப்பொருள் மிகவுள்ளோனே. 55
சாற்றியசகோதரர்கள் தலமதி லிரண்டுவிர்த்தி
தேற்றிய திரண்டுபெண்ணும் சேயொன்றும் விர்த்தியென்க
போற்றினர் பாபிப்பார்வைப்பொருந்தியேயிருக்கிற் காண்கில்
தோற்றமே சகோதரங்கள் சுகமில்லை யென்று கூறே. 56
எண்ணமாய் நான்காமாதி யிடரில்லை பலன்கள்கேளாய்
திண்ணமா மன்னையாயுள் தீர்க்கமா யிருபத்தாறில்
வண்ணமாய்க் கண்டஞ்செய்யும் வலுவிது வரினுமம்மான்
கன்னியே குடும்பந்தன்னில் கலங்கியே யிருப்பான்கூறே. 57
அஞ்சினுக் குடையோன்பாபி யமர்ந்திடும் பாபிப்பார்வை
மிஞ்சியே யிருப் பாரம்மான் மிகுநிலை யிரண்டேயாகும்
கொஞ்சியப் பூர்வநாசம் குணமில்லை குடும்பந்தன்னில்
வஞ்சக னேகனம்மான் வருந்தனிக் கலகனாமே. 58

## வேறு

திரமெனுமைந்துக் கைந்தாதிவுபயம் சிறந்திடச் சுபரொடுப் பாவர்
நிரமதாயிருக்கின் புத்திரனேகன் நிலைபெண்ணே யிரண்டெனலாகும்
பரவியபால்யம் புத்திரனாசம் பந்துக்கள் வழிதனில் பகைஞ்ன்
விரவியவன்னிய சினேகமாமென்று விளம்பினர் நந்தினற்றேவே. 59

## வேறு

தேடியவாறாமாதியின் பலன்கேள் சிறந்தசத்துருக்களே நாசம்
கூடியருணங்க ளற்பமதாகும் குணமுடன் ரோகமேயில்லை
நாடியதன்னிய தேசசஞ்சாரம் நலமதாய்திரித லுண்டாகும்

கூடுநற்பூமி சுயராச்சிதமாகும் கொடுத்திடும் செல்வங்கள் நிலையாம். 60

**வேறு**

ஓங்குமேழா மாதிபல னுணருங்களத்திர மேகமதாம்
தீங்கொன்றில்லை யன்னைவர்க்கம் சிறந்தகளத்திரந்தானிலைமை
தாங்கும்பூமி பொருள்செல்வம் தழைத்தேயிருப்பர்சார்ந்தவர்க்கம்
பாங்காங்குடும்ப மிருவிதமாய் பற்றியிருப்ப ரெனச்சொல்லும். 61

**வேறு**

மின்னிய களத்திரவீடு வீதியுகீழ்மே லாகும்
துன்னிய வடபால்வீடு சொல்வது தென்கீழ்கோவில்
உன்னிய தெதிரில்நாச முற்றிடுமருகில் விர்த்தி
பன்னுமிப் பலன்களோடு பற்றியக் களத்திரம்வீடே. 62
ஊனமில்லாதவெட்டோ னுறுமாக்ஷி கேந்திரகோணம்
தானமில்லாமற் கெட்டி சல்லியமாய் நின்றாலும்
ஆனதோர் வயதுஐம்பத் தாறினில் கண்டமாகும்
ஈனந்தானிலை யிவ்வாறு யிடரில்லை யென்றுகூறே. 63
சொல்லிய பாக்கியாதி சூழ்ந்துகேந்திர கோணத்தில்
அல்லலாய்ப் பாபர்பார்வை யடைந்துமே யிருக்கில்தந்தை
செல்வமாய் வர்க்கமைந்து திரமதி லிரண்டுவிர்த்தி
வல்லபம் பிதுர்காலத்தில் வருமேகன் விர்த்தியென்றே. 64
மீரியபத்தாமாதி மேவியசுரங்கள் கர்ப்பம்
பார்தனில் ஜீவனங்கள் பலன்பூமி விர்த்திமேலாம்
தேரியசெல்வயோகம் சிறந்திடும்விர்த்தி மேன்மை
கோரியக் குடும்பந்தன்னில் குறைபேத மென்றேசொல்லும் 65
விரும்பிய லாபத்தாதி விபரமிற் றினியசெல்வம்
தருங்கூட்டு வர்த்தகத்தால் சாடுமே மிக்கலாபம்
வருஞ்சுகங் கீர்த்திமேன்மை வலுவுளன் தாழ்விலாதான்
பெரும்பல னுண்டாமென்று பேசுவாய் மன்னர்க்கோவே. 66

**வேறு**

கண்டில்விரயம் சயனநற்சுகங்கள் கட்டியகட்டடம் பாழாம்
மிண்டியரன்னிய மனைதனிலிருப்பன் மிகுதியுஞ்சஞ்சல முளனாம்
கண்டிடலன்னிய தேசசஞ்சாரங் கன்னியர்கலகமே யுளனாம்
உண்டெனுந்தலங்களிரண்டிடம் நிலைமையுரைத்திடும் ஜாதகன்றனகே 67

***கடக மூன்றாவ தோரைபலன் முற்றிற்று***

✲ ✲ ✲

## கடகம் நான்கா மோரையின் பலன்

நலிக்குங்கடகம் நான்காவ தோரைதன்னில் வரும்வீதி
பெலத்தவீதி தென்வடலாம் பேசுமனைகாண் மேல்முகப்பு
அலுத்தேபோகு மெதிரின்மனையாரலருகிற் சந்துண்டாம்
வலுத்தவிரண்டு பக்கமதில் வலுவீனங்க ளுண்டாமே. 68

### வேறு

மேவியகடகம் நான்காவதோரை விருப்பமாய்ப்பிறந்த ஜாதகற்கு
பாவிகள்பார்வை யுண்டதற்கெதிரில் பாழ்மனையாரல்காண் சந்து
தாவியதந்தை வர்க்கமோமூன்று தரணியி லிரண்டதில்விர்த்தி
வாலிகாண்தென்கீ ழாலயமிதுவே வலுவுள்ளரனுபவ மோதே. 69
தந்தைவர்க்கத்தில் சுகமெலாங்கெடுதி தானமோயிரண்டிடம் நிலையாம்
முந்தியமனைகள் பேதமாகும் மொழிசுகமன்னியர் தலத்தில்
சந்ததியில்லா மனைதனிலிருப்பர் சஞ்சலங் கலகமாமென்க
பிந்தியசுயராச்சித நிலையொடுகீர்த்தி பெலமுட னிலையிவ்வாறாமே. 70
உண்மைகேள் மன்னா ஜாதகன்றானு முதித்ததோரொன்பதா மதியில்
தன்மையேயில்லை மாரகண்டஞ் சார்ந்திடும் நிலையிவ்வா றென்க
திண்மையாமன்னை தனக்குமேரோகம் சிறப்பில்லை யின்னிலைப்பலன்கள்
வண்மையாமம்மான் வர்க்கமேதோஷம் வருமெனக் கூறுமிப்பலனே. 71

*கடகலக்கின நான்கு ஓரைக்கும் செய்யுள் -71*

*முன் லக்கினம் 2-க்கு செய்யுள்-178*

*ஆக மொத்தம் செய்யுள்-249*

*கடக லக்கினப் பலன் முற்றிற்று*

❀ ❀ ❀

# சிம்ஹோதயம்

சிங்கமெனும் லக்கினந்தா னுதயமாகில் சிறப்பாகக் கிழக்குமேற் கானவீதி
பங்கமிலாப் பிதுர்க்குடும்ப மூன்றேயாகும் பாலனிட வாசலதுதெற்கேயாகும்
அங்கமுடன் நண்டுசுராமகரகும்பமானபுதன் சேய்சுங்கன் சாமிநிற்கில்
துங்கமுள்ள சகோதரங்க ளேழதாகும் சுகமான பூவையரும்நான் காம்கூறே 1

## சிங்கமதில் பாவாதிபர்கள் நின்றபலன்

சீரதாம்சிங்கத்திற் கதிரிருக்க ஜெனித்தஜாதகன் பலன்கேளாய்
தீரனாங்கோபி அச்சமில்லாதான் தீர்க்காயுள் சஞ்சலமனத்தன்
வீரவான்பிரியன் முதிர்வசனத்தன் விளங்கிடுங் கதிரவன்றனக்கு
நேரதாய்மதியும் பகையதாயிருக்க நிலம்பொருள் விரயமாமின்னம் 2
சுகமில்லை மகிழ்ச்சி பேதமேயாகும் சொற்குசன் பகையுடனிருக்க
மிகப்பூவர்பூமி செல்வமுமுண்டு மேலிருவித சுகமிலாதான்
தடமிகுரதனை யினிமையாய்க்கொள்வன் சாரும்புத்திராளுக்கு நேத்திரம்
வெகுதோஷமாகும் பூர்வபேதங்கள் வினைக்கலகம் மின்னங்கேளே. 3
தந்தையின்கர்மம் தான் செய்யவதவான் தர்மவான் சத்தியவாக்கன்
புந்தியும்பகையாய்ப் புலப்படும்குடும்பம் பிரிவிலிரண்டாதீனப் பேதம்
முந்தியாதீனப்பேதம் நற்கணிதம் வரும்பலவித்தைகள் செல்வன்
தந்திடுந்தொழில் வியாபாரத்தில் லாபம் தாரத்தால் பாக்கியமுளனே. 4
மன்னவனட்பா யமர்ந்திடப்பலன்கேள் மாயோகிசெல்வ முள்ளவன்காண்
அன்னியதேசம் சஞ்சரிப்பவனா மாயுளுந்தீர்க்கமாஞ் சீலன்
மன்னவர்கூடுஞ் சுகத்தன்மாப்பிரிய வாக்குடையவன் பெரியோர்கள்
உன்னுமானட்பன் தருமசிந்தையனா முருமந்திரிக் குணமுடையவனே. 5
புண்ணியருறவ னவர்மதிக்கேட்பன் பொருந்துமிப்பலனல்ல மின்னம்
திண்ணமாய்ப்பார்க்க வன்பைகையாகித் துடர்ந்துமே நின்றிடப் பலன்கேள்
மண்ணதில்களத்ர தோஷமன்னவரால் வரும்பொருள் விரயம் சஞ்சலத்தன்
பெண்ணினால் பொருள்நாசம்பிரிவாகும் பின்சுயார்ச்சிதமுடையவன்காண் 6
நன்னதிகாரம் தரும்புவி பொருள்கள் நாடும்சோதரமெலாநாசம்
அன்னைவர்க்கத்தால் சுகமதையடைவன் அதில்சனிப் பகையுடனேதான்
நின்றிடப்பலன்கேள் சகோதரரரிட்டம் நிலையுள்ளசத்துருநாசம்
உன்னியக்களத்திர பகையதுவாகு முறுதிகாண் பொருள்விரயமுமமே. 7
சத்துருக்களினாற் சஞ்சலமுண்டாம் தடையிலாதீர முள்ளவனாம்
இத்தரையெல்லாம் சனிக்குளதாகும் யினியசத்துருப்பல னிதுவாம்
முத்தொழில்நடத்தும் முதல்வனேமுத்தி கொழிந்தனரென்றுநந்தீசர்
சத்தியமாக வெந்தனுக்குரைத்தார் தரணியாம் மன்னர்தங்கோவே. 8.

## சிம்ஹ முதலோரையின் பலன்

சிறந்திடும்சிங்க முதலோரைப்பலன்கேள் ஜெனித்த ஜாதகர்கினிதேகம்
நிறைந்திடும்ரூபம் சமனதாம்நிறமோ நிலையுள்ளப்பொதுநிற மென்க
குறைந்திடாச்செல்வம் பிதுர்பூர்வநாசம் குலமதில் புத்தி கூர்மையனாம்
பிறந்திடும்சேய்க்கு ஆயுள்விர்த்தியதாம் பெலமுள்ளஜாதகனென்றுரையே. 9
உரைப்பதுதனாதி பலனெவ்வாறென்னி லுறும்புந்தி சரத்தினிலுபயம்
குறைபடாதுபயந் தனில் திரமாகக் கூறுவர்வித்தை செல்வீகன்
நிறைபடுங்கணிதம் புராணகாவியங்கள் நிலையிள்ளவித்தையங் குளதாம்
திரப்படும்செல்வ மதுரவாக்குடையன் சிறந்த செல்வீக னென்புதுவே. 10

### வேறு

செல்வீகன் மூன்றாதி சேய்வுபயந் திரமாய்
சிறந்த நேத்திரமதனில் திறமையுட னிருக்கில்
வல்லபமாய்ச் சத்துருஜயம் வீரியவிர்த்தியனாம்
வருஞ்சேயின் பார்வையதில் வந்திடினும் நிலையே
அல்லலிலைப் பாவர்களின் பார்வையதி லிருக்கில்
அவனிதனிற் சகோதரங்க ளபிவிர்த்தி யுளதாய்
செல்வமுள்ள சகோதரங்க ளேகன்றா னிருப்பன்
சிறந்தசெல்வன் வித்தையினால் செல்வமுள்ளா னென்னே 11
பலனறித லம்மான்கள் சகோதர மிரண்டு
பலமொன்று விர்த்தியதில் பல்வீன மொன்றாம்
விலகிநிற்பா னம்மானோ குடும்பத்தி லுதவான்
மிககளத்திர வர்க்கமிகத் தாழ்வே சொல்வோன்
தலமதனை விட்டேகி அன்னியதேசத்தில்
சஞ்சார மதில்வாழ்வன் றரணிதனி நல்லன்
விலகுமன்னைக் குடும்ப வர்க்கத்தினில் மூன்றுகிளையா
மிக்கசெல்வன் தர்னென மேதினியில் சாற்றே. 12

### வேறு

பெருகியசெல்வம் சிறப்புடனல்கும் பெலன்முன்னோன்றா னில்லைக்கனிட்டன்
வருவது விளையோ னட்டமம்விர்த்தி வருமேகன் விர்த்தியாம்
தருவது பெண்பால் நிலையொன்றேவிர்த்தி தருஞ்சுகம் சௌக்கியம்சமமாம்
குருகியச்செவ்வாய் திரிதியமதனால் குரித்திடல் சகோதரப்பலனே. 13
அன்னைசுகம் நான்காதி பின்னும் நான்கோ
னமர்ந்துநின்ற மதிதனக்கு நான்காதிகேந்திரம்

வின்னமிலாதிருக்கச் சுபர்பார்வை மதிதனையே
விரும்பிநிற்க மன்னவர்கள் மிக்கசுக முளனாம்
பன்னிய நூல் பலகலைகள் பயிற்சியுள னாகும்
பலனன்னிய தேசசஞ்சாரி யென்பர்மேலும்
முன்னியபால் பசுகன்றுவிர்த்தியதா மைந்தில்
முதிர்ந்தவய தனிலீனமுருகி யிதுகூறே. 14

கூறுவது வாகனங்க ளுண்டு பூமிக்
குறித்தசெல்வம் சுயார்ச்சிதமாங் குணமாய்க்கூடும்
தேறுவது வித்தையினால் செல்வமென்க
சிறப்பில்லை யன்னைவர்க்கம் தியக்கமுண்டாம்
சீரிவரு மன்னைகண்ட முப்பதல்லால்
சினமொன்பான் மூன்றில்நிரி யாணங்கூறும்
பாரதனிற் பலன்யோகந் தனையடைந்துப்
பத்தி சிவார்ச்சனைக்குள்ளப் பாலனாமே. 15

## வேறு

ஐந்தினுக்கைந்தாமாதி பிறைக்கைந்தாமாதி
யமர்ந்துநின்ற கோள் பார்வை யதில் கேந்திரகோணம்
வந்திடினு மதில்புத்திர னேகனெனவோதும்
வருமப்பால் பிறந்துடனே நசித்திடுமேயல்லால்
முந்தியப் பூர்வந்தனக்கு நிலைகீழ்பால் பூமி
முறுஞ்சுபங்கள் மனைவிர்த்தி முற்றிலுஞ்செல்வீகம்
தந்தைவர்க்கந் தனிற்சுபங்கள் சஞ்சலமொன்றில்லை
தாயாதி பகையில்லான் தன்மையுளனாமே. 16

## வேறு

ஜன்மாதி லாபத்தாதி சேர்ந்து கர்மாதியோடு
தன்மித்திரர்க் கிரண்டில்தானும் தரித்திடப் பலனைக்கேளும்
கன்மத்தை செய்வதற்குக் கனம்பெரும் புதல்வனில்லை
பின்னுமே தத்துப்புத்திரன் பெலமுடன் வருவானென்னே. 17

கர்மதானத்திலிவ்வாறு கலந்திடப் பலன்கள் சொன்னீர்
கர்மமே யதற்குக்கர்மம் கனகனால் பார்வையாகில்
வர்மமாய் மூன்றுதாரம் வதைசெய்து நாலாந்தாரம்
தர்மங்கள் விர்த்தியாகத் தழைத்திட செய்வர்கண்டாய். 18

ஆறாதியதற்காறாதி யரியகோளு பயமாகி
பேறாகும்சசிக்கு மாறோன் பெலனுரயக் கோளாகில்

தேறாது சத்துருநாசம் ஜெகந்தனில் குணமுண்டாகி
கூறாக நிவர்த்திரோகம் கூறவாதமென்னே. 19
வருவது வேழாமாதி வருஞ்சசிதனக்கே முள்ளோர்
தருவது சுபர்களோடு சார்ந்துமே திரத்தில்நிற்கில்
பிரிவதுதாரமேகம் பெலனில்லை கலகியாகும்
அரிவைதான் தென்கீழமூதன்னி லமருவாள் வீதிகேளே. 20
வீதிகேள் தென்வடக்கில் விருப்பமாய் மேல்பால்வீடு
நீதியாம் வடமேற்கோவில் நிலைகன்னி யதனிற்கங்கை
பாதிநாள் செல்வம் பின்னால் பலன்பேதங் குடும்பவீனம்
ஆதியி லிருந்தசெல்வம் அபிவிர்த்தி யென்றுகூறே. 21

வேறு

ஐந்தினுக்கீ ரிண்டதற் குளோன் கேந்திர மடைந்தவரிருப்து திரமாய்
சந்திரன்றனக்கு மெட்டாதியுங்காணும் சார்நதுடனிருப்பர்கா ணதனால்
விந்தையாமாயு ளெழுபதல்லாது மிகவிரண்டாணிடினிற் கண்டம்
முந்தியக்கண்டம் பலன் பின்னு முறைப்போ முற்றிலும்பழுதில்லை தானே. 22

வேறு

பலமுடைய பாக்கியாதி மதிக்கொன்பானாதி
பற்றிநின்றவிடந்திரத்தி னுபயமாகில்
குலமுடையன் குணமடையன் குறித்தசெல்வ மெய்யன்
குடும்பமது வயதேழு வருடமட்டுஞ் செல்வம்
தலமதனை விட்டன்னிய தேசஞ்சென்று
தனித்திடத்திற் காட்டாந்த நிலையில் நிற்பன்
விலகிவரும் பூர்வமது நாசமாகும்
வேந்தடனிப் பார்வையினால் மிகுதியாமே. 23
மிகுதியாம் சுயார்ச்சிதமே வடகீழ்பக்கம்
மேன்மையதாய் நிலைத்தங்கே பின்னால்மாறும்
தகுதியாம் பிதுர்தொழிலே வேறேயாகும்
தையலர்கள் பகையுண்டாந் தரணிமீது
ஜெகமதனில் பிதுர்தனக்கு வுந்திரோகம்
சிறியபிதுர் தனக்குசுகம் சிறிதேயாகும்
பகலவனும் பாவியொடுப் பற்றிநின்றுப்
பார்க்கசுகம் பேதமெனப் பலன்கள் சொல்லே. 24
சொல்வது கேள்பாக்யாதியதற்கு லாபத்தோன்
சுகமில்லாத் தசைதன்னில் பாபியுறுங்காலம்

வெல்வதுகாண் முப்பதுவோ டிருநான்குவாண்டில்
மிகுந்ததந்தை மாரகமா மின்னங்கேளு
தொல்லையதாம் பிதுர்மூன்றா மிடத்தில் நிற்பார்
சுயார்ச்சிதமா யந்நிலையில் சுகங்கள் பலவுண்டாம்
கல்லலிலை ஜாதகற்கு கனபகைகு னாகிக்
கதித்துநிற்பன் களத்திரத்தால் கணிதமிதன்பலனே. 25

### வேறு

பொருத்தமது வடமேற்கு லாலயங்க ளுண்டாம்
பொருந்துமனை யாதீனம் பின்னால்கேடதுவும்
வருத்தமதாய் சதுரில்ல மில்லையதில்பாதி
வலுவீன மதில்பிறந்தப் பாலனெனவுணர்வீர்
குரித்தசிரந் தன்னிற்சுக மென்பர் முதலோரைக்
கூறுங்காற் றந்தையிடத் தந்தைமூன்றாகும்
பிரிந்திடுவர் தந்தைதனில் மற்றிருவர் தனியாய்ப்
பேதையுடன் தான்கலங்கி பிரிந்துடனே போவார். 26
போவரென்று நிலைசொன்னீர் தந்தைகாலத்தில்
பொருந்தும்வர்க்க சகோதரங்கள் பூரணமாயோதும்
ஆவதினி யரசேகேள் தந்தையுட னேகன்
அமர்ந்து நின்றா னுபயதாரத்தை யுள்ளோன்
தீவுதனிற் பிரயாணம்போவ னிளை யோன்றான்
சிறப்புடைய முதல்தாரங் கர்மமது முடித்து
தாவமுடன் தந்தைதனை விட்டன்னிய தேசஞ்
சகோதரர்க்குப் பகைகாட்ட ஜலயாத்திரையென்னே. 27
யாத்திரையே செய்துடனே யன்னியர்தம் பொருளை
யடைந்துசுயதேசத்தை யன்புடனேநாடி
கோத்திரத்தில் சுபமுடிக்க முயற்சிதனைக் செய்துக்
கொண்டுவந்த பொருளை ஜேஷ்டன் குடும்பத்திலழித்து
தோத்திரமாய் சுபமுடித்தான் வாக்கூனப்பெண்ணை
சொற்சுகங்கள் தானில்லை துணிவுடையப் புருடன்
மாத்திவிடுங் குடும்பமதில் சுகமற்பமாகும்
வரும்பெண்பால் புத்திரியாம் வளமொன்று நிலையே. 28
நிலையாகும் பிதுர்சுகங்கள் பாக்கியத்தில் சொல்வோம்
நின்றவம்மான் குடும்பங்கள் பாசமது நான்காம்
அலைகடலாய்க் குடும்பமது கோள்பகைக ளுண்டாய்

அவனியிற் நற்சுகமில்லை சமபலனாங்காணும்
தலமதனை விட்டன்னிய தேசத்திற்சென்று
தயங்கிபுந்தி திசைபோவான் தையலரைநம்பி
விலகிபதன்னியதேச சஞ்சாரனென்னே
விளம்பினர்காண் நந்தீசர் மேதினியில்தானே. 29

**வேறு**

இரவியும் புந்திகூடி யின்பமாய் நின்றாராகில்
பரவியத் தந்தைவர்க்கம் பற்றியதாறே யாகும்
விரவியத்ததனால் வர்க்கம் மேன்மையே யில்லையென்க
குறைவதாந் தனங்கள் பின்னுங் குற்றமாம் ரோகந்தானே. 30

**வேறு**

கண்டிடவே கேளரசே நான்காமாதி
கணிதமுடன் மதிக்குநான்கினையுங் கொண்டும்
துண்டாகு மன்னை சுகமறிதல்பத்தோன்
சுககேந்திர மதிலிருக்கிற சொல்லக்கேள் நீ
உண்டாகும் ரோகமுள்ள வன்னையென்பர்
உறிதியுள்ளாள் குணமுடையா ளுறுஞ்செல்வாக்கு
மிண்டியதோர் மிகுசெல்வம் மேன்மைசுக விரயம்
விருப்பமுள்ள மன்னைபலன் விபரமீதே 31

**வேறு**

கண்டிக்கர்மாதிக்குக் கர்மத்தோ னேழாமாதி
துண்டிட சுபர்களோடு சூழ்சனிப் பார்வையாகில்
உண்டாகும் கண்டமைந்தி லிருபத்திலிரண்டிற் கண்டம்
மிண்டியே மீளாதென்று விளம்பினர் நந்திவே. 32

**வேறு**

பாலனிவன் பாக்கியத்தில் பாக்கியாதி
பலன்சொல்வோ மதுசிலையாம் பலன்சரத்தி லுபயம்
நீலனுமே கூடியே பார்வையதி லிருக்கில்
நிலையம்மான் குடும்பமது நிலைபேதமென்பர்
கீலகமா மன்னைவர்க்கந் தனில்குடும்ப மூன்று
கிளையிரண்டு செல்வீங் கெடுதியில்லை யென்க
துலைதூர மோர்குடும்பந் துலக்கமிலாதிருந்து
சுயார்ச்சியத்தில் நிலைப்பரெனச் சொல்வர்மிகப்பலனே. 33
பலனறித லம்மான்கள் வீடுகீழ் மேற்கு

பற்றிவரும் வீதியதாம் வடமுகப்ப தாகும்
தலமதனி லிரண்டுமனை களிலொன்று பாழு
தனித்தமனை யெதிரிலொன்று சந்துண்டா மருகில்
பெலனுண்டாம் தென்கிழக்கி லாலயங்கள்
பெலவீனக் கால்வாய்க்கால் புரிந்துசெல்லும்
உலகினிலே பூர்வீகம் நாசமென்று
வுரைத்திடுவ ரிப்பலன்க ளுறுதி கூறே. 34
கண்டிடவுங் காடடர்ந்த நிலையாமென்றீர்
கருதிய தவ்வாறிடமுங் கணிதங்கூறும்
மிண்டியகோள் சிங்கமலை மேடாங்காடு
மிகுமிவ்வாறு காரகத்தால் கேன்மை காண்க
துண்டாகும் ஜென்மாதி சரத்தினோடு
சூக்ஷித்த மதிக்கிவ்வாறு பலனே காண்க
உண்டாகும் காரக மிவ்விதத்தால் முன்னு
முறைத்தனன்கா னிப்பலன்க ளுருதிகூறே. 35

## வேறு

கருதிய கர்மத்துள்ளோர் காரியின் பார்வையாகில்
பெருகிய ஜீவனங்கள் பெலமுள்ள யோகவானாம்
பருதியின் பார்வைதானுப் பத்திற்கு பதிவாய் நிற்க
திருதியத் தோனால் பார்க்கச் செல்வம் வித்தையினாலென்னே. 36
வித்தையால் யோகமென்று விரும்பியே யுரைத்தாயேது
பத்தினுக் கதிர்பாவி பலமொடு கூடிநிற்கில்
சித்தியாய் ஜீவனங்கள் சிறப்புட னெதனாற்சொல்லும்
மத்திபமில்லை சந்திரன்வலு தனைக்கொண்டு சொல்லே. 37

## வேறு

திரமுடனிலாபாதிலாப மதுமதிக்கு
சிறந்த மிலாபாதியுடன் சேர்ந்துசுபர்பார்வை
கரமுடனே நின்றக்காற் பலனெவ்வா றென்னிற்
கதித்துவரும் வித்தையினால் கணிதத்தாலும்
பரவியே மனைவோருங் கூடும்நட்பாய்
பாக்கியங்கள் பலதிசையிற் பரவிகூடும்
உரசுக லாபங்களது சுகத்தினாலே
உண்டாகு மென்றுரைப்ப ருண்மைபாரே. 38

உறுதிகாண் விரயாதிபதி யதற்குமாரல்
உருமதிக்கு விரயாதி யுபயமதில் திரமாய்
திருதிய கோணந்தனிலே யிருந்திடிலவ்வாறு
செல்வமதில் சுகமுண்டாஞ் ஜெகத்தில்சுபவிரயம்
வரும்நித்ய தருமமமதில் விரயங்களல்லால்
வரும்பூமி தனில்விரயம் மகிழ்ச்சியுண்டாம்
பெருகியகட் டடவிரய முத்திமோக்ஷம்
பெறுவனென விப்பலன்கள் பெருமைகூறே. 39

*சிம்ஹ முதலாவதோரை பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## சிம்ஹ மிரண்டா மோரையின் பலன்

அரியதனி லிரண்டாவ தோரைதன்னி
லடர்வீதி தென்வடலா மறியக்கேள் நீ
பிரிவுடனே தென்முகப்பு வெதிரிலில்லம்
பெலமென்று வொன்று பாழ் பெலனாஞ்சந்து
தெரியக்கேள் மேல்பக்கமிரு மனையாம்பூர்வந்
திரமில்லை யன்னைமனைத் திரமேயாகும்
புரியக்கே ளாக்கினையிற் கங்கைகோவில்
பூரணமாம் செல்வீகம் புதிதாமென்னே. 40
திரமதிற் றிரமாமிரண் டாவதோரை
ஜெனித்திடும் வீதியைக் கேளாய்
உரமுடன்கீழ் பாலருகினிற் சந்து
முதித்திடுமேற் பக்கமிருவர்
உலமுள மனைகாண் பெண்ணனுபவமா
முரைத் திடும்விர்த்தி யொன்றுளது
குறைவதா மெதிரிலுள மனையேகன்
குடும்பமேதத்து புத்திரனாம். 41
இருக்கினுந்தந்தை காலத்தில்மூவ
ரிருவர்காண் விர்த்தியிலொருவர்
பெருக்கமாய்த் தலங்களிரண் டிடம்விர்த்தி
பெலமுடன் செல்வமே யுளனாம்
அருக்கனேவுபயம் திரத்தொடுபார்வை

யமர்ந்திட ஜெனித்த ஜாதகற்கு
உருக்கமாயம் மான்குடும் பங்களிரண்டு
மொன்றதில் விர்த்தியா மென்னே. 42

**வேறு**

துலங்கிய ஜன்மத்துள்ளோர் சூழ்மன்னர் பார்வையங்கு
பெலன்கொடுத் திருக்கத்தேகம் பொதுநிறஞ் சமனாம்ரூபம்
நலங்கெடும் வயதோரேழு நான்மூன்று வாண்டிற்கண்டம்
பெலன்கொடு மிருபத்தொன்றில் பெருகிய சுரத்தால்பீடை. 43

அட்டமத் ததிபன் பார்வை யடைந்திடி லதுவுங்கண்டம்
தொட்டதோ ரரிட்டகண்டஞ் சொல்வது தரசன்றன்னால்
கெட்டுமே போகாமன்னா கெடுதியென் றெண்ணவேண்டாம்
கட்டமா யரிட்டங்காணும் கருத்தினில் பேதம்வேண்டாம். 44

சாற்றியக் கண்டஞ்சொன்னீர் தரைமிசை யாயுளென்ன
போற்றிய வரசேகேளாய் புவிமிசை யட்டமாதி
நேர்த்தியாய் மதிக்கெட்டாதி நிலையுடன் கேந்திரகோணம்
தோற்றியததனால் நாற்பான் சொல்லுவ திருபான்மூன்றே. 45

**வேறு**

பகர்வதிவ்விதமாம் பற்றியததற்குப் பலன்சுகங்கெடுதி யெவ்விதங்காண்
நிகரதல் முப்பதல்லாவதொன்றில் நிகசழ்த்துவாய் செல்வமேயடைவன்
ஜென்மதில் கீர்த்தி மன்னர்கள் பேட்டி செல்வமுந் தீர்க்காயுள்மட்டும்
பகருவதிவ்வா றரசனேயின்னம் பற்றியதனத்தின் பலன்கேள் 46

தனத்ததிபன் காணதற்கு லாபமுமாய் சசிதனக்கிரண்டிடத் துள்ளோர்
இனத்துடன்கூடிக் கேந்திரகோண மிருந்திடிலிருத்தையுளனாம்
மனத்துடன்கற்பன் மன்னர்சன்மானன் மனதினில் திகிலிலானென்க
அனைத்துயிர்தனையுந் தன்னுயிர்போலமாதிரித்திடுவன்கா ணென்னே. 47

மிக்கமூன்றாதி யுபயத்துள்சரமாய் மிகுநில மான்பார்வையங்கு
சுக்கிரன்சகிதம் பொன்ன வன்பார்வைச் சூழ்ந்திட ஜனித்திடிலிதற்கு
பக்குவமுள்ள சகோதரமைந்துப் பலனிருவாண் பாலதாகும்
மிக்கசெல்வீக னதிலேகன் விர்த்தி விளம்புவாய் மற்றதுபெண்ணே. 48

பெண்ணதில் மொத்த முரைத்ததாலொப்பார் பெலமுடனெடுத்திதிலோது
திண்ணமாமிரண்டுபெண்ணிலைதனிலும் சிறந்திடுசெல்வங்காணொருபெண்
வண்ணமாமற்றோர்பெண்ணாயுளற்பம்வரும் பனிரெண்டாண்டில்தானே
புண்ணியத்தலங்கள் சென்றுபின்வந்து பெண்ணிறந்திடுவளென்றோதே. 49

### வேறு

கதித்திடும் நான்குள்நான்குக் கலைமதிதனக்கு நான்குத்
துதித்தகோள் செல்வர்கோணஞ் சூழிபயங்காண் பார்வை
பதித்திட வன்னைகண்டம் பகருவ ரைந்தேழாண்டில்
விதித்தனன் மூன்றாரேழில் மிகுமனத் துயரக்கண்டம். 50
பஞ்சமன் றனக்கைந்தாதி பலனைந்துக் கைந்தாமாதி
முந்திய திரத்துள்ளோர்கள் மூரியப்பார்வை யங்கு
சொந்தமா யிருக்கவம்மான் சுகமெலாம் விரயமென்க
சந்ததி ஜாதகற்குத் தருமுப்பான் மூன்றிலென்னே. 51
கூரிய வாறாமாதிக் குடும்பாதி சகிதம்பார்வை
நேரிய மதிக்காறாதிநிலையுளப் பார்வையாகில்
பாரினில் சத்துருநாசம் பலபிணிப் பகரலாகா
நேரினில் குணங்களில்லை நிறைமன்னா யின்னங்கேளே. 52
சத்தமத்ததிப னேழோன் சகிக்கேழா மதிபன்றன்னால்
உத்தமபலன்கள்தார மொன்றதாம் செல்வமுள்ளான்
சுத்தனல் சுகியாள்தேகம் சூழ்செகப் புள்ளாளென்க
சித்தமும் நல்லாள் சிந்தை செல்வியாம் சிறப்புளாளே. 53
உண்டிதில் மொத்தம்சொன்னால் வொப்பாது வுண்மைகூறும்
கண்டிடல் வீதிகீழ்மேல் கருதுவர் வடபால்சந்து
துண்டது கீழ்பால்கோவில் சூழ்தென்கீழ் கங்கையாகும்
தண்டதுக் கேழிற்றானே தருமன்னர் மனையதாமே. 54
அரிதல்காணரிக்கேழ்நான்கு வதற்குள்ளோன் சகிதம் பார்வை
தெரிதல்முன் னுரைத்தலாலே திறமிதுவர்க்கம் சொல்வாய்
பிரிதலொன்றில்லைபாரு பெருகியவர்க்கமல்ல
தகுமிதில்சகோதரங்கள் தந்தைவர்க்கங்களென்னே. 55

### வேறு

திரமிதுகளத்திரசகோதரமாறு திரமாண்களிரண்டது நிலையாம்
பரவியபெண்பாலுபயமே யாகுமிப் பாரியாள்கனிட்டமென்றோது
நெரியதாய்ச்செல்வமுடையவளாகும் நிலையுள்ளக்குடும்பமாஞ்செல்வன்
துரவியப்பூமி யிரண்டிடமென்று சொல்லுவரின் னிலைப்பலனே 56
குணமதாம் ஜாதகற்கூடிய வயதிரேழி
மணமதாம்பின்னும்பத்து வருமாண்டில் சுபங்களென்க
துனையதாம் பெண்பால்மூலம் சொல்வது சுகங்களுண்டாம்
மினையுடன் பூமிலாபம் பெறுவது நிலையாமென்றே. 57

## வேறு

பரவியபுத்திரன் றன்னையேகேழ்க்கில் பாக்கியந்தனக்கைந்தாமதிபன்
விரவியமதிக்கைந்தினுகைந்தோன் விருப்பமாயுபாயத்தில்திரமே
உருவியேயிருக்கில் யோகவானாகும்உண்மைகாண் பண்ணிரெண்டுளது
தரைமிசைசெல்வன் யோகனாமரசன் சார்ந்துடன் மகிழ்ச்சியாயிருப்பன் 58

## வேறு

நாலாமிடத்திலைந்தாதி நலமாம்பலன்கள் தனைக்கேட்கில்
மேலாமறுபத்தோராண்டில் மிக்ககண்ட மாரகமாம்
மாலோன்சகிதமெட்டாதி வரினும்பார்வை யடைந்திருக்கில்
மேலாம்யோகமாயுள் மட்டுமிக்கச் செல்வன்றனவானே. 59

## வேறு

பெற்றிடுமொன்பான் பலன்றனையுரைக்கில் பேதமா முப்பதல்லாது
அற்றிடுமைந்தாண்டினிற் றந்தைதனு மவனியிலிறப்ப னென்றோது
குற்றமாம்ரோக முடையவன் தந்தைக் குணமுடன் சிந்தையுநல்லன்
வெற்றியாம்பிதுர்கள் பூர்வீகம் தமக்கு மிகுதியாய்ச் செல்வமுள்ளவரே. 60
அரிவதுபத்தாமிடத்துள்ளோன் பார்வையறைந்திடப்பாபிகள்சகிதம்
தெரிவதுசெல்வன் தனக்குமேதொழில்கள் சிறந்திடும் பூமியால்விர்த்தி
உரியநல்வித்தை வியாபாரமதனா லுரைப்பதுசெல்வ நற்பலன்கள்
பெரியவர்நட்புயடைந்துடனிருப்பன் பெருகியபல னிவ்வாறாமே. 61
உதித்தலாபாதிப் பலன்றனைக்கேளுமுற்றிடுமதிக் குலாபாதி
சரமதாயுபயம் வேந்தனால்பார்வைத் தன்னுடன் நிலமகன்பார்வை
பதித்தங்குநிலைக் கிலில்விதமாகப் பற்றியலாபமே மிகுதி
விரவியவடகீழ்சிலைகன்னிதிசையில் விரும்புவாய் பொருள்விர்த்தியாமே. 62

## வேறு

வினவியதோர் விரவியபலனறிதல் மன்னா
மிகுமதிக்கு விரயத்துள் ளினியப்பார்வை
தனிமையிலா சரமுபய மாகிநிற்கில்
சார்ந்தசுப விரயமதாந் தரணிதன்னில்
புனிதமாய் பொருள்தர்ம விரயமாகும்
பூரணமா மதிப்பார்வைப் பொருந்திநிற்கில்
வனிதையர்கள் வழிதன்னில் விரயமென்றே
வகுத்துரைத்தா ரிப்பலன்கள் வலுவாமோதே. 63

***சிம்ஹ மிரண்டாமோரை பலன் முற்றிற்று***

✲ ✲ ✲

## சிம்ஹ மூன்றா மோரையின் பலன்

அரியதனில் மூன்றாவ தோரைதன்னில்
அன்புடனே ஜனித்தோற்குக் கீழ்மேல்வீதி
குறிப்புடனே வடமுகப்பு எதிரிலம்மன்
கோவிலுண்டாங் குளிர்ந்தநிழல் குளமேநிற்கும்
சிறப்புடனே யிருபக்க மனையும் பாழு
திரம்பூர்வ மதுவாகும் செல்வமில்லை
திரப்படுங்கா ணன்னியதேசத்தை நாடி
சென்றிருப்பார் மூன்றாவதிடத்திற்றானேன். 64

### வேறு

நெறியதாம் வீதிபார்க்கில் நிலையது தென்வடல்தான்
பிறிவது! வெதிரிலில்லம் பெலமில்லை யீனமாகும்
புரிவது வுருபக்கத்தில் பொருந்திய மனையுநீதீது
குறியிதாம் மேற்பக்கத்தில் கோவிலுண்டாகு மென்னே. 65
ஆனதோ ராதீனங்க ளரிதிசை முன்னாலென்க
வீனமாம் பின்னும்விர்த்தி யிடத்தினில் நிலைமையென்க
தானும்நிலையுற்காணும் தந்தையின்வர்க்கம் ரெண்டாம்
ஊனமா மொன்றும்விர்த்தி யுரைப்பர்காண் நந்திவாக்கே. 66
நீதியா மம்மான்வர்க்கம் நிலைமூன்று குடும்பமாகும்
பாதிநாள் செல்வம்பின்னால் பலமில்லை பூமிபொன்னும்
வாதிகள் வழக்கேநேர்ந்து வரும்பொருள் விரயமென்க
ஓதினா ரிவ்வாறென்று வுண்மைசொல் லிதுவாமன்னா 67

### வேறு

காரிக்கெட் டிடத்தோ ரட்டமத்ததிபன் கண்பார்வையாகிடிற் பலன்கேள்
பாரினில்வயதோ ரொன்றினிற் கண்டம் பகருவர் மூன்றினி லரிட்டம்
நேரினிலொன்பான் பாதத்திற்கண்டம் நேர்ந்திடும் ஜலரோகப் பீடை
சீரியதிதற்கு ஆயுளே பேதம் செல்வனுக் கிவ்வித மென்னே. 68

### வேறு

சிங்கத்தின் மூன்றாமோரை ஜெனித்திடும் பாலனுக்கு
பங்கமா மொன்பான்றன்னில் பனிமதியதனைப் பொல்லா
அங்கிதா னேழிலுற்று வனுதினம் பார்வையாகில்
பங்கமாய் நாளின்மாய்வன் பாவமுன் பிறந்தோர்விர்த்தி 69

மடிகுவா ரென்று சொன்ன மற்றுமவ் வர்க்கங்கேளும்
கொடியிடை தாயின்றந்தைக் குலவிய வேகனாகும்
துடியிடை தென்பால்விர்த்தி யுயார்ச்சியாம் கீழ்மேலாகும்
வடிவுள்ள தந்தைதானும் வனமிலான் குடும்பம்ரெண்டே. 70
கலைமதிக் கர்மமாகக் காரியும் நோக்குமாகில்
பலமதுகுறையும் தாய்க்குப் பற்றிய கர்மமுண்டாம்
நிலையில்லை வாரமொன்றில் நிச்சய மரணமென்று
கலைதனை யுணர்ந்தநந்திக் கழறிடும் பலனிதாமே. 71
ஜென்மாதி யுச்சனாகச் சேர்ந்திடிற் பலனைக்கேளும்
தன்மமே யுடையதந்தைத் தரித்திரமில்லானென்க
வின்னமாம் பிதாவினுக்கு மிகுத்திடும் தாரம்நான்கு
பின்னமாம் சகோதரங்கள் பெலமில்லை யேகனாமே. 72

*சிம்ஹ மூன்றா மோரையின்பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## சிம்ஹ நான்காமோரையின் பலன்

பங்கமிலா சிங்கத்தின் நான்காவதோரை
பலமுடனே ஜனித்தோற்கு தென்வடலாம்வீதி
துங்கமுடன் மேல்முகப்பு வெதிரினிலேசந்து
துணைவடபான் மனையீனம் சொல்லக்கேளும்
மங்கலமாய் வாழுமனைத் தென்பால்விர்த்தி
மன்னவர்கள் மளைவடமேற் காகுங்கண்டீர்
சங்கரன்றன் னருளாலே பூர்வத்தோடுத்
தயங்காமல் வாழ்வரெனத் தனித்துச்சொல்லே. 73

### வேறு

நிலைதருஞ்சிங்கம் நான்காவதோரைநிலையதாய் ஜனித்தஜாதகற்குக்
கலைதனத்ததிபன் பார்வையா மிதற்குக் கருதுவ வீதிகீழ்மேலாம்
மலைவுறாதே கேளரசனேயெதிரில் மன்னர்க ளாலயமுளதாம்
சிலைதிசைதனிலே ஆதீனமொன்றுத் திரம்சொல்வரிந் நிலைப்பலனே. 74

### வேறு

கதிர்மதியுந்தி பார்வைக்கலந்துட னிருக்கப்பூமி
யெதிரினி லிருவர்க்காகு மிடரில்லைக் கீழ்பால்விர்த்தி
மதிவிரயத் துள்பின்னும் வரும்விரயத் தோன்பார்வை
அதிபனால் மேல்பான்வீடு மமர்ந்திடும்பாழதாமே. 75

ஐந்தினுக் கைந்தைப்பாபர் அமர்ந்திட வலதுநோக்க
முந்தியப் பிதாவுக்கேதான் முற்றிலும் தலமிரண்டாம்
பிந்திய தந்தைகாலம் பெலன்ரெண்டு விர்த்தியொன்றாம்
சந்ததி யொருவர்க்கில்லை தரும்பெண்பால் விர்த்தியென்க. 76
சந்திரர்க்க கைந்தாமாதித்தரும் புந்திக்கைந் திடத்தோன்
வந்திடும் பஞ்சமத்துள் வரும்பாபர் சுபரும்பார்வை
சொந்தமாய் நிற்கவிவ்வாற் சூழம்மான் விர்த்திமூன்று
முந்தியப் பூர்வம்விட்டு மூன்றாவதிடத்தில் நிற்பார். 77

வேறு

வாகனப் பலன்களிது நிலையோகில்
வருஞ்சிங்க மதில்நான்கா மோரையென்க
பாகானநிறஞ் சிகப்புருபமது நீண்டே
பற்றிநிற்பன் துடையிற்மச்சமுளனாமென்ப
தேகாதி சுகமுள்ளான் செல்வமுளனாகும்
சிறந்தைந் தேழினிற்கண்டந் திரமாயோதும்
போகாது சுகமேன்மை யுடையச்செல்வன்
பொருந்தும் வயதறுபதல்லால் புகழுமேழே. 78

வேறு

தனமுளோன்திரத்திலுபயத்துள்ளோர்கள் சார்ந்துடன்பார்வையங்கிருக்க
மனமதுநல்லனிருவித்தையுளனாம் வருவது கோமளவாக்கு
கனமுளன்பொருளால் விர்த்தியுமுளனாங் கதித்திடும்குடும்ப விர்த்தியுமாம்
தினகரன் பார்வையிருந்திடிற் மேன்மை செல்வீக மிகுதிகா ணென்னே. 79

வேறு

திருதியந் தனக்குப்பின் மூன்றாமாதித்திரத்துளோன் பார்வை யங்குறினும்
வருமிதில் பலன்கேள் நிலமகன்றனக்குவருமூன்றா மதிபனோ டடுத்து
பெருகிநின்றிடிலோ சகோதரமாறுப் பெலமுடனாண்மூன்றுநிலைமை
குருகியப்பெண்பால்விர்த்தி யொன்றுளதாங் கூறுவரிந் நிலைப்பலனே. 80

வேறு

நாலாதிபனுக்கு நான்கு நலஞ்செவ்வாய் தனக்குநான்கு
மேலாகும்சுபர்கள் பார்வை வேந்தர்நோக் குண்டாமாகில்
சேலமாமிதில் யோகங்கள் திறமையா பிரண்டாண்டப்பால்
மாலவன்றிசையிற் பாக்கிம்மனைகளு முண்டாய் வாழ்வன். 81

வேறு

நலமுடன்நான்கு வதற்காறாமாதி

நலமொன்பானொன் றுரைத்திடுதல்
தலமதிற்குருவின் பார்வையேயிருக்கின்
தாய்நிலைவர்க்கம் நற்சுகங்கள்
குலமதில் குடும்பவிர்த்தி நற்சுபங்கள்
குணமில்லையென் றுரைப்பதுகாண்
நிலையில்லையன்னை தனக்குமேரோகம்
நிலைபத்தாமாண்டிற் கண்டமுமே. 82
கண்டமொன்றுரைத்த தெவ்விதமிதற்குக்
கர்மமுண்டோ யிதிற்சொல்லும்
கொண்டநான்காதி யதற்காறாமாதிக்
கோளாறா மாதியுந்திரமாய்
துண்டதாம்பார்வை யிருந்திடிலன்னை
சூழ்ந்திடுங்கண்ட மென்றுரைத்தோம்
தொண்டர்கள் சூழு மவிழ்தத்தால்சாந்தி
சுகமெனப்படு மதிமூன்றில் 83
மூன்றாப்பாற்செல்வ மோங்கிடுங்கீர்த்தி
மொளிகரு மனைகட்டடங்கள்
தோன்றிடும்வயது விருபதல்லாது
சுகமொடே ழாண்டினிற்செல்வம்
மான்றலைகொண்ட விராசியிலன்றி
வருமொன்பா னிடத்தினில்மன்னன்
சேர்ந்திடுங்காலந் தன்னிலேமிக்கச்
செல்வமிவ்வா றெனச்செப்பே. 84
அன்னைக்குக் கண்டம் மாரகமுரைக்கி
லறிவதோ ரேழாவ தாண்டிற்
உன்னியக் கண்ட மாரகமோதும்
வுறுதிகாண் வயிற்போக்கால் துன்பம்
வின்னமே யன்னை வர்க்கமே தோஷ
மிகுவன்னை வழியினிற் பூமி
பன்னிய வழக்கா மதிற்பொருள் விரயம்
பாலகன் றனக்கிந்த நிலையே. 85

### வேறு

பாகமா மைந்துக்கைந்து பலன்றனை யறியவேண்டில்
சோகமில்லாமற் கேந்திரம் சுகமுடனிருப்பாராகில்

வேகிதானேக வாண்பால் விதித்திடல் பெண்பால்ரெண்டு
சோகமில்லாம லேகன் சுகமுட னிருப்பானென்னே. 86

வேறு

ஆறாதிபதிக்குப் பின்னாறாமாதி யமர்ந்தகோள் பாபிகள்சகிதம்
கோரகநிற்கில் ஜாதகன்றனக்கு நிலையுமூன் றிடத்தினிலருணமாம்
கூராகமுப்பதாண்டினில் நிவர்த்திக் கூறுவர் நாற்பதில் ரோகம்
மாறாதுசுகங்க ளிருக்கினும்ரோகம் வலுத்திடமரணமட் டென்க. 87

வேறு

சுகந்தரு மேழாமாதி சொல்வது மதிக்கேழுள்ளோன்
ஜெகந்தனிற் சுபரும்பாவியுஞ் சேர்ந்ததால் தாரமேகம்
அகந்தனிற் செல்வமுள்ளாள் அதிகார வாக்கு முள்ளாள்
முகந்தனிற் வலதுபக்க முறுமச்ச மருவாமென்னே. 88

அரிதல்காண் களத்திரத்தா ளதிகார வாக்கென்றீர்முன்
தெரியபின் னதனையோதும் திறமிதிலரசே கேளாய்
வரமுள தனாதிமன்னன் வரும்பார்வை கோணமேறில்
கரமுள வாக்காமென்றுக் கண்டித்துச் சொல்வாய்தானே. 89

சொல்வது கீழ்மேல்வீதி சூழ்வட பக்கம்வீடாம்
வெல்வது வெதிரில்மன்னா மிகுநாற்கால் மனையதாகும்
தொல்லையாம் மெற்பாலீன சூழருகினிலேசந்து
எல்லையிற் கீழ்திசைக்குள்ளிருமனைக் கோவில்சொல்லே. 90

சார்ந்திடும் சப்தமத்தின் தந்தையின் சகோதரங்கள்
நேர்ந்திடும் விர்த்திரெண்டு நிலையொன்று செல்வமென்கச்
சேர்ந்திடும் மொன்றுபெண்பால் சுகமதில் நிலைக்கும்விர்த்தி
மார்ந்திடும் நிலைபூர்வீகம் வரும்நிலை மூன்றாமென்னே. 91

வேறு

நிறைந்த மதிதனக்கு மூன்றாமிடத்தை மன்னா
நிலமகன் றன்பார்வை யதில்நிறைந்திருக்கில்
அரைந்திடுதல் சகோதரங் களாணிரண்டே சொல்வ
ரதில்பெண்பா லிரண்டாகு மறியக்கேளாய்
குறைந்த மதியாகிநிற்கி லாண்பா லொன்று
கூறுவது பெண்ணிரண்டுக் குணமா யிவ்வாறு
சிறந்துவருங் குடும்பமது செல்வங் கீர்த்தி
சிறப்பாகப் பாதிநாள் சிறக்கு மென்னே. 92

குறிப்பிடினும் பெண்பாலின் றந்தைவர்க்கங்

கோள்கலகஞ் சத்துருக்கள் கொடுமையுள்ளார்
தறிப்படுங்காண் செல்வமெல்லாம் பாகத்தாலும்
சஞ்சலமாய் குணத்தாலுந் தவறிப்போகும்
நெறிப்படுங்காண் தலபேதமாறி நிற்பார்
நிலம்தந்தை வர்க்கத்தில் நிலையொன்றில்லை
உறிப்பது காண்நாளுக்கு நாளாய்ச் செல்வ
முணர்வென்றுமில்லையிது வுறுதிகூறே. 93
கருதியே சுபமுடிக்குங் காலந்தன்னை
கணிதத்தா லறிந்திடவோர் கணிதங்கேளாய்
பருதிச் கேழாமிடத்துக் சேழாமாதி
பற்றியதோ ருபயத்திற் பரவுங்காலம்
வருமிதிலோ ராண்டிருபத் தொன்றில்தானே
மணமுடிப்பலன் வருங்கடகத் திசையிற்பெண்பால்
குருகியதோர் செல்வமுள்ளா ளிவ்வாறென்றுங்
கூறுவதின் னிலைப்பன்காண் குணமாயோதே. 94

வேறு

எட்டினுக்கெட்டு மதிதனக்கெட்டு விணங்கிய நீலனுக்கெட்டு
திட்டமாயிவர்கள் கேந்திரகோணஞ் சேர்ந்துட னிருப்பாரேயாகில்
கெட்டிடாதிதற்கு வயதுமேதீர்க்கங் கண்டமேயீ ரேழாமாண்டில்
துட்டர்களாலும் நாற்காலாற்றுன்பம் சூழ்ந்திடு முப்பதிற்றானே. 95
மேவியதொன்பான் பலன்றனையறிதல் மிக்கபாக் கியாதிலாபாதி
தாவியமதிக்கு பாக்கியத்ததிபர் சனிராகு சகிதரேயாகின்
ஏவியதடிமைபொருள் விர்த்திசுகங்களின் பமாந்தைக்குவோதும்
காவியந்தணித மிறந்திடவல்லன் கன்னியர்நட்புள னென்னே. 96
பேதமொன்றில்லை தந்தையின் பலன்கள் பெருகியஞானக் கேள்வியனாம்
நீதியுமுடைய னரசர்சன் மானன் நிலையுள்ள பூமியுமுடையன்
பாதிநாள் பூர்வம் விட்டுமேயிருப்பன் பற்றிய வயதிருபதனில்
சாதிநட்போர்ச் சார்ந்துடனிருப்பன் தருஞ்சுப முடிந்தபின்கர்மம். 97
கர்மமென்றோத மெவ்விதமென்னிற் காளையின் சகோதரன் றனக்கு
வர்மமாய்மரண மனையைவிட்டேகல் வருமன்னிய தேசசஞ்சாரம்
தர்மமாந்தனா திசகிதராய்ப்பார்வைச் சார்ந்திடிற்ஜாதகன்றந்தை
கர்மத்தினருகேவுடன்செல் வனிவ்வாறு கணிதத்தாலெடுத்துரைப்பதுவெ 98
காரியோடரவு மதியுடன்சகிதங்காரியத்ததிபதிபார்வை
வேரிலாதிருக்கின் கர்மம்ரெண்டுளது மிகுவன்னை தந்தைகாணல்லால்

நேரினில் புத்திராள் வாக்கத்திற்கர்மம் நிலைமூன்று முடித்திடுவன்காண்
மாரியப்பொருள்கள் தொழில் பூமிவித்தை வரும்வாணி பத்தினாலென்னே. 99
கூடியலாபம்பலனெவ்வாறென்னில் குணம்புந்தி நிலமகன்பார்வை
நாடியக்கேந்திர கோணத்திலிருக்கில் நன்மைகாண் சிலைதிசைலாபம்
தேடியத்தொழிலால் விர்த்தியுமேன்மை ஜெகமதிற் சுகலாபமுளனாம்
வாடிடலாப மடைவன்காண்செல்வம் வருமிவ்வாறு பலனெனவுரைத்தார். 100

**வேறு**

கொண்டவிரயத்தானாதி குளிர்வெண்மதியுந்தான்சேர
கண்டீர்பலன்கள் சுபவிரயங் கருதுமனைக்கட்டடவிரயம்
தொண்டர்சூழுமாலயங்கள் துணையாமனைகள் விர்த்தியதாம்
துண்டாய்தனித்தேதானிருப்பன் சூழ்வயது முப்பதிற்கே. 101

***சிம்ஹ லக்கின நான்கு ஓரைக்கும் செய்யுள் - 101***
***முன் லக்கினம் 3-க்கு 249***
***ஆக மொத்தம் - 350***
***சிம்ஹ லக்கினப் பலன் முற்றிற்று***

❀ ❀ ❀

## கன்னியோதயம்

கன்னியெனும் லக்கினந்தா னுதயமானால்
கனமாகத் தென்வடக்கு வீதியாகும்
உன்னிதமாம் கீழ்வாசல் மேற்கேதோப்பு
வுயர்ந்தபதி யாலயங்க ளொன்றேதோன்றும்
மன்னியமாய் கீழ்புறத்திற் குளம்நீரோடை
மாவிருக்ஷம் தென்கமுகுத் தோற்றும்பாரு
மன்னவனே திடமறிந்து புவியினோற்கு
மனமகிழ வுரைத்திடுவாய் நந்திவாக்கே. 1

### கன்னியில் பாவாதிபர்கள் நின்ற பலன்

மாதுவிற்புந்தியுமே ஆக்ஷியாய் ஜனனம்
வரும்வித்தை யன்னைவர்க்கம் வலுவில்லையென்க
ஓதுதனத் தாதிபதி நீசமதாய்க்கன்னி
யுற்றபலன் மனைவிபகை யுறுஞ்சுகமே கெடுதி
மாதுவழக் குடையவன் காண் வஞ்சகர்க்குவஞ்சன்
மன்னவர்கள் பகையுடையன் மருவியதந்திரத்தன்

கோதியமூன் றாமாதி நிலமகன்றான்நட்பு
கூடிநிற்கில் சகோதரங்கள் குணமில்லையென்பதுவே. 2
தீதிதுகா ணான்காதி மன்னவனார்நட்பு
சேர்திருக்கி லன்னைசுகந் தீரவித்தையுளனாம்
யோதியபஞ் சமத்ததிபன் நீலன்றானட்பு
வுறுதிகா ணம்மான்க ளுடன் தோஷமுண்டாம்
தீதாகும் புத்திரர்கள் தனையீனஞ்செய்யும்
சிறப்பில்லை யாறாதி யாகிநிற்க
ப. திநாள் ருணம்பட்டு விருப்பான்றந்தை
பாக்கியங்க ளீனத்தால் பலவிரயஞ்செய்வன் 3
வேதியரே ழாமாதி கன்னிதன்னில்
மிகுநட்பா மிருதார மல்லாற்கேளும்
பேதியா மதிலொன்று விர்த்திமற்றொன்று
பெலமுடனே திசைவருங்கால் பேதையவள்கர்மம்
ஆதியாமட்டமத்தோன் செந்தீவண்ணன்றா
னவர்னட்பாய் மாதுதனி லமர்ந்தாராகி
வாதிகளைச் சேர்ந்திருப்பன் மன்னவர்கள்நட்பன்
வருந்தர்ம விரயமதை வலுவாகச்செய்வன். 4
சோதிகாண் பாக்கியாதி பதிகேந்திரத்தில்
சுகவீன மாகுமா மிடர்துன்பந்தந்தை
பேதிகாண் மனங்கலங்கப் பூர்வமதுநாசம்
புண்ணியத்தைத் தான்மறப்பன் பொருந்தாச்செல்வன்
நீதிகாண் பத்தாதிக் கேந்திரத்திலாக்ஷி
நிலையாக அன்னியகர்மங்கடனைச்செய்வன்
ஓதியலா பாதிபதி கேந்திரத்திற்மதியே
யுறுநட்பாய் தானிற்கி லுணர்வுடையச்செல்வன். 5

## வேறு

வெய்யவன்விர யாதிபன்லக்கினம்
பையத்தந்தைப் பதியைவிட்டன்னிய
வெய்யதேசம் விளங்குவன்மன்னனாய்
வையகத்திற் வகுத்ததிதுவதாம். 6

## (இரவி நின்ற பலன்)

ஜெயமது கன்னிதன்னிலேயிரவி சிறப்புடன்ஜெனித்தஜாதகற்கு
பயமதுவில்லைபாலகன்றனக்குப் பலன்பூர்வந்தானில்லையன்றி
அயல்மனைதன்னில்வாசமாய்வயதோ ரன்புடன் முப்பதாண்டிற்மேல்
இயல்பதரம் பூமிசுயார்ச்சிதந்தேடி யினியதாயிருப்பனிவ்விதமே 7

## (மதி செவ்வாய் நின்ற பலன்)

மதிஜென்மமாககன்னியிற்றானே வந்த ஜாதகற்கினிபலன்கேள்
அதிபனாந்தந்தைஜாதகன்வயதோ ரைந்தினிற்கண்டமொன்றுளது
பதிதனிற்செவ்வாய்நின்றிடில்மன்னா பார்தனிலரசரால்மேன்மை
சதிருடன்மேன்மைமிகுதியாய் பூமி சகோதரர்திருதியமாமே. 8

## (புதன் நின்ற பலன்)

கன்னியிற்புந்தி ஜெனனமாய்வந்தால் கணிதநூல்கல்விமானாகும்
வின்னமேயில்லையன்னைவர்க்கத்தில் மேவியதோஷமேசொல்க
பன்னியவுருவஞ்சமன தாங்கரத்திற் பற்றியதழும்புடையவனாம்
உன்னியமனை யேயிருபாகமென்று வோதினார்மன்னவன் றனக்கே. 9

## (குரு நின்ற பலன்)

மந்திரிமாதுதன்னிலேயிருக்கின் யனைமாடமாளிகையுண்டாம்
தந்திரமுள்ளன் அதிகாரச்செல்வந் தழைத்திடும்புத்திராளற்பம்
சிந்தையிற்சுகவான்பசுகன்றுநாற்கால் சிறந்திடநிலையுளனாகும்
வந்திடுமித்திரநட்பினையுடையன் மந்திரியாகுவனென்றே. 10

## (சுக்கிரன் நின்ற பலன்)

சுங்கனேகன்னிஜெனனமதாகச் சுகமுடன் ஜெனித்த ஜாதகர்க்கு
பங்கமொறில்லையாதீனபேதம் பாக்கியம் சுபத்தினாற்விரயம்
சங்கையொன்றில்லை களத்திரவற் கந்தழைத்திடாசெல்வங்கள்பேதம்
மங்கையர்வேறா மன்னியர் தாரம் மருவியே பாக்கியம் போமே. 11

## (சனி நின்ற பலன்)

காரியே கன்னிதன்னில் கலக்கமில்லாமல் நின்றால்
மீரிய செல்வமுண்டா மேன்மைசத்துரு ஜயிப்பன்
பாரினில் புத்திரசங்கை பலவழக்கினை யுரைப்பன்
தேரியதலத்திற் புத்திரன் சிறப்புட னிலைப்பானென்றே. 12

## கன்னி முதலோரை பலன்

தெரிவைதனில் முதலோரை ஜெனித்தபேர்க்கு
திறமாகக் கீழ்மேலாய் வீதிதோன்றும்
புரியமனைத் தென்பக்கம் வடமுகப்புப்
பூதலத்தி லிரண்டுமனை யெதிரில்நிற்கும்
வரியகேள் கீழ்பாகம் சந்துண்டாகும்
வருமேல்பா னிரண்டுமனை யொன்றுபாழாம்
தெரிவைகேள் பூர்வீகம் பாழதாகும்
சிறந்திருப்பார் தலபேதந் தலங்களென்னே. 13

துலக்கமாய் கன்னிதன்னில் முதலோரைக்குச்
சொல்லுவதைக் கேளரசே வுபயமதிற்சரமாம்
கலக்கமிலா சுபர்பாவிக் கலந்துபய மதனிற்
கண்ணுற்றால் கணிதமதுக் கருதக்கேள் புவியிற்
இலக்கமதாய் வடிவுடைய வுருவிற் சமனாவன்
யின்பமுள்ள னினியசுக முடையவன்கா ணின்னம்
புவிக்குளே யோகியரைப் புரிந்தடுத்து விருப்பன்
பூவையரைப் பகைசெய்வன் புவியிலிவ்வா றோதே. 14

கன்னியதன் முதலோரைக் கரசேகேளாய்
கழுத்தருகே வலபக்கங் கருத்த மச்சம்
வின்னமில்லை யாயுளது தீர்க்க முண்டாம்
விரும்பக்கேள் வருடமொன்றில் மெலிந்தகண்டம்
அன்னியர்தம் மனைசேரு மாக்கினையிற் றந்தை
யன்னைவர்க்கந் தனிற் செல்வ னைந்தா மாண்டிற்
உன்னிதமா மிப்பலன்க ளிருக்கின் முதலோரை
யோதுவர்கா ணிப்பலனை யுறுதியுடன் கூறே. 15

கூறக்கேள் தந்தையொடு தந்தை மூவர்க்
குணமுள்ள தத்தைகாலத்தில் ரெண்டு
சேரக்கேள் பாகமில்லை விர்ததியொன்று
ஜெகமதனிற் தேசசஞ்சார மேகன்
தூரமது பிரயாணங் கட லோரைத்தில்
துலையான பொருள்சித்து சுக முள்ளோனாம்
பாரதனில் தர்மவான் ஞானியாகும்
பாரியா ளிருவரென வொருவர்க் கோதே. 16

## வேறு

உதியதேளன்னை வர்க்க மோதுவேன் பரிக்ஷித்தேகேள்
சதுர்மதிக்கைந்துக்கைந்து சனிபாவிசகிதராவர்
விதியிதாலம்மான்வர்க்கம் விளங்கவேமூன்றுண்டாகும்
பதியினிலம்மான்ரெண்டு பலவினமடைவரென்னே. 17
அடைகுவதெவ்வாறைந்தோ னாக்ஷியுச்சங்களாகில்
தடையதிலீ னமென்ன சாற்றுவீர் விபரமெல்லாம்
திடமுடனரசேகேளாய் திரஞ்சரந்திரங்களாக
படையுபயக்கோள் பார்வை பற்றியேயிருக்கிற்செல்வம். 18
செல்வமாயிருந்தும்பின்னால் சிறப்பில்லையம்மான்வர்க்கம்
வல்லபமனையும்பாழு வலுவில்லைவீதிகீழ்மேல்
தொல்லையாம்பிரிவுமூன்று சொல்வதுகங்கைகோவில்
யெல்லையின்றென்கிழக்கி லிருநிலையென்று சொல்லே. 19
அஞ்சினில் சனியுமேழில் அமரர்தங்குருவுமாக
கொஞ்சியேயிருப்பாராகில் கூறிடும்பலனைக்கேளும்
தஞ்சமாம் புத்திரனேகன் தந்தையின் ராசியாகும்
வஞ்சியுமொன்றுண்டாகி வலுத்திடாசிறப்புற்றானே. 20
அஞ்சினைக்காரிதானு மடர்ந்துமே நோக்குங்காலம்
மிஞ்சிடும் ஜாதகற்கு மிகுத்திடுநாற்பானப்பால்
எஞ்சியத்தொழிலும்போகு மேறியவாகனங்கள்
மிஞ்சியப்பொருள்களெல்லா மிக்கவேவிரயமாமே. 21
நாலினுக்குடையோன்றானும் நன்குரவமைந்ததாலே
கோலுநன்மனை யைவிட்டுக் குறிப்புடன்வடபால்சென்று
ஏலவுங்கோவில்மண்ணி லிருப்பதுநிசமேயல்லால்
சாலவுஞ்சன்மார்க்கந்தான் சஞ்சலமடைவன்றானே. 22
சொல்வதுகளத்திரத்தின் சுகத்தினையறியக்கேணீ
வெல்வதுசப்தமாதி விரும்பியவுபயகொ்ப்பம்
தொல்லையாம்தாரமொன்று சொல்வதுவர்க்கந்தன்னில்
இல்லையேசுகங்களற்பம் இடர்பிணித்துயரமாமே. 23
தொல்லையாந்தாரமொன்று சொல்லியதெவ்வாறுசொல்லும்
வெல்வதுசப்தமாகி விரும்பியவுபயகர்ப்பம்
வல்லபமுதல்தாரத்தில் வந்திடுமக்கள்ரெண்டு
சொல்லவும்விர்த்தியில்லை சோதித்துச் சொல்லக்கேளே. 24

சொல்லுவேனாணொன்றாகும் சுகமுடன் பெண்ணொன்றாகும்
கொல்லுமேயிருவரையுங் குணமில்லைவிர்த்தியாக்கா
நல்லுவேன் மறுதாரத்துற் நாரிகள்நால்வாரகும்
வெல்லென புத்திராளற்பம் விளங்கியப் பலனைக்கூறே. 25

## வேறு

தனமதிற்பலன்கேள்வித்தையுமுள்ளோன் தனமுள்ளோன் செல்வீகனென்க
மனமதில் தர்மசிந்தையாஞ்சீலன் மன்னர்கள் பேட்டியுள்ளோனாம்
சினமிலானேத்திர பின்னமேயுளனாஞ் சிறந்திடும் வித்தையிற்செல்வம்
கனமுளன்கங்கையாடவும் பிரியன் கன்னியர் பொருள்வருமென்னே. 26

## வேறு

நேத்திரத் தானந்தன்னை நின்றுமேசுங்கன் பார்க்கில்
நேத்திரம் பின்னமில்லை நிலைபூனைக் கண்ணனாகும்
காத்திரம் பிதுரின்வர்க்கங் கதித்திடு மிருவராகும்
சாத்திர மணமிரண்டு சார்ந்திடும் பிதாவினுக்கே. 27

## வேறு

வீரிய மூன்றா மாதியின் பலன்கேள்
மிகு தைரியன் சத்துருஜெயத்தன்
பாரினில் முன்னோன் விர்த்தியே யுண்டாய்
பதிதனில் சகோதரமெட்டு
கூறினேன் மூன்று விர்த்தியாய் நிலையாங்
குணமுடன் செல்வீக னென்க
மீரியக் கர்ண பூஷண முடையன்
மிகுத்திடும் வெள்ளி பாத்திரமே. 28

## வேறு

நலந்தரும் நான்குபூமி நன்மையாம் வாகனங்கள்
பலந்தருஞ் சுகங்களுண்டாம் பால்பசு கன்றுண்டாகும்
தலந்தனிற் பேதமுண்டாந் தருமிதுனத்தில் பூமி
சலந்தருங் க்ன்னிபாகம் தரைமிசைநிலைப்ப ரென்னே. 29
நாலுள்ளோர் சரத்திலின்று நன்மையாங் கோள்கள் கூடி
மாலவன் பார்வையங்கு வந்திடிற்பலன்கள் கேளாய்
சேலுடை யவரால்பார்வைச் சிறந்திடிற் முப்பத்தொன்றில்
யேலுவ ரன்னைகண்ட மியம்புமிப்பலன்க ளாய்ந்தே. 30
ஐந்துட னைந்துவீட்டா லரியபண் டிதனுக்கைந்தால்

மிஞ்சிய வம்மான்வர்க்கம் விளம்புவ னரசேகேளாய்
கொஞ்சியக் குடும்பவிர்த்தி குணமுடன் விர்த்திநான்கு
வஞ்சனை யுடையராகும் வாக்கத்திற் சுகங்கள் தாழ்வே. 31
தாழ்வதில் விர்த்திமூன்றுந் தரைமிசை விளங்கிநிற்கும்
வாழதி லம்மான்ரெண்டு வலுவொன்று அன்னியதேசம்
ஆழியின் றுரும்புபோல மலைந்திடு மாண்டேழுக்குள்
சூழப்பா பதிமூன்றின்மேல் சொல்வது செல்வமென்னே. 32
சந்திரன் றனக்கைந்தாதி சார்ந்தலக் கினத்திற்கைந்தோர்
விந்தையாங் கேந்திரகோணம் விரும்பிய சுபர்கள்பார்வை
வந்திடிற் புத்திரரைந்து வலுவுண்டாய் நிலைத்திருப்பார்
சுந்தர மாகமூன்று சொல்வது செல்வமென்னே. 33
அரிவதோ ராறாமாதி யதற்காறோன் பாவியோடு
தெரிவது ஆக்ஷிப்பார்வை சிறப்புட னிருக்குமாகில்
பிரிவது சத்துருக்கள் பெலமில்லை ருணங்களில்லை
கரியவன் பார்வைதன்னால் கலகமொன் றில்லையென்னே. 34
ஆறினிற் றேய்மதிதா னமர்ந்தஜா தகற்குக்கேளும்
வீரியப் பீசந்தன்னில் வேதனை மிகவுஞ்சாற்று
சீரிய மகவுக்கேதான் சேர்ந்திடும் பாதையெல்லாம்
கூறியப் பாவிபார்வைக் குணமதுப் பாதியாமே. 35
தலமதி லேழாமாதி சகிக்கேழுப் பிருகுக்கேழு
பலமதாய் மனையிற்பாவிப் பற்றியே யிருக்கிலேழோன்
கலகமாய் பூர்வம்விட்டு கன்னியின் றிசையில் நிற்பான்
பெலமுடன் சுபரால்பார்க்கப் பெருஞ்செல்வனென்று சொல்லே. 36
அட்டமப் பலன்கள்கேட்கி லாயுளோ வறுபத்தொன்று
சட்டமாய்க் கண்டமேழு தையலா லிருபத்தாறில்
தொட்டிடுங்கண்டமுண்டாம் சூழ்முப்பான்வயதிற்செல்வம்
திட்டமா யோகம்பூமி செல்வமும் வித்தையாமே. 37

## வேறு

பாக்கியப்பலன்க ளறிகுவதொன்பான் பற்றியநிலையதுபூர்வம்
நீக்கியசுயார்ச்சித பூமியேநிலையாம் நீள்மிதுனந்தனில்விர்த்தி
தோக்கிய சுயார்ச்சித நிலையிருவிதமாம்சொல்வது வீதிகீழ்மேலாம்
சேர்க்கையாந்தென்பான்மனைவடமுகப்புத்திரமுள நிலையெனப்படுமே. 38

## வேறு

கன்மாதி யுச்சனோடு கலந்துமே யெட்டில்நிற்கத்

தன்மாதி ஆக்ஷியாகச் சார்ந்திடப் பலனைக்கேளும்
பின்னமே மன்னனீசம் பெற்றிடுங் காலந்தன்னில்
சொர்ன்னமே யுடையதந்தை சொர்க்கமே செல்வனாமே. 39
கருதிய பத்தாமாதிக் கனகனால் பார்வைகூடித்
திருதியத் தோனால்சேர்கைத் திரமுடனிருக்கில்பூமி
வருமதில் வித்தையாலே வாலிபந் தன்னிற்செல்வம்
தருமன்னிய தேசஞ்சென்று தனமதை யடைவன்றானே. 40
நண்ணிய லாபாத்தாதி நாலாறு பத்தாமாதி
திண்ணமாய்க் கூடிக்கேந்திரம் சிறப்புட னின்றாராகில்
வண்ணமாயைம் பத்தேழிற் வருஞ்செல்வ முண்டாய்வாழ்வன்
புண்ணியத் தரசேநந்தி புகன்றதை யறிந்திடாயே. 41

வேறு

விரயாந்திரமே வுபயத்துள்ளிருக்க விருப்பமாய் மனையதுவிர்த்தி
மறையவர்நட்பு மன்னர்கள்சினேகம் வலுவொடுசௌக்கியமுண்டாம்
தரைமிசைசயன மெத்தைமேடையுமாந் தலபேதசஞ்சாரமுளனாம்
குறைவிலாச்செல்வன் மேக்ஷாசிந்தையனாங் கூறுவரிந்நிலைப்பலனே. 42

வேறு

மாதுக்கே நான்கினுக்கு நான்காமாதி
வரும்பாவி சுபர்கேந்திரம் வலுவாய்நிற்க
தீதிதுவே சொல்வதுகே ளேழாமாண்டிற்
சிறந்தகண்டங் கொர்ப்பத்தால் தியக்கமுண்டாம்
பாதிநா ளன்னைவர்க்கம் சுகங்கள்காட்டும்
பாலகனே பிற்பலன்கள் பழுதேயாகும்
ஓதியதிவ் வாறுநிலைமை யறிந்துக்கொள்வா
யுண்மையதா மட்டமத்தி லுணர்வுகேளே. 43
கூறிதிலே யன்னைக்கு ரோகமொன்றுக்
கொடுமையிதாங் குலையுந்தி வயிற்றிற்றுன்பம்
தீரமதாமன்னோயா லவுழ்த முண்ணல்
சிறந்துவரும் பாதிநாள் பின்னும்ரோகம்
நிறைந்தபல னிவ்விதங்கண் டோதுமேன்மை
நிலைசெல்வ மாயுள்வரை விர்த்திமேலுங்
குறைந்திடா யோகபல னன்னைதன்னால்
கூடிவரும் பொருள்விரயங் குணமாயோதே. 44
மதிதனக்கு நான்காறு ராசிதன்னில்

வருமந்தன் வருங்காலம் வலுவாம்ரோகம்
பதிதனைவிட்டேகல்யின்னும் பதிவந்து சேர்தல்
பார்க்கவன்றன் றிசைப்பாதி யதிற்பாதிமட்டும்
நிதியுடனே யன்னைக்குக் கண்டம்ரோகம்
நிலைக்குமிதி லப்பாலோர் நிலைநில்லாது
கதியுடனிக் கணிதமதை யறிந்துரைத்தே
கன்னிக்கும் பலனிவ்வாறு கருதிக்கேளே. 45

## வேறு

சிறப்புடன் களத்திரத்தின் திரவீதி வடதெற்காகும்
குறிப்பது மேல்முகப்புக் கொடியவர் மனைகிழக்காம்
நெறிப்படும் தென்கீழ்பாகம் நெறியுளவாலயஞ்சொல்
பிறிப்பது வெதிரின்பக்கம் பெலவீன மனையதாமே. 46
மருவிய மனைக்குமூவர் வளமையாம் பாகமென்க
திருதிய மதனிலொன்று தியக்கமாம் குடும்பம்பெண்பால்
குருதிய செல்வமென்றுக் கூறுவர் மனையில்பேதம்
தரும்நிதி பொருள்களெல்லாம் சமமென சாற்றல்வேண்டும். 47

## வேறு

பெலமொடு பெண்ணின் சகோதர முரைக்கில்
பேதமா மாணிரண் டுளது
நலமில்லை பெண்ணில் மூன்றிலொன்று
நாடியரோகமே யுளதாம்
குலமதில் செல்வி ஜாதகன்றனக்கு
கூடிடு மன்னை வர்க்கமுமாம்
துலைதனிற் றென்கீழ் திசைதனிற் பெண்பால்
சொல்லுவ தின்னிலைப் பலனே. 48
நிலையதாம்வயது பதினைந்தா மாண்டில்
நிலைசெல்வம் பதினைந்துக் கப்பால்
கலையொடு வித்தை பூர்வத்தில் நிலைமைக்
கருதிய தெய்வநற்சிந்தை
துலைதனக் கைந்தாம் ராசியிற்றந்தை
சூழ்பத்து வயது மட்டங்கு
நிலையிலா வன்னிய தேசத்தைவிட்டு
நிலைப்பூர்வந் தனிற்சுக மென்றே. 49

### வேறு

அடைவது நிலைகேள்கர்ம மலரிசேய்ப் பார்வையங்கு
உடைவதா லன்னைதந்தை யுறுமன்னியக் கர்மம்புத்திராள்
தடையிலா தைந்துகர்மம் சாற்றுவர் மதிக்குக்கர்மம்
விடைதனத் ததிபன்பார்வை மிகுமிவ்வாறு பலன்களோதே. 50

*கன்னி முதலோரையின் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## கன்னி மிரண்டாமோரையின் பலன்

கண்டிடக்கேள் கன்னிதன்னி லிரண்டாமோரை
கணிதமுடன் ஜெனித்தஜாதகற்கு வீதி
உண்டாகும் தென்வடலாங் கீழ்முகப்பு
உறுதியுட னெதிரில்மனை யுண்டுசெல்வம்
கொண்டிடக்கே ளிருபக்க மனையுஞ்செல்வங்
கூறுவது பூர்வீகங் குணமாய் நிற்கும்
வெண்டிடவே செல்வமதைய நுபவிப்பார்
வேந்தனிட திக்கதனிற் வேடன்கோவில் 51

### வேறு

மீரியக் கன்னிதன்னி லிரண்டாங்கால்
மேதினிதனில் ஜெனித்தோற்கு
தேரியதேகங் கருமைகாண் கொடியே
சிறப்புட னணிந்துமே பிறப்பன்
பாரினிற் றந்தைவர்க்காதி யைந்துப்
பலன்ரெண்டு விர்த்தியிலொன்று
கோரியபாட்டன் பூர்வமே விரயங்
கோள்பகை ருணமெனப்படுமே. 52
படுகுவ தம்மான்வர்க்கங்கள் மூன்று
பலனம்மா னேகனே யாகும்
இடுவது குடும்ப மிரண்டதிலொன்று
யேகனாம் பெண்ணிடம் நிலைப்பாம்
முடிவினிற்கீழ்மேலாம் வீதியின் வடபால்
முனைமனை வீடெனலாகும்
கொடியவர் பார்வைச் கிவ்விதமென்றுக்
கூறுவ ரின்னிலைப் பலனே. 53
பலனது விவ்வாறாயிடின் கன்னி

பகருவா யிரண்டைனு மோரை
கலைகுவதாண்டு மூன்றினிற் கண்டம்
கருதுவர் காரியின் பார்வை
பெலனதுவில்லை பாரறி யரிட்டம்
பேசுவர் தன் மரணத்தால்
சலமதுவ யிற்போக் கரிட்டத்தால் கண்டம்
சாற்றுவ ரிவ்வித மரசே. 54

## வேறு

சந்திரன்னீமாகச் சனிசெவ்வாயதற்க்குக்கர்மம்
வந்திடிற்பலன்கள் சொல்லும் வகையுள்ள பாலனுக்கு
சொந்தமாய்கர் மதிசை சொல்லியக்கடைபாகத்தில்
வெந்திடுமாண் வொன்றில் விளையுமேதீம்புதானே. 55

*கன்னியிரண்டாமோரை பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## கன்னி மூன்றா மோரையின் பலன்

மாதுதனிற் மூன்றாவ தோரைதன்னில்
வலுவுடனே ஜெனித்த ஜாதகற்குவீதி
தீதொன்று மில்லையதிற் பிரிவுமூன்று
திறங்கீழ்மேல் வீதியதில் முக்கட்டாகும்
பாதிபாழாகு மனைத்தென்முகப்புப்
பலனில்லை யெதிர்த்தமனை பாழதாகும்
வீதிக்கு தெதிரமம் னாலயங்கள்
மிக்கதென் பக்கமென வினிதுகூறே. 56

## வேறு

குறிப்புடன் மாதுதன்னதிலுபயங் குறித்திடிலோரை மூன்றாகில்
தெறிப்படுதேககாந்தியுமுளனாஞ் சிறப்புடன் செல்வமுமிகுதி
பொறிப்பிலைபோல விர்த்தியுமுளனாம் பொருந்தியமனமதுநல்லன்
நெறிப்படுமெய்யனிலையுளனாயுள் நிறையிருமுப்பதனோடைந்தே. 57

## வேறு

ஐந்தினுக் கைந்தாமாதி யவர்க்குக் கேந்திரஞ் சரத்தினிற்க
விந்தையாம் பூர்வம்விட்டு வேதியர் பூமிசெல்வம்
சுந்தரமாகத் தந்தை சுயார்ச்சித நிலையிற்செல்வம்
வந்திடு மாதீனங்கள் வலுவில்லை யென்றுகூறே. 58

## வேறு

தருவதுதந்தை காலத்திற்செல்வம் சாற்றுவன் தந்தைக்குத்தந்தைப்
பெறுவதுவர்க்கம் நான்கெனலாகும் பெலன்விர்த்தி மூன்றதிலேகன்
பிரிவதாய்ப்பெண்ணின் வழிசெல்வன்தத்து பேதகமாகியே நிற்பன்
மருவதாந்தந்தை காலத்திலேகன் மருவதாய் நிலையெனப்படுமே. 59
நிலையதாந்தந்தை வீதிகீழ்மேலாம் நிலைதென்பால் மனையின்கீழ்சந்து
விலையொடுபூமி நாரியர்க்கெதிரில் மிகுத்திடுமருகினி லாரல்
தலைமனையருகில் விருக்ஷகந்தேளில் சார்ந்திடும் பாதிமண்மனையாம்
கொலை செய்யுங்கோடியோர்வடதிசையிருப்பர் கொடியதீம்பாவிப்பலனே. 60
நன்மையேசொல்வ தெவ்விதமிவர்க்கு நாடியசுகமெவ்வாறு சொல்லும்
திண்ணமையாம்பாவி சகிதமிங்கிருக்கத் திடஞ்சுக நிலையெங்கேயிதற்கு
வண்மையாயுபயந் தனிற்சரமாக வந்திடில் யோகமேயுளனாம்
தன்மைநற்குணவான் தர்மசிந்தையினான் தையலர்நட்புளனென்னே. 61
வெள்ளியேதனாதி யேழுபத்ததிபர் வெய்யவன் பார்வையேயிருக்க
தெள்ளியவாக்கு வித்தையுமுளனாஞ் சிறந்திடும் தனமதுவிரத்தி
துள்ளியநேத்திரசுகமுளன்பேதஞ் சொல்வதுவைராக்கிய சிந்தை
கன்னியமனத்தன் குடும்பநல் விர்த்திக் கருணையன்றெய்வ பக்தியனாம் 62
ஏறுமூன்றாதி பலனெவ்வா றென்னிலிருமூன்று சகோதரமுளனாம்
மாறுவைந்தாதி யாறாதிசகிதம் வந்திடிற் சகோதரம்நசிக்கும்
தேறுவதிதிற்கே னிலைசகோதரங்கள் திரமூன்று நிலைபெண்பாலொன்று
தேறுவதிதிற்கேவ்வா றடிமைகளும் திறநலடும் நிலையெனப்படுமே 63
விதித்திடவன்னை சுகமுளாளைந்து மிகவேழிற்கண்டமேயுளதாம்
மதிக்காறாமாதிப் பார்வையின் முப்பான் வருமேழில் மாரகமன்னை
பதித்தனர்சகட யோகமேயுளனாம் பற்றியப்பூமி சேர்க்கையனாம்
யெதிர்த்த சத்துருக்கள் பூமியும் பொருளு மிடரிலாதனுபவித் திடுவன். 64
மாதுழவர்க்கந் தந்தைகாலத்திற் வலிவுடன் விர்த்தியேமூவர்
தீதுவொன்றில்லை விர்த்திரெண்டுளதாம் சிறந்திடு மனையிருவிர்த்தி
பாதிநாள்செல்வமில்லையின் பாக்கியம் பலமுடன் பூமியும் சேர்தல்
வீதிகீழ்மேலா மருகினின் மேற்பாலிருமனை வகுத்தது சந்தே. 65
சந்துண்டாமருகி லாலயங் கங்கை சார்ந்திடுமெதிரினிற் பாழாம்
முந்தியபூர்வம் நாசமேயாகு முற்றிலும் சுயார்ச்சிதம் நிலையாம்
சந்திரன்றனக்கு ஐந்தாதிவுபயம் சார்ந்திட னிலையம்மானிருவர்
சுந்தரமாம் நந்தியிவ்விதமாய் சொல்லின ரின்னமுங்கேளே. 66

## வேறு

ஜென்மத்துக் கைந்தாம்வீடு திரம்புந்திக் கைந்தாமாதி
தன்மத்தோ பார்வையங்கு சார்ந்துட னிருப்பதன்றி
நன்மத்தோன் கூடிபார்க்கில் கடையினில் யோகங்காட்டும்
பொன்மதி பார்வையாகில் பொருந்தியப் புத்திரனைந்தமே. 67

யோகமே வம்மானுக்கு வுண்டாகு வயதொன்பானில்
பாகம்நல் பிரிவுண்டாகி பாக்கியஞ் செல்வமுண்டாம்
வேகமாம் பூர்வம் விட்டு விருப்பமா யன்னியதேசம்
போகநற் சுகங்களோடுப் பொருந்தியே யிருப்பானென்னே. 68

சொல்லிய வாறாமதி சுகமுடன் சரத்தின்மூலம்
வல்லப மதிக்காறாறோன் வருஞ்சுகம் சத்துருநாசம்
செல்வமாம் ருணங்களில்லை தீரமாய் ரோகமுண்டு
இல்லையே துன்பமெல்லா மிடரெனும் பகையுண்டாமே. 69

## வேறு

உண்டாகு முபயத்தி லேழுபயஞ்சரத்தி
லுற்றபலன் தாரமது வுண்டாகியீனம்
கொண்ட மனையாளுபய மதிலிளையாள் விர்த்திக்
குணமுடையாள் செல்வமுளால் குறியும்விர்த்தி யுள்ளாள்
கண்டுரைப்போம் வீதியது தென்வடலாங் கீழ்பால்
கலக்கமில்லை வடப்பக்கங் கணிதமுடன் வீதி
துண்டாகு மனைக்கருகே வடமேற்கில் கோவில்
சொல்வரிது நிலையென்பர் துணிவாமிப்பலனே. 70

## வேறு

பொற்புற வட்டமாதி பொருந்தியே கேந்திரகோணம்
நற்பல னாயுள்தீர்க்கம் நலமுடையவரால் பார்வைக்
கற்புளகண்டம்பத்துக் கணிதமா மொன்பா னாண்டிற்
துற்பெலக் கண்டங்கண்டு சுகமெனப்படுமிவ்வாறே. 71

## வேறு

செப்புவதொன்பான் பலனிதிற்றந்தை சிறப்புடன் சௌக்கியமுளனாம்
இப்புவிதன்னிற் சுயார்ச்சிதம் நிலையா யிருந்துமுப் பதின்மூன்றா மாண்டிற்
தப்பிலாக்கண்ட மாரகமொன்றில் தரைமிசை மரணமென்றுரைப்பாய்
ஒப்பியதந்தை பொருளதிற்பகுதி வுருஞ்சுக விரயமாமென்னே. 72

## வேறு

தாரணியில் கர்மாதி பலனறிதல் தொழில்கள்

தரைமிசையிற் வியாபார மூலவர்க்கங்கள்
பூரணமாம் யோகபலன் தர்மசிந்தை யுளனாம்
பொருந்திவருந் தலபேதம் பொருளுமிகச் சேரும்
காரணங்கள் சுபகர்மக் காரிய வல்லவனாங்
கணிதமோ டதிகாரக் காவலனாமென்க
தோரணியாய் வாகனங்கள் மிகவுண்டாமென்றே
சொல்லுவதின் னிலையாகத் துணிவாமிப்பலனே. 73

## வேறு

கணிதலாபாதிசுபரொடுப்பார்வைக் கருதியேயிருந்திடன் பலன்கேள்
துணிவதமந் தென்கீழ் வடதிசைதனிலும் சொல்வதுலாபமே மிகுதி
பணிமிகுதியுமா மாடையாபரணம் பலன்பெண்ணின் வழிதனில் வருத்து
தணிவதாயிருந்த செல்வமுமிகுதி சஞ்சலமிலையெனப்படுமே 74
ஜெயமிலாவிரயாதி பதியுங்கொர்பஞ் சேர்ந்திடின் மனையிருபாகம்
பயமில்லை விர்த்திக் கட்டடமொன்று பற்றியே சேர்ந்திடும் நிலையாம்
அயல்மனைவிர்த்தி யதிற்பாதிசேர்க்கை யமர்ந்திடுங்கட்டடம் நலமாய்
கயலருகினிலே தென்மேற்கிலுண்டாங் கருதுவரின்னிலைப்பலனே. 75

## வேறு

வித்தையில் மேன்மை யெவ்வித மிரண்டோன்
மிகுமெட்டோன் மதிக்கெட்டாமதி
பத்தியாம் பார்வை நின்றிட விதற்கு
பலனெடுத் துரைத்திடும் வித்தை
சித்தியாங் கபடம் வஞ்சக முறைப்பன்
தீரமாய்க் குடும்பத்திற் செல்வன்
மத்தியிற் மன்னா வித்தைகள் கெடும்
வாலிபந்தனிற் வித்தையுளனாம். 76
கூரியதன்னை தனக்குமே ரோகங்
கொடுப்பது வயதுமூன்றாண்டினிற்
நேரினிலரிட்ட கண்டமா மன்னை
நெருங்கிய வர்க்கத்தில் கர்மம்
தேரியதேழா மாண்டினிற் கண்டம்
திரமொன்பான் வயதினில் ருணத்தால்
கோரியதெய்வ மாலயஞ் செல்லல்
குணமதாம் நிவர்த்தி யிவ்விதமே. 77

## வேறு

பேதிலா திதிலன்னை வர்க்கந்தன்னில்

பெலனிரண்டு பெண்ணொன்று பெருகிவருஞ்சுபமே
நீதியாம் வயதிருபத் தென்றில்மன்னா
நிலையாக சுபமுடிப்பன் நேசரோடு
ஊதினர்கா ணிவ்விதமாய் பலன்களாய்ந்து
வருதியுட னெடுத்துரைப்பா யுண்மையின்னம்
வேதியன்றன் பார்வையதில் விளங்குமாகில்
மிக்கதென்மேற் றிசையிலாலயங்களென்னே. 78
நலமொன்பா னதற்கொன்பான் மதிக்கொன்பானால்
நாடியதோர் பார்வையதில் நண்ணுமாகில்
தலமதனைவிட்டேகி வடகீழ்பாகம்
சஞ்சலமாம் விரயங்க ளடைந்து பின்னும்
உலகினிலே யாவர்க்கும் நல்லோனென்று
உத்தமனாம் வாக்குறுதி யுள்ளவனாய் வாழ்வன்
குலமதிலே சிரேஷ்டனென்று கூறும்வார்த்தைக்
குணமுடையன் குருபக்தி குறியுள்ளோனே. 79

## வேறு

சீர்தரும்வயது தந்தைக்கு விருபான்
திரமோரா மாண்டினில் வேந்தே
பேர்தருங்கீர்த்தி யன்னிய தேசம்
பிருகுமுன்னுரைத்த தன்னிலையாம்
நேர்தரும்வடகீழ் திசையிரண்டிடமாம்
நீடிய சிலைமீனமென்க
பாரினிற்றந்தைத் தனக்கைம்ப தல்லாற்
பலனொன்ப தன்னிய தேசம். 80

## வேறு

பலனெவ்வாறு கர்மத்துள் கர்மத்தாதிப்
பற்றியதேள் சிலையதிபன் பார்வையங்கு
நிலையதாய் தானிற்கக் கர்மம்நான்கு
நேசித்துத் தான்செய்வன் நிலைப்பொன்றன்னியம்
துலைதூரம் பிரயாணஞ் செல்வன்யாத்திரை
சுபமுடையன் வயதிருபா னோடுவொன்பான்
கலைபயிலுங் கல்விமான் கன்னிதன்னால்
கைகூடும் பொருளுடைமைக் கணிதமீதே. 81

***கன்னி மூன்றாமோரையின் பலன் முற்றிற்று***

✲ ✲ ✲

## கன்னி நான்காமோரையின் பலன்

அரியக்கேள் கன்னிதனி லடர்நான்காமோரை
யதில்வீதித் தென்வடலாம் மேல்பான்வீடு
புரியக்கேள் கீழ்முகப்பா மெதிரிற்சந்துப்
பூரணமாமிருபக்க மனையுஞ்செல்வம்
தெரியக்கேள் பூர்வமனை யில்லையன்னைச்
சேர்ந்தமனை திரஞ்சதுர மில்லைவீடு
குரியமனை யிருபிரிவா மன்னியதேசங்
கூறலாங் கோவில்மண்ணிற் குடியிருப்பே. 82

தெரிவைதனி னான்காவ தோரைதன்னில்
சிறந்தசெல்வ முளனாகுஞ் சிறியரூபன்
குருகியதோ ரிடுப்பின்மேற் மச்சரேகைக்
கோள் பகைகள் கலகனெனக் கொடுமைசொல்வார்
பெருகிய செல்வீகமது தந்தைகாலம்
பெலவீன மாகிசுகம் பெறுவனென்க
உரியதொரு சுகங்கெடுதி யென்பறுற்றார் பகைஞ
னூர் பகைஞ னென்றுரைப்ப ருறுதியீதே. 83

உருதியாம் பிதுர்தந்தை யுணர்வாம்ரெண்டு
யொன்றுவிர்த்தி யொன்றன்னிய தேசமாகும்
திருதியத்தோர் பார்வையதி லிருக்கப்பூர்வந்
திறமையொடு தந்தைகாலத்தி லேகன்
பருவமுள யோகறுமல்லாம் விரயஞ்செய்து
பாக்கியங்கள் ருணமதனால் மாறிப்போகும்
தரும்வயது நாற்பதுக்குத் தலம்விட்டேகித்
தன்மையுடன் சுகமடைவான் பின்புதானே. 84

### வேறு

இரவிதா னுபராசி யியங்கிடுங் கோள்களோடு
மருவியே யுபயத்துற்றால் மன்னிய தாதையோடு
வருமுடன் பிறப்புவானாம் வன்னிதய ரிருவராகும்
மருவுபின் தாரத்தோடு மாபிதுர் தனித்திருப்பான். 85

எந்தைதன் முடியின்மேவு மிணையிலா மதியேயேகன்
வந்திடத்தனைமன்னன் மருவிரய பார்ப்பானேனும்
பிந்தியகர்ப்பந் தன்னால் பெறவருந்தாயுமந்தோ
நொந்துமே மாள்வாளென்று நுவன்றனர் நந்திதேவே. 86

## வேறு

அரிதல்கா ணம்மான்கள் தந்தைமூலன்
அதிலொருவர் விர்த்தியென வங்குவீதி
தெரிதலவ்வாறு வீதியது தென்வடல்தான்
சிறந்தமதி யோரமது வீடேயாகும்
பிரிதல்மனை யிரண்டாகும் மேல்பாற்கேணி
பேதமில்லை யம்மான்கள் பெலனாம்ரெண்டு
குருகிதருஞ் செல்வமது விர்த்தியாகிக்
குடும்பமது சுகமுண்டாங் குணங்களீதே. 87

போரில்ஜெய முளனாயு ளைம்பதல்லாற்
பொந்தநவ மேல்கண்டம் பொருந்திவாழ்வன்
காரியினால் பார்தையதிலிருக்கக் கண்டங்
கணிதமுட னட்டமமத்திற் கருதிகாண
வீரியவான் செல்வீகன் நடுவயதில் மேலாய்
மிக்கசுக மடைவனென மிகுதிகூறே. 88

## வேறு

வல்லமை வாக்குப்பலிதமே யுளனாம்
வன்மை யாய்வசையுள வாக்கன்
தொல்லையே குடும்பந்தனிற் வழக்குளனாஞ்
சொல்வது மனதுசஞ் சலத்தன்
சல்லீய மேலாய் தழைத்திடுங்கலகி
சஞ்சலப் புத்திவைக்கேழ்ப்பன்
வில்லிருங் கொடியகோபமே வாக்கு
மிருவித வித்தையு முளனே. 89

நிலமகன்றனக்கு மூன்றாதி மூன்றோன்
நிலையுப யந்தனில் திரமாப்
பலன்மதி தனக்குமூன்றாதி திரத்தில்
பற்றியே யிருந்திடிலரசே
குலமதில் விர்த்திசகோதர மைந்துக்
குடும்பத்தில் நிலையிரண் டென்பார்
ஜலமதில் வீழ்ந்துமரணமே யாகுந்
தருமேக சகோதர நிலையே. 90

## வேறு

நிலைமக னுபயந்தன்னில் நின்றிடப் பலனைக்கேளுங்
குலவுந்தன் னுடன்பிறப்பார் கோதைய ரிருவராகும்

தலமதிற் மாற்றாந்தாய்க்கு தனயர்க னுண்டாமென்று
நலனுறு நந்திதானும் நவிலுநக் பலனிதாமே. 91

## வேறு

அன்னைக்குநான்காலறிவது பலன்கே ளைந்திடந் தனக்குமூன்றாகி
வின்னமில்லாமலிருந்திடிற் செல்வ மிகுத்திடுமன்னைக்குசுகங்கள்
உன்னியக்கண்டம் வருமுப்பதல்லா லொன்பதில்மாரகமென்க
பன்னிவித்தைப் பாலனுக்குண்டாம் பலமுள்ளகட்டடம் நிலையே. 92
நிலையதாமேடை விர்த்தியுமுப்பான் நிறையாயுள் தன்னதிலுண்டாம்
துலையதில்மனைகள் மகரத்திலொன்று சொல்லுவாயொன்று தான்விர்த்தி
தலைமதிதன்னால்கட் டடஞ்சிறந்துக் கன்னியால் குரை வுண்டாமென்க
விலையதாமன்னியர் பூமியுஞ்சேரும் மேதினிதனி லிவ்வாறுபலனே. 93
புகலுவரைந்தாமாதி யின்பலன்கேள் பொருத்தியப் புத்திரனேகன்
ஜெகமதிற்சிறந்த விர்த்தியுமுளனாந் திறமையாம் பெண்ணிலை யிரண்டாம்
சுகந்தனமம்மான் சுகமில்லையென்பர் சுயார்ச்சித நிலைதனிலிருப்பன்
மிகவுருமினிய மந்திரங்கேள்வி மிக்கசெல் வீகனுமாமே. 94
கன்னிக்குயாறு யதுதனக்காறு கதிர்பாவிப் பார்வைக ளுண்டேல்
மன்னரால்மேன்மை சிறந்திடுஞ் ஜெயங்கள் வரும்ருணம் சத்துருநாசம்
வின்னமாய்ரோகந் தானில்லை விரண மெய்திய துன்பமுமில்லை
கன்னியர்நட்பு கலகமாயிருப்பன் கணிதத்தாலிப்பலன்காணே. 95
சத்தமப்பலன்கே ளன்னையின் வழியிற் சார்ந்திடுங் களத்திரமென்க
உத்தமபலனாங் களத்திரமிரண்டு உறுதிகாணொன்ற விர்த்தியுமாம்
சித்தியா மிரண்டு கன்னியகளத்திரஞ் சிறப்புடன் பொருள்விரயமுமாம்
விர்த்தியாங்களத் ராவழியினிற்பொருள்கள் மிகுதியாயனுபவித்திடுவன். 96

## வேறு

பெண்ணின் நிலைமைத்தான்குறிக்கில் பெலன்காண்வீதிக்கீழ்மேலாம்
உண்ணுஞ்சுகங்கள் தான் வடக்கா முறுதிமனையாந்தென்மேற்கில்
விண்ணினாலயங்களது விருபாலுண்டாம் வேந்தர்மனை
திண்ணமாக சுகங்களுடன் சிறப்பாய் வாழ்வன் செப்பிடுமே. 97
எட்டுக்கெட்டாமாதிபதி யிசைந்தகேந்திர கோணமதிற்
திட்டமாகவாயுளது சிறந்தேயிருப்பன் செல்வீகன்
நட்டமில்லை தேகமதிற் நாலாண்டினிலோர் கண்டமது
தொட்டகண்ட முடனிங்குந் துணிவாம் பலன்களிதுவாமே. 98

## வேறு

பலமுடைய பாக்யாதிபதிக் கொன்பனாதிப்

பற்றிநின்ற நிலைகண்டுப் பலனைச் சொல்லும்
குலமுடையன் றந்தைமிகச் செல்வன்மேலுங்
குணமுடையன் குடும்பத்தில் குறித்த மெய்யன் 99

## வேறு

கருதியகர்மத்துள்ளோர் கண்களால்பார்வையாகில்
வருமதிற்செல்வமுள்ளான் வருமதிகாரந்தன்னால்
திருத்திபத்ததிபன்றானுஞ் சேர்ந்திடும் பார்வையாகில்
குருகியசுகங்களில்லைக் குணமெலாம்விர்த்தியென்னே. 100

## வேறு

நலமுடைய லாபாதி கேந்திரத்தில்
நலஞ்சுபரால் பார்வையடைந்திருப்பாராகில்
பெலமுடையன் றென்கிழக்கிற் செல்வமுள்ளன்
பெருமையுடன் சௌக்கியத்தைப் பெறுவன்லாபம்
தலமதனிற் பிரயாணஞ் செல்லரெண்டுத்
தலத்திலும் சௌக்கியங்கள் தன்மையென்று
நலமுடனே விப்பலன்கள்தனை சுளவதாக
நவின்றனர்காண் நந்தீசர் நலமாங்காணே. 101

## வேறு

கண்டமா மன்னைதனைக் கேழுபத்தில்
கருதிய கொர்ப்பத் தாலரிட்டம்
கொண்டெட்டுக் கெட்டுக் கதிபரின்பார்வை
கூறுவா யன்னைக்குத் தோஷம்
துண்டதாம் ரோகஞ்சொல்வது வயிற்றில்
துயர்பிணி யிருபதோ டேழிற்
மிண்டிய வதன்மேற்பிணி நிவர்த்தியென
விளம்பினர் நந்திநற்றேவே. 102
தீரமாங்கர்ப்ப முபயத்துள் ளுபயஞ்
சிலைதனைக் கதிபதிப் பார்வை
வீரியநீலன் பார்வைகள் சகித
மேவிடின் கர்மமுன் றுளது
பாரினிலொன்று சகோதரக் கர்மம்
பலனிது வித்தை பூமியினால்
மீரியச்செல்வ மோங்கியே விருப்பன்
மிகுபல னிவ்வித மென்னே. 103

## வேறு

திரமவிய மரியாகு முபயத்தில்நிற்க
சிறந்ததொருப் பூர்வீகந் திரம்பாழாகும்
கரமுடையப் பாவக்கோ ளதிற்பார்வைநிற்கக்
கனத்ததொரு விரயமது கன்னியராலுண்டாம்
வாமுடையன் போகியர்கள் நட்புளனாமோக்ஷம்
வருமிதற்குக் கங்கைமுதல் வரும்நதிகள் பலவும்
பிறர்தன்னால் பொருள்கூடுஞ் சுபவிஷபந்தன்னில்
பெலத்தவிர யங்களெனப் பெருமையிவ்வாறோதே. 104

***கன்னி லக்கின நான்கு ஓரைக்கும் செய்யுள் - 104***
***முன் லக்கினம் 4-க்கு 350***
***ஆக மொத்தம் - 454***
***கன்னி நான்காமோரையின் பலன் முற்றிற்று***

* * *

# துலாமோதயம்

சீரானதுலாமதிலே தோன்றுமாகில்
சிறப்பான கீழ்மேற்கு வீதியாகும்
பேரான வடவாசல் தெற்கேதோப்பு
பெரிதான கீழ்புறத்தில் குளமேயாகும்
நேரான மேற்புறமுந் தடாகமுண்டு
நிச்சயமாஞ் சிவன்கோவில் மேற்கேயுண்டாம்
கூரானவாசலிலே மரங்களுண்டு
குறிப்பாக விதையறிந்துக் குறித்திடாயே. 1

## துலாத்தில் பாவாதிபர்கள் நின்ற பலன்

துலையதுவுஞ் ஜெனனமதாய் ஜென்மாதியாக்ஷி
சுகமுளனா முபயதாரத்தை யுள்ளோன்
பகையுளனா மன்னர்களால்பகை கலகமுண்டாம்
பற்றியசத்துரு வுண்டாம் பலருணமுமுண்டாம்
தலமதிலே தனாதிபலன் நிலமகன்றானட்பு
தருஞ்சென்ம மதிலிருக்கிற் சஞ்சலமேயுளனாம்
விலகிய பூமியால்வழக்கு திசைவருங் காலரிட்டம்
வேந்தர்பகை யுண்டாகுமேன்மை சுகபேதம். 2
பலன்மூன்றா மதிபர்குருகேந் திரமாய்த்துலையிற்

பற்றிநிற்கசுகபேதம் பாலர் தமக்குண்டாம்
இளையசகோதரம் விர்த்தியிடராகுமேக
நிருப்பனெனவே சொல்வரியல் புவியின்மீது
மலைவுறுமன்னிய தேசசஞ்சார மென்க
மாறிவிடும் பொருள்பூமி மந்திரிகள் நட்பன்
விலைதேச சஞ்சாரன் மிடையினி லோர்மச்சம்
மிக்கநான் காதிபதி மிகுதுலையிலுச்சன் 3
கலைமதிக்கு நான்காதி லன்னைக்குத்தோஷம்
காரியினாலன்னை வர்க்கங்கலக மிதிலுண்டாம்
நலமிலைகா ணைந்தாதிபதி யானதாலே
நன்மையிலை யம்மான்கள் நாசமெனலாகும்
பகநிலைகாண் புத்திரற்குத் தோஷ மதிலுண்டாம்
பாக்கியங்க ளன்னைவர்க்கம் பாலர்க்குயழிவாம்
நிலையாறாமாதி குருலக்கின கேந்திரத்திற்
நிற்கமிக ரோகனென நிகழ்த்திடுவர்தாமே. 4
கூர்மனியலேப்பூர்வ தனநாசமாகுங்
குணபேதமே ழாதிபதி நிலமகன்றான்
பார்தனிலே துலையதனி லிருப்பானாகில்
பலவிரயந் தாரமது விரண்டேயாகும்
வாரிநல்யோகி மறையோர்கள் முதலோரை
வணங்கியுப தேசம்பெறுவா னென்றுவோதும்
தீரமன துடையவன் காண் ரசவாதத்தொழிலை
சிறந்துசெய்யுந் துணிவுடையச் சேல்வீகனென்னே. 5
எட்டாதி யசுரகுரு துலைதனிலே நிற்க
யினியசுகமாயுளது யினிதாந் தீர்க்கம்
தொட்டபாக்கி யத்ததிபன் கேந்திரத்திற்
துலைவனிலே நட்பாகத்தொடுத்து நிற்கில்
வட்டமதாமரசே யித்திசையந்தம் பிதுர்க்கு
வருங்கண்ட மாயுளதுஜாத கற்குத்தீர்க்கம்
தட்டிவிடும் விரயாதி நிற்கபகையாலே
சஞ்சலமாய் பூமிபொருள் விரயமதாஞ் சாற்றே. 6
விட்டிடக்கேள் துலையதனிற் பத்ததிபனிற்க
வருங்கலகம் பேதையரால் குடும்பத்திற்கலகம்

கட்டிவிடு மனதினிலோர் பேதங்காட்டும்
கதித்த ஜீவனந்தாழ்வாங் கனயோகி நட்பன்
பிடித்தலாபாதி வெய்யோன்பெல வீனனீசம்
பெலன்றந்தை சுகபேதம் பார்தனிலேபகையாம்
வாட்டிவிடும் விரயாதி ஜென்மத்தில்நிற்க
வரும்பூர்வ சுயார்ச்சிதங்கள் வலுவீனமாமே. 7

## (இரவி நின்ற பலன்)

துலைதனிலிரவி நிற்கத்துலையது ஜெனனமாக
கலையன்னியர் மனைப்பற்றி சலசமும் வழக்குச்செய்வன்
விலையதார் பூர்வம்விட்டு வேந்தர்கள் நட்பால்செல்வம்
சிலைதெய்வம் பலபேர்கூடி ஜீவிக்குந்தொழிலுள்ளானே. 8
இரவியும் நீசமாக விருந்திடிற் றந்தைவர்க்கம்
பரவியே பகையேயாகும் பலன்கெடுஞ் சுகமே பேதம்
விரவன்னிய மனையைப்பற்றி விகற்பமாய் வழக்குசெய்வன்
வரமுள தெய்வந்தன்னை வருந்திடுந்தொழி லுள்ளானே. 9

## (சந்திரன் நின்ற பலன்)

துடர்தலை ஜெனனமாகத் துய்யவெண் மதியும்நிற்க
இடரில்லை யன்னைவர்க்க மினியநட் புளதாஞ்செல்வம்
திடமதாம் சப்தமாதி சேய்ஜென்மந் தன்னிற்நிற்கில்
குடதிசை யதனிற்பூமிக் கொடியதாரந் தானிரண்டே. 10
சந்திரன் பகையேயாகில் சஞ்சலக்கலகமுண்டாம்
வந்திடும் பெண்ணின்மூலம் வழக்கினால் மனபேதங்கள்
தந்திடும் ஜீவனங்கள் தாழ்வதாம் யோகிநட்பன்
சந்திரன் பூர்வமாகில் தருமன்னை சுகமாஞ் சொல்லே. 11

## (செவ்வாய் நின்ற பலன்)

நாடியதுலையிற் செவ்வாய் நட்பதாய் கூடிநிற்கில்
கோடிசஞ்சலங்களுள்ளான் கோவேந்தர் பகையுமின்றி
வீடிடுமேன்மையெல்லாம் வீண்பலவிரயங்காட்டும்
தேடியநிலம்வழக்காம் திசைவருங்காலரிட்டம். 12
பாடியகளத்திரங்கள் பகருங்காலிரண்டேயாகும்
நாடியதுறவிபோல நன்மனதுடையனாகும்
தேடியரசவாதத்தில் திகழ்மனமுடையனல்லால்
கூடிடுஞ்செல்வம்பூமிக் குடதிசையதனில்வாழ்வன். 13

## (புதன் நின்ற பலன்)

மைந்தனேகேளாயொன்பான் வருந்துலையதனில்நிற்க
சுந்தரன் பிறப்புன்புந்தி சூழ்துலையதனிற்றானே
வந்திடப்பூர்வபேத மக்கள் பெண்ணொன் றுண்டாகும்
தந்திரவித்தைசெல்வந் தரணியிற்பாக்கியவானே. 14
புந்தியேதுலையினட்பாய் பொருந்திடுந்திசையினந்தம்
தந்திடும்பிதுர்க்குக்கண்டம் தருமாயுள் தனக்குத்தீர்க்கம்
வெந்திடும் பொருள்கள் பூமி விரையாதியாகயைாலே
வந்திடும் பெண்ணேயேகம் வளர்பூர்வம் பேதமாமே. 15

## (குரு நின்ற பலன்)

துலைதனிற் குருவேநிற்கத் துணிவுடன் பிறந்தபோர்க்கு
நிலையதாம் பூர்வபேதம் நிலையன்னிய ருரவுநட்பாம்
விலையொடு பொருள் சுற்றத்தார் விகற்பமாய்விரயஞ்செய்வன்
மலைமதிபோலாஞ் செல்வம் கதித்திடும் புத்திரன்றன்னால் 16
அலைகடல் பொருளுஞ்சேரு மதுவிளை யோரால்தானே
சிலைமூன்றா மிடத்துள்ளோனாய் சென்றதா லேகனென்க
தலைமையாம் பூர்வத்தோடு தரணியிலிருப்பன் மூன்றோன்
பலனிதுபிரிவுபின்னால் பலன்சொல்ல வின்னங்கேள். 17

## (சுக்கிரன் நின்ற பலன்)

இன்னங்கேள் கவியுமாக்ஷி யிருந்திடப்பிறந்தசேய்க்கு
வின்னமொன்றில்லையாயுள் மேன்மையாங்களத்திரவீனம்
மன்னனைப்போலாயாக மருவியசுகங்களுண்டாம்
உன்னியசுபத்தால்தானே உண்டாகும் பொருள்கள்போமே. 18
சுங்கனுந்துலையிற்நிற்க சுகமுளனுபயதாரம்
மங்களம்போலாம்யோக மன்னரால்கலகஞ்சத்துரு
எங்கனுமேன்மையுண்டா மேந்திழையீனமாகும்
சங்கமாயுள் தீர்க்கம் சாற்றியபலனிதாமே. 19

## (சனி நின்ற பலன்)

நீலனேயுச்சமாக நிறைதனிற்பிறந்தசேய்க்குப்
பலனகன்றனக்குநீலன் பலமுடன் துலையிற்நிற்க
கீலகபுத்திரதோஷம் கிளைவர்க்கத்தாலேசத்துரு
சாலவம்மனையைவிட்டுத் தனியன்னியனாரநிற்பன் 20
சனிதுலையுச்சனாக சார்ந்ததால் பலனெவ்வாறு

கனிமதியதற்கு நான்காய்க் கண்டிடிலன்னைதோஷம்
பின்னுமவ்வர்க்கதோஷம் பெலமில்லைபுத்திரதோஷம்
மன்னியமனையைவிட்டு மனமதுவாடிநிற்பன். 21

## தூலா முதலோரை பலன்

தேருவது துலைதனிலே முதலோரைக்குத்
தீரமது கிழக்குமேற் கானவீதி
கூறுவது யதற்மருகே சந்துண்டாகுங்
குணமான முகப்பதுவுங் கிழக்கேயுண்டாம்
சாருவது யெதிரின்மனை பாழாமாரல்
சந்துண்டாங்கங்கையது வெதிரில்நிற்கும்
பேருமனை பூர்வமதி லிருபக்கம் விர்த்திப்
பேசுவது நிலையென்பர் பெருமையீதே. 22

## வேறு

சிறந்த துலையின் முதலோரை ஜெனித்தபாலன்சமனுருவம்
பிறந்தபாலன் நிறம்பொதுவாம்பெறுவர்தந்தைவர்க்காதி
புறந்தான் மிகுதியுண்டாம் புகழுமைந்தாமிதில்மூன்று
திறங்காண்விர்த்திப்பிரிவாகி தேசந்தன்னில் சஞ்சாரம். 23
தந்தைகாலமிருவருண்டாம் தனியாந்தந்தை பிரிவென்பர்
பந்துள்நல்லன் பூர்வீகம் பேதமுண்டாம் பிதுர்நிலைகள்
சொந்தமாகவிருக்காது சுயார்ச்சிதநிலைகளிரண்டென்பர்
வந்தேயன்னியதேசமதில் வலுவாமென்பர்வலுவீதே. 24

## வேறு

இன்பமுடன் ஜாதகற்கு தந்தைதன்னால்
யினிதில்லை சுயார்ச்சியத்தி லிருந்து வாழ்வன்
புந்தியினாற் பலன்கேளா யம்மான்வர்க்கம்
பொருந்தாது வர்க்காதி யிருவராகும்
சுந்தரமாயேகனம்மான் தென்வடலாம்வீதி
சுயார்ச்சியத்திர் நிலைத்திருப்பான் றுணைவரில்லை
முந்தியநற் சுகமெல்லாங் கெடுதியாகி
முறிந்துநிற்பன் சுகமெல்லாம் முடிவதாமே. 25
முடியக்கேள் ஜாதகற்கு வயதுபத்தில்
முந்தியப்பாட்டன்பூமி முறிந்தேபோகும்
படியக்கேள் வயதிருபத் தொன்றிற்றானே

பாலியத்திற் சுகமுடியும் பாக்கியமுளசீலன்
அடியார்கள் பணிவிடைக ளறியவல்லன்
ஆக்கினைக ளாலயங்க ளறிந்துசெய்வன்
துடியாக தர்மசிந்தை யுடைவன் கீர்த்தி
சொல்தவறா னென்றுரைப்பர் சொல்லுவாயே. 26
இப்பலன்கள் நிலையாகிலிது துளையாமென்க
யிடரிலான் யோகியரை யினிதாம்சேர்க்கை
தப்பிலான் யோகசித்தி செய்யவல்லன்
தாரணியிற் பூமிபலன் சஞ்சலமேயில்லை
தெற்புடையமன்னர் பகையிலான் மேன்மையுடையன்
தெய்வபக்தி யுடையன்மிக தேகசுசிகரனாம்
சொற்பிசகான் துஷ்டரொடுக் கூடானென்று
சொல்வதிலு நிலையென்பர் துணிவாயோதே. 27
தனத்தாதி பலன்கேட்கிற் சௌக்கியங்கள்
தனமுளனாந்தக்க செல்வன் குடும்பவிர்த்தி
மனநல்லன் மந்திரிகள் மகிழ்ச்சியுளனாகு
மன்னவரால்வரும் பூமிபொருளு மிகவுண்டாம்
இனந்தன்னில் பொருள்சேரும் பாக்கியங்கள்விர்த்தி
யிடரில்லா வித்தைவரு மினிய சுகநேத்திரன்
வினவியதிப் பலனிரண்ட மிடத்திற்கேயாகு
மேன்மையுடன் நிருதியத்தின் விபரங்கேளே. 28

## வேறு

சொல்லுமூன்றாதிப் பலனெவ்வா றென்னில்
சுகமுடன் சகோதர மூன்று
வெல்லுவதிரண்டு விர்த்தியோ பேதம்
விளம்பிய சகோதர மதனால்
தொல்லையாஞ் சத்துருபகை யுளனாகுஞ்
சுகமுளன் வீரியன் விர்த்தி
வல்லபமுளனாம் வாலிபந் தன்னிற்
மகிழ்ச்சியாம் பலனெல்லாமரசே. 29

## வேறு

நலமுடைய நான்காதிபல னெவ்வாறென்னில்
நன்மைதரும் நாற்காலிலாப முண்டாமென்க
பலமுடையன் பாக்கியவான் பால்விர்த்தியுளனாம்

பத்தாதிப் பார்வையதிற் பலன்விர்த்தியென்க
தலமதனைவிட் டேகியன்னிய தேசத்திற்
தவரில்லா சுகமனைகள் தழைத்துநிற்கும்
குலமதனிற் சிரேஷ்டனென மேன்மைபூமிக்
குணமுள்ளான் கிருஷிதொழிற் குணமாமென்றே. 30
அறியக்கே ளைந்தாதிபலன்க ளம்மான்
அறிகுவது வர்க்காதி சுகங்கள்தாழ்வு
பிரியக்கே ளிதிர்புத்திர னொன்பதாகும்
பெலமுடைய னதில்விர்த்தி பெலமாமூன்று
தெரியக்கேள் சசிக்கைந்துக் கைந்தாமாதி
திரமுடையக் கேந்திரத்திற் திரமாய்நிற்க
புரியுமிதிற் புத்திரனால் சுகமுண்டாகிப்
புண்ணியத்தில் விரயமெனப் புகழ்ந்துசொல்லே. 31

## வேறு

அரசனே யாறாமாதி யந்தணன் பார்வையாகிற்
நிரையுடன் பூமிச்சத்துருநிலையொடுக் கெடுதியென்க
தரைமிசை ரோகமில்லை சஞ்சலம் ருணங்களில்லை
விரவிய வேந்தன்பார்வை மிகுநலம் சுபங்களென்னே. 32
இன்னமுங் கேளாயேழோன் யெட்டாதி பதியுங்கூட
வின்னமே யில்லைதாரம் விர்த்தியா மேகமென்பார்
பன்னியப் பலரால் கீர்த்திப் பாரியை மணமுடிப்பன்
உன்னியக் கீழ்மேல்வீதி யுறுதிகாண் தென்பால்வீடே. 33
அட்டமந் தனக்கெட்டாதி யவர்சுபர் நட்பிலாதல்
விட்டிடு மாயுள்தீர்க்க மிகுதியே யெழுபத்தொன்று
துட்டர்கள் வணங்கச்செல்வம் சுகமுடையவனாய்க்கீர்த்தி
நட்டமில்லாமற் கோளால் நயம்பெற விருப்பானென்னே. 34

## வேறு

பலமுடைய பாக்கியாதிக் கேந்திர கோணம்
பற்றிநிற்க பாக்கியங்கள் பலமுண்டாகும்
துலைதன்னிற் பிரயாணஞ் செய்யல் பூமி
சுயார்ச்சிதங்க ளாலயங்கள் துணிவாய்ச் செல்லல்
பெலமுடையப் பூர்வமது வில்லை யீது
பேதசமாந் தென்கிழக்கிற் பிரிந்து நிற்கும்
உலகதனில் வித்தையினா லதிகாரத்தால்
உறுதிசுகந் தனையடைவ னுண்மை யீதே. 35

## வேறு

பத்துக்குடையோன் பாவியுடன் பலமாம் பார்வைப் பரிவாகில்
நித்தம்பூமித் தொழிலுடையன் நேசம்பெரியோர் வாசமுளன்
சித்தஞ்சிறந்த யோகியரைச் சேர்ந்தசித்த முண்டாகும்
பத்தி வைராக்கியமுடையன் பலவான்யோகி யாகுவனே. 36

## வேறு

நன்மைகேளரசே நான்கினுக் கெட்டில்
நலமுடன் சுபரிடப் பார்வை
தின்மையொன்றில்லை தென்கீழ்பா லாபஞ்
சிறந்திடும் வடதிசை லாபம்
முன்னமேயோகம் மத்தியிற் செல்வ
மூவரால் பாகம துண்டாம்
அன்னையின் வழியிற் பூமியும்பொருளு
மதிற்சௌக்கிய லாபமென்னே. 37
விரயாதி பலன்கேள் மனையிரண்டிடமா
மேன்மையா யிருமனை வழக்கு
குறைவில்லை சுபத்திற் விரயமேயாகுங்
கோள்பகை ஜாதகற்கில்லை
தரைமிசை யன்னிய தேசசஞ்சாரந்
தையலர்ப் பகையிலா னென்க
விரையமாகியதோர் மனைதனைவிர்த்தி
விளங்கிடச் செய்வனென் றுரையே. 38

## வேறு

மருவியமதிக்கு நான்கோன்வரும் நான்குஜென்மம் நான்கிற்
குருகிடாதிதற்குக் கர்மம்கூரிய மேஷமீனம்
பெருகியே வருங்காலத்திற் பெலனன்னைக் கண்டஞ்சொல்லும்
தருமிதில் மேடநீலன் சார்ந்தநாள் கர்மஞ்செய்வன். 39

## வேறு

சிறந்திடுமேழுக் கதிபரின் பார்வை
திரமொடு சரத்தினிற் றிரங்கள்
நிறைந்திடு முபயக் கோளதிற் பார்வை
நின்றிடின் களத்திரத் தந்தை
புரிந்திடுமைந்து வர்க்கமாம் விர்த்தி

பெலன்ரெண்டு பின்னேகன் செல்வம்
துறந்திரமாக விருந்தச் செல்வங்கள்
சுகமுட னேகன்றான் விர்த்தி. 40

## வேறு

பெலமொடுக் களத்திரத்தின் பெலன்சகோ தரங்கள்நான்கு
நலமுடன் விர்த்திமூன்று நன்மையா மேகன்றானும்
குலமதிற் செல்வன்யோகன் குணமுடன் வித்தைகற்பன்
தலமதை விட்டுநீங்கித் தனிமையா யிருப்பன்றானே. 41
இருப்பனென்றுரைத்தீர் மெய்தா னிடபத்துள் ளெட்டாமாதி
விருப்பமாய்ச் சத்துருவங்கு மிகுதியா யிருப்பதாலே
குறிப்பிட னுரைத்தீராயுள் கூரியக்கண்டஞ் சொல்லும்
தொல்லைலகத்திலிவ்வாறு சொல்லிடுஞ். 42
சொல்லுவ தைந்துவேழு சூழும்பத்தாறில் கண்டம்
வல்லப முப்பானாண்டிற் வருமொரு கண்டம்பின்னும்
தொல்லையா முப்பத்தொன்றில் சுரகண்டம் வந்துதீரும்
தொல்லைலகத் திலிவ்வாறு சொல்லிடுஞ் ஜாதகற்கே. 43

## வேறு

உருதியாந் தந்தைக்கு கண்டம் கேட்கி
லுரும்பலன்கள் பாக்கியத்தானத்தில் நீலன்
வருமதிலோர் கருமமது தந்தைனக்குண்டாம்
வருமுப்பான் மூன்றினிலோ ருபயஞ்சேர்க்க
பெருகிவருங் கண்டமது வுபயத்திற்குப்
பெலன்றந்தை சத்துருவா யிருந்து கர்மம்
குருகிவருங் கர்மமது சலித்துச்செய்வர்
கோல்பகையாஞ் சத்துருவின் குணம்போல் தந்தை. 44

## வேறு

யோகியென்று வெவ்விதத்தி லுரைத்தீரிதற்குக் காரகஞ்சொல்
வேகியரசே வித்தையுளன் மிகுந்தநல்லோர் நட்புளனாந்
தாகமோக்ஷ நிலைதன்னிற் றவராதிருப்பன் தரும்பத்தோன்
மோகிசகிதம் பெற்றாலும் மூன்றுஞான வழியென்றே. 45
வழியே முப்பா னாண்டப்பால் வருகுமொன்பான் ஞானநிலை
பழியொன்றில்லான் பாவையரைப் பகைத்தேநிற்பன் பாகமதி
லழியுஞ்சிந்தை யுளனாகு மன்னியர்தமக்கு நட்புளனாம்
பொழியும்வித்தை செல்வீகன் பொருந்துமனத்த னெனவோதே. 46

## வேறு

ஓதியதற்கு முப்பதல்லாது வுறுமாறி லன்னியதேசம்
வேதியர்நட்பு வாலயமதற்கு விருப்பமாம் யாத்திரையென்க
பேதியாதிதற்கு முயற்சிகள் செய்துப் பெலன் தடையாகிப்பின்செல்வம்
ஆதியாய்நின்றப் பூர்வீகந்தானுமடர்நிலை வடகிழக்கென்னே. 47
கண்டுரைத்திடுதல் கர்மங்கள்பத்தோன் கருதியமதிக்குக் கர்மாதி
மிண்டியசரத்தி னுபயத்துள்ளோரால் மிகுப்பார்வை பெற்றுமேயிருக்கில்
கொண்டதோர் கர்ம மூன்றுளதென்பர்க் குணமுடனதிகாரத்தன்மை
தண்டமிழ்கேள்வி ஞானசிந்தையினாந் தையலர்த்தனம் வருமென்றே. 48
மேவியவிரயத் ததிபதிபலன்கேள் மிகுமனைக் கட்டடந்தனக்கு
தாவியதிரண்டு நிலைதனிற்குறிப்பன் தடையதாம் பின்மூன்றே நிலையாம்
பாவிகள் பார்வை சகிதனாற்கலகம் பகருவர் சுயார்ச்சிதநிலையில்
மேவியேச்சிறந்த கட்டடமுடிப்பன் மிகுமொன்பா னாண்டினிளென்னே. 49

*துலா முதலோரையின் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## துலாமிரண்டாமோரையின் பலன்

தொடுத்ததுலை யிரண்டாவ தோரைதன்னில்
சொல்வதுகேள் தெற்குவடக் கானவீதி
யெடுத்தமனை மேல்முகப்பு வெதிரில்விர்த்தி
யிருபக்கஞ் சந்துண்டா மெதிரில்கங்கை
விடுத்தமனை வேறாகித் தலம்பேதித்து
வேந்தனிட மனைக்கருகிற் பிரிவாய்நிற்பர்
அடுத்தமனை வடகிழக்கி லாலயங்கள்
அமர்ந்திருக்கு மிவ்விதமா யறிதல்கூறே. 50

## வேறு

பெற்றதுலை ரெண்டாமோரைப் பேதமில்லைப் பிதுர்ப்பூர்வம்
முற்றசுகங்கள் தனநாச மோதும்பாவிப் பார்வையினாற்
முற்றுமுன்னா லிருந்தமனை மூவர்க்காகு மதிலிருவர்
குற்றமாதி யன்னியத்திற் குறைவாயிருப்ப ரெனச்சொல்லே. 51
சொல்லும் பிறந்தகாலத்திற் சுகபேதங்கள் தந்தைக்கு
வெல்லுந்தந்தை சகோதரங்க ளிரண்டாமின்ன மரசேகேள்
எல்லுமிரண்டிற் தேசாந்திர மேகன்செல்வ னெனக்சொல்லுங்
கல்லல்குடும்பந் தலபேதங் கனகன் பார்வை நன்மையிதே. 52

## வேறு

நாடியத் தந்தைபூாவ்ம் நாசமாம்வடகீழ் பக்கங்
கூடியத் தன்மையுள்ளன் குணமுளன் குடும்பந்தாழ்வு
வாடிய வர்க்கத்தோர்கள் வஞ்சித்துக் கொடுப்பரென்றுப்
பாடினார் நந்திதானும் பகருவீர் புவியினோற்கே. 53

## வேறு

கெடுப்பாரென்று வதிலுரைத்தக் கெடுதிதன்னை யெடுத்தோதுங்
கொடுப்பர் பாக்கியத்ததிபர் கொள்ளும்விரயத் தானாதி
தடுப்பர் நட்போரன்னியரால் சார்ந்தவிரயந் தனையோதும்
விடுப்பா தேசசஞ்சாரம் மீண்டேவருவ ரெனவோதே. 54
ஓதுமம்மான் கர்க்கமதி லுறுதிப்பாட்டன் கிளையிரண்டு
தீதொன்றில்லை யம்மான்கள் சிறந்துயிருப்பா ரதில்நான்கு
தோதில்மூன்று விர்த்தியதாஞ் சுகமேபூர்வந் தலபேதம்
வீதிமூன்றுப் பிரிவதன்னில் விரிவாமிரண்டு மனையென்னே. 55
சார்ந்ததுலையி விரண்டாங்கால தன்மையுடனே ஜெனித்தோற்கு
சேர்ந்தவிர்த்தி சகோதரங்கள் திறங்கோள் மூன்று நிலையிரண்டு
தேர்ந்ததொன்றுத் தலபேதஞ் சிறந்தசமுத்திர யாத்திரையாய்
ஓர்ந்துபொருள்கள் னந்தேடி யுணர்வாய் வருவானெனவோதே. 56

## வேறு

பெருமிதில்தேகஞ் சமருபமாகும் பெருமையாய் நிறமதுப்பொதுவாம்
தருமிதில்யோக மிருப்பதல்லாது சார்ந்திடுமூன்றினிற் செல்வம்
வருமிதில்நட்போ ரந்தணர்கூட்டம் வழகியச் செல்வமுமோங்கப்
புரிவதுமனையாள் வழிதனிற்செல்வம் பொருந்திய நிலையெலாந்தெடுமே. 57
மதியவர்க்கிரண்டுக் குடையவர்கேந்திரம் வலுவொடுநிற்பர்கா ணிதனாற்
பதிதனிற்செல்வம் பாக்கியம் வருத்துப் பலர்தன்னால் விரயமேயுண்டாம்
புதிய கட்டடங்க ளாலயமதனாற் பொருந்திய விரயமுமுண்டாம்
அதிபனால்பார்வை யாகிடிற்சுகங்க ளதிகசெல்வங்க ளுண்டாமே. 58
மன்னனே மூன்றுக் குடையவராக வந்ததால்ஜாதகன் றனக்கு
வின்னமொன்றில்லை சகோதரன்றன்னால் மிகுசுகமடைவ னென்றோதும்
உன்னிதமாக விருதொழிலுடைய னுமன்னிய பாஷைகள்கற்பன்
முன்னியதவத்தோர் மனப்படிசெய்வன் முற்றிலும் ஞானக் கேள்வியனே. 59

## வேறு

நலந்தரும் நான்காமாதி நன்மையாம் பாவர்நட்பாய்
தலந்தனி லிருக்கவன்னைத் தக்கச்செல்வீக மென்க

சலந்தன்னால் ரோகங்கண்டு சடுதியி லிறப்பாளென்க
குலந்தனில் வணக்கமுள்ளாள் குறைவதொன் றில்லைமாதோ. 60
இறப்பது நிலைகளாயு ளின்பமாய்க் கேளுமன்னா
குறைப்படு மீறைந்துக்குக் குறிப்புடன் மாரகங்கள்
தறிப்படும் பதினைந்திற்குச் சார்ந்தவர்க்கத்தில் கர்மம்
தெறிப்படும் பிதுர்க்குத்தாரம் சிறப்பில்லை யன்னியமொன்றே. 61
மாலவன் றனக்கைந்தாதி வரும் பாவர் சகிதமானால்
கீலக வம்மான்வர்க்கங் கெடுதிகாண் சுகங்களெல்லாம்
சாலவும் வர்க்கத்திற்குள் சத்துரு மிகவுண்டாகும்
வாலிபந்தன்னிற் புத்திராள் வலுவுடன் நிலைமூன்றாமே. 62

## வேறு

காணுதலாறா மாதியின்பலன்கேள் கணிதமாம் பாவரின்சகிதம்
தோணுமங்கிருக்க ரோகங்களதிகஞ் சொல்வது வுந்தியில் ரோகம்
வாணுதல்தனக்கு ரோமேகாட்டு மன்னனால் பகையில்லையென்க
வீணிலேவிரய மதிலருணமுண்டா மேன்மையிப் பலனெனேவாதே. 63
கூறிடுமேழா மாதியின் பலன்கேள் குணமுளக் களத்திரமேகம்
பாரினிற்செல்வம் களத்திரமதனால் பாக்கியம் விரயமாமென்க
தேரியக்குடும்பம் மத்தியிற்செல்வஞ் சிறப்பில்லைப் பின்தசமாண்டு
மீறியவிரயம் ருணமெனவோது மிக்க செல்வீகமும் போமே. 64
கண்டதோர்நிலைமைக் களத்திரமனைகள் கருதுவன் வீதிகீழ் மேலாம்
கொண்டதென்பக்கம் வடமேற்கில் கோவில் கூறுவாரிருமனைவிர்த்தி
தொண்டர்கள் சூழுங்கட்டடமொன்று சொல்வது கன்னியின்றிசையிற்
மிண்டியக்குடும்ப மதிகசெல்வீக மிவையெலாம் பாதிநாளென்னே. 65
சொல்லுவர்களத்திர நிலைவருங்காலஞ் சொல்வது விருபதல்லாது
வெல்வது மூன்றில் சுபமதைமுடிப்பன் மிக்க கோள் பார்வையினாலே
அல்லலொன்றில்லை சுபர்களால்பார்வை யடைந்திட னிப்பலனெல்லாம்
செல்வமாமிவ்வாறு நிலையென்றுவரசே செப்புவாய் மனதிடம்வைத்தே. 66
பொருந்துமட்டமத்தோன் மதிக்கெட்டாமாதிப் பூரணமதியொடு சகிதம்
திருந்தியேயிருக்க யிதற்குமேபலன்கள் செல்வனாமெழுப தல்லாது
வருந்தியமைந்தில் மாரகமாகும் மன்னனே விதுநிலைபிசகா
வருந்தியேயிருப்பன் ஐம்பதாண்டப்பால் வருஞ்சுகம் சௌக்கியம்போமே. 67
விதித்தபாக்கியாதி யுபயத்துள்ளுறினும் வேந்தனால் பார்வையங்கிருக்க
பதிதனில் பூர்வம் பேதமாஞ்சுயார்ச்சிதப் பதிதனில்நிலையெனச் சொல்லும்
நிதியெல்லாம் பிதுர்க்குமேல் விர்த்தியாகி நிலைவிரயங்கள் செய்குவன்காண்
எதிரியின் பொருளை யுப யதந்திரமா யிடரிலாதனுபவித்திடுவன். 68

## வேறு

வருந்தந்தைக் கண்டங்க ளறியவேண்டில்
வருமொன்பான் பின்னெட்டோன் மகிழ்ச்சிப் பத்தோன்
பெரும்பலன்கா ணேழாதி சகிதம்பார்வைப்
பெலமாகில் பிருகுவெய்யோ னாண்டிற் கண்டம்
தருமென்பர் சுபவிரயத் தாலேதர்மம்
சார்ந்துவரும் நிலையென்பர் தன்மையுள்ளோன்
உருத்தந்தைச் செல்வத்தின் மேலாய்க்கீர்த்தி
யுறுமென்ப ரிவ்விதமா யுறுதிகூறே. 69

## வேறு

குறிப்பிடல் பத்தாமாதிக் கூறுவன்மதிக்குப் பத்தோன்
தெறிப்படல் தொறில்கள் பூமிச் சிறந்திடும் வித்தைதன்னால்
குறைபடா செல்வங்கீர்த்திக் குணமுடன் பொருளுங்கூடும்
நிறைபடுஞ் செட்டுவர்க்கம் நிலையினாற் செல்வமென்னே. 70
பலன்படல் லாபத்தாதி பாக்கியந் தனக்குலாபம்
குலமதாய்க் கேந்திரகோணங் கூடியே யிருப்பாராகில்
தலமதிற் றென்கிழக்குக் சார்ந்திடுங் கும்பராசி
பெலமொடு லாபமுண்டாம் பெருகுமித் திசையிற்றானே. 71

## வேறு

கண்டிடவிரயத் ததிபதி பலன்கேள்
கதிர்சனிப் பார்வையங் கிருக்க
உண்டெனும் பூமிப் பொருளெலாம் விரய
முற்றிடு மினத்துள்ளோர் தம்மால்
கொண்டநற்பொருளைக் கடன்கொடுத் திழப்பன்
கொடியவர்ப் பார்வையுண் டிதற்கு
தண்டனைப் போலப் பயமதுண்டாகுஞ்
சிறந்து சொல்லிடும் புவியோர்க்கே. 72

*துலாமிரண்டா மோரையின் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## துலா மூன்றாமோரையின் பலன்

சிறந்திடுந் துலாத்தின் மூன்றாவதோரைத் திரங்கேளும் வீதிகீழ்மேற்கு
வருந்தனம்வடக்கு முகப்பெனலாகும் வருவது யெதிர்மனைவிர்த்தி
பெருந்தனம்பூர்வஞ் சுயார்ச்சிதபூமிப் பலமொடு தத்துபுத்திரனாம்
தருஞ்சுகந்தென்மேற் றிசைதனிற்கோவில் சந்துண்டாமருதினி லென்னே. 73

கூடியத்துலையின் மூன்றாவதோரைக் கோள் சுபர்சகிதாராகிடினும்
தேடியவரசே வர்க்காதியிருவர் சிறப்பில்லை யேகனாம் விர்த்தி
நீடியத்தந்தை காலத்தில்மூவர் நிலையெனப் பிதுர்செல்வமுளனாம்
வாடியமனைவி யிருவரால் சுகங்கள் வருமென நிலையிவ்வாறோதே. 74
பெலத்திடும் பிதுர்க் கிவ்விதமம்மான் வர்க்கம் பெலமுடன்வர்க்காதி மூவர்
தலத்தினிலேகன் விர்த்தியாமம்மான் சார்ந்திடும்நிலை யிரண்டுளதாம்
குலத்தினிற்செல்வன் பிரபலயோகன் குணமுளன் வித்தைவல்லவனாம்
துலைதனின் மூன்றா மோரையிப்பலன்கள் சொல்லுவ ரின்னிலைப்பலனே.75

## வேறு

சிறந்திடும் தந்தைபூர்வஞ் சிறப்புட னிரண்டதாகும்
மறைந்திடு மொன்றுபாழு மற்றொன்று விர்த்தியாகும்
நிறைந்தநற் றனங்களெல்லாம் நிகழ்த்திடும் விரயமாகும்
பிறந்திடுங் குடும்பம்விர்த்தி பேசுவா னேகன் செல்வன். 76

## வேறு

தந்தையின் பூர்வந் தனக்கருகினிலே சார்ந்திடுமேற்கி லாலயமாம்
விந்தையாந்தென்மேற் றிசை தனிற்கங்கை மிகுத்திடும்தென்கிழக் கதனிற்
துங்கமாய்வனங்க ளருகினிற்கால்வாய் சூழ்ந்திடுமிகு சிகரமுமாம்
பங்கமில்பலன்க ளாகிடிலரசே பகரலாந் துலைமூன்றாங்காலே. 77
பொருத்திய ஜன்மத் ததிபர் கேந்திரத்திற் புக்குபயந்தனில் மதிக்குத்
திருந்தியப் பலன்கேள் திரத்தினிலிருப்பர் செங்கதிர் பார்வையங் குறினும்
தருந்தனம் தந்தைப் பூர்வீகமெல்லாந் தரைமிசை விரயமேயாம்
திருந்தியவம்மான் வர்க்கமேதோஷம் சிறப்பில்லை யிவ்விதப் பலனே. 78
பாலனே பாலா பரிக்ஷித்துகேளாய் பாக்கியத்ததிபர் பின்விரயம்
சாலவும் லாபாத் ததிபனால் பார்வைச் சார்ந்திடின் முன் பூமிப்பொருளும்
கோலிய மனை விர்த்தியும்பாழாய்க் குலைந்திடும் முப்பதல்லாது
ஈலவுமைந்துப் பின்னிருநான்கு மிவ்வாண்டினிற் விரயமாமென்னே. 79

இன்பமுட னெட்டாதி ஜென்மத்தாதி
யிவர்க்கேந்திர கோணமதி லினியமதிக்காகில்
துன்பமிலையாயுளது வெழுபதல்லால் நான்காம்
சோர்வில்லைத் துணைவரில்லை யன்னியரால்கர்மம்
அன்புடைய தெய்வபக்தி யடியார்கள்நேச
மாகிப்பனஷ்டவித மரும்வித்தை கற்பன்
தென்புடையச் செல்வீகன் ஞானியர் தன்குணத்தன்
திரமுடையன் செல்வீகத் திரமந்தியப்பலனே. 80

## வேறு

சந்திரன் றனக்கிரண்டோர் சசிக்குக் கேந்திரத்தில்நிற்க
முந்தியப்பூர்வநாச முடிவிலா தேசநட்பு
விந்தையாம் பலபேர்பாஷை விரும்பியேகற்பனென்க
வந்திடுமனைவிமக்கள் வருங்குடும்பங்கள் பாழே. 81
சிந்தையிற்பேதமாகித் திகைத்துப்பின் னன்னியதாரம்
வந்திடுமதனாற்பொன்னும் வகையுடன் விரயஞ்செய்வன்
முந்தியஜலத்தால்கண்ட முடனன்னிய தேசமென்க
சொந்தமாமனைவிதானும் சொற்பகை யிடருண்டாமே. 82

## வேறு

நாடியமூன்றினில் பலனெவ்வாறென்னில் நலமில்லை சகோதரரென்க
வாடியவிர்த்தி சகோதரர்சமாம் வரும்பெண்பால் நிலையொன்றதாகும்
தேடியச்செல்வம் தானில்லைசகங்கள் திரமில்லை ஜாதகன் றனக்குக்
கூடியநட்பொன் றிலலை காண் குடும்பம் குலைந்திடுமென் றுரைத்திடுமே83

## வேறு

அல்லலாமாதாவுக்கு அடைந்திடு மாயுள்தீர்க்கம்
வெல்லும் செல்வங்களில்லை மிகுமனை தன்னில்விர்த்தி
தொல்லையா மாதாவுக்குச சுகமன்னை வழியிற்றானும்
நல்லவிர்த்தியு மாமத்திய நாட்டிற்சஞ்சார மென்றே. 84

## வேறு

ஐந்தினுக்கைந்துக் குடையவர்திரத்தி லமர்ந்திட வம்மான்கள் குடும்பம்
முந்தியசுகமாம் பின்சுகபேத மொழிந்திடும் புவியினிப்பலனே
விந்தையாம்புத்திரான் ஜாதகர்க்கில்லை விரும்பியப் பெண்பிறந்திறக்கும்
தந்திரச்சித்து வன்னியதேசம் சஞ்சார நிலையெனப்படுமே. 85
ஓதியச்சத்துரு தானநற்பலன்க ளுணர்வொடு சுகமில்லைரோகம்
தீதிதிலில்லைச் சத்துருநாசம் சிறந்திடும் வலியநற்பகைகள்
நேதியவரசே மித்திரன்றன்னை நிமிஷத்திற் பகைதனைக்காட்டும்
தோதவிப்பலன்கள் சொல்வதாறினுக்கே சொல்லுவரின்னிலைப்பலனே. 86
சத்தமப்பலன்கேள் யேகமாந்தாரம் சார்ந்திடுமன்னிய மிரண்டு
சுத்தமாயன்னிய தேசசஞ்சாரத் துடர்ச்சியிலேகமாமென்க
சித்தியாங்கலகம் சஞ்சலமதனால் சீரியக்கலகத்தா லிருவர்
உத்தமர்பார்வை யிருந்திடிலிதற்கு வுரும்பலனிவ்வித மென்னே. 87

## வேறு

நிலைசுபங்கள் காலமது யறியவேண்டில்
நிறைமதிக்கு வேழுபத்து நிலையாய்ச் சொல்வோம்

குலவர்க்கந் தனிற்பெண்பால் வாலிபத்திற்சுபமாம்
கும்பதிசை நிலைப்பெண்பால் குணமாம் விர்த்தி
நிலையவ்வாற் றிசைபெண்பால் கீழ்மேல் வீதி
நிறைதென்பால் மனையென்பர் நிலையேயீதாம்
தலமதனை விட்டன்னிய தேசந்தன்னிற்
சார்ந்தசுப முடிப்பரெனத் தன்மையோதே. 88
நிரியாணக் கண்டங்க ளறிதலெட்டாம்
நிலைதன்னா லீரைந்து நிலையேழாண்டிற்
பொரிகலங்கக் கண்டமென் வோதுவப்பால்
பொருந்திவரு மிருபத்தேழினி லோர்க்கண்டம்
தெரிந்தவய திதில்தசமாம் பின்னும் நான்கிற்
சிறந்தகண்டம் வருமென்பர் ஜென்மந்தன்னில்
பிரிந்தசுபர்ப் பார்வையதி லிருக்கவாயுள்
பெலமென்பர் தீர்க்காயுள் பெருமையீதே. 89
சொல்வதுகேள் பாக்கியநற் பலன்கள் பாலா
சுகபாக்கியாதிபதி மதிநி கொன்பாதிபனும்
வெல்வதுகே ளிவர்ப்பரிதிப் பார்வைதன்னால்
விளங்கிநிற்க வேந்தனால் பார்வையங்கும்
தொல்லையதாம் நிற்கபிதுர் பூர்வசுயார்ச்சிதங்கள்
தொடுத்ததந்தைப் பொருள்பூமி யெல்லாம்போகும்
அல்லலுடனதிகாரம் செய்வார்க ளதனி
லைம்பத்தே ழாண்டின்மே லதிகசெல்வமாமே. 90
மகிழ்ச்சியில்லை யென்றுரைத்தீர மரணானந்தம்
வாழ்வென்றீ ரதுயெவ்வாறு வகுத்தேயோதும்
இகழ்ச்சியிதிலில்லாம லெடுத்தே சொல்லும்
எளியோர்க்கு விப்பலன்க ளிடராகாது
புகழ்ச்சியிதி லறியக்கேள் மன்னாயங்குப்
பூரணமாம் வயதிதற்கு வதிலும்பாதி
உயர்ச்சியதா முபயமதுக் கப்பாலேக
முற்றவய திக்கால முறுமரசர் பேட்டி 91

## வேறு

மதிக்குபத்திடத்தோனுபயத்தின்பத்தோன் வருங்கோணமாகி பின்னுபயம்
நிதிக்குப்பின் தனத்தோன்பின்னாறா மாதிநிலையொடுப் பார்வையங்கிருக்கப்
பதிதனிற்கிருஷி மூலத்தாலரசர்ப் பற்றியநிலையினாற் செல்வம்

கதிக்கொளும்ஞானக்கேள்வியாலவிழ்தங் கைக்கொளும்விஷயத்தாலென்னே.
கருதியகர்மத்ததிபன் கேந்திரத்திற் கனிதமாந் தனத்தினிலுறினும்
பருதியின் பார்வை சகிதமாகிடிற்கேள் பற்றியத்தொழிலாக்கினிவிர்த்தி
திருதியத்ததிபன் காரகமிதற்குத் திரஞ்சொலும் துதியன் காரகத்தில்
வருமிதிற்செல்வ மாலயமடங்கள் வருந்தர்மம் நற்றொழில் தானே. 92

## வேறு

சுகந்தரும்பின் லாபாதி திரத்தினிலே யொன்பான்
சூழ்ந்திருக்க சுகலாபம் துணியுடனுண்டாகும்
ஜெகந்தனிலே விரயாதி சசிதானத்திருக்கிற்
தனவிரய மாகுமெனத் தன்மையிதுவோது
அகங்கடும்பம் நிலைப்பூர்வ மாதீனமெல்லா
மதிலெடுத்து மனப்பகையா யலைவனெனவோதும்
ஜெகந்தனிலே பிறர்க்குதவி பிறராலுமேன்மை
சிறந்தசௌக்கிய மடைவர் திறமையிதுகாணே. 93
மருவிவரு மோக்ஷத்தி லிச்சையுளனாகு
மலநீக்கும் சிந்தையுளன் மலம்நீக்கானென்க
நிருவிகரபக்ஷமுள் ளாசிரியர் தன்னால்
நிறைகேள்வி யுபதேசம் நீள்சுபங்களுண்டாம்
பருவமுள்ள வயதில் புதுமனைக் கட்டடங்கள்
பலமாகுமரசேகே ளின்ன முஞ்ஜாதகன்றானும்
பரவிவரும் வினைகளெல்லாம் நீங்கிப்பின்மேலாம்
பதவிக்குப் பலனுண்டாம் பாலர் தமக்கென்றே. 94

*துலா மூன்றாமோரையின் பலன்முற்றிற்று*

✲ ✲ ✲

## துலா நான்காமோரையின் பலன்

கருதுவர்த்தூலையில் நான்காவதோரைக் கணிதமாம் பிரிவதுவீதி
தருவதுகீழ்மேல் வீதிதென்பக்கம் தழைத்திடு மெதிர்மனைவிர்த்தி
பிரிவதுமுனிமி யாருபக்கமீனம் பேசுவர்மேல் பக்கம்சந்து
அரிவதுப்பூர்வ மதுதனிற்வடமே லாலயமென் றுரையே. 95

## வேறு

கோல்நான்கா மோரைக்கு பலன்குறிக்கில்
கோவில்கும்ப திசைமிதுனங் கூறக்கேணீ
சேல்திசையி லாதீனமென்கப் பூர்வந்

திரணாசமாதீன மிரண் டிடத்திற்
மால்கேந்திரக் கோணமல்லார் மதிக்குவெட்டு
மன்னவனே பின்னெட்டு வலுவுள்ளோர்கள்
மேலீனமாகி லிவர்ப் பார்வைநட்பு
மிகுமாகி லிதிலம்மான் விளக்கமென்றே. 96

**வேறு**

இன்பமாயெட்டுக் கெட்டாதிகேந்திர மிடரில்லா திருந்திடிற்செல்வம்
துன்பமாம்புதல்வன் மாதமொன்பதனிற் சொல்லுவர்மாரகக்கண்டம்
அன்புடன்காட்டும் வருடமோரிரண்டி ளதிகக்கண்டாதி கண்டமுமாம்
இன்பமாமிளையோன் விர்த்தியிற்செல்வ மிடரிலா தனுபவிப்பலனே. 97

***துலா லக்கின நான்கு ஒரைக்கும் செய்யுள் - 97***
***முன் லக்கினம் 5-க்கு 454***
***ஆக மொத்தம் - 551***
***துலா நான்காமோரையின் பலன் முற்றிற்று***

✲ ✲ ✲

## விருச்சிகோதயம்

அரிவதுகாண் விருச்சிகமே யுதயமாகில்
அப்பனே கீழ்மேற்கு வீதியாகும்
தெரிவான தென்வாசல் மேற்கேகோவில்
செப்புகிறேன் மேல்புறத்தில் தடாகமொன்று
விரிவான கீழ்புறத்தில் நீரோடுங்கால்வாய்
விதமான மரமுண்டு வறிந்துக்கொள்ளு
பிரியமாம் வடபுறத்தில் பிடாரிக்கோவில்
பேரானப் பாட்டையொன்று தோன்றும்பாரே. 1

**விருச்சிகத்தில் பாவாதிபர்கள் நின்ற பலன்**

தேளதனில் நிலமகன்றா னாக்ஷியாக
சிறந்துஜென்மந் தனிலிருக்கில் திறமைகேளும்
கோளில்லை சத்ருக்கள் நாசமாவர்க்
குணமில்லை சகோதரத்தால் குறித்தசெல்வம்
வாள்போலத் தனத்ததிபர் தேனிற்நிற்க
வரும்பகையாம் புத்திரசுகம் வலுவோயில்லை
தோள்தனிலோர் தழும்புளதாம் வித்தையுண்டாம்
தொல்புவியி லதிகாரம் சொல்வரீதே. 2

## வேறு

கண்டிடுந்தேளில் மூன்றாதிப் பகையாய்க் கலைமதித்தனக்குமே நான்கிற்
விண்டிடாதிருக்கிற் யோகிகள்நட்பா மின்பமாமாரலாய் நிலைப்பர்
துண்டெனுமவர்க்குக் கணிதமுமுள்ளோன் சுகமில்லை சகோதரவர்க்கம்
மிண்டியச்சத்துரு நாசமாம் நான்கோன் மிக்கதோர் நீலனுமாக 3
உண்டியிற்சுகங்கள் பேதமேகாட்டு முறுமன்னை வர்க்கத்திற்றோஷம்
அண்டியக்கன்று காலிகள் விரய மாதீன பேதமுண்டாகும்
கொண்டபஞ்சமத்தோன் கேந்திரமதனிற் குணமதாம் பகையதிலிருக்கில்
ஒண்டியதத்து புத்திரனென்று வோதுலர்சுயபுத்திர னிலையே. 4

## வேறு

ஆறாதிநிலமகன்றா னவர்தேனி லாக்ஷியாகில்
மாறாதயோகம் சத்துரு வலுவுள்ளரோகமுண்டாம்
தேறாதுவேழாமாதித் திரங்கவி நட்பாய்வந்தால்
மாறாதுகளத்திரத்தில் வரும்பகை விரயமென்றே. 5
தூராகுமட்டமாதித் தூதுவன் லக்கினகேந்திரம்
கூராகநின்றானாகில் கூறுவன் பலன்கேள்மன்னா
தீராதரோகமாகும் செல்வமு மிகுதியுண்டாய்
பாராளுமன்னனாவன் பகருவீராயுள் தீர்க்கன். 6

## வேறு

வரும் நிலையொன்பான் விருச்சிகநீசம் வந்த ஜாதகற்கினி பலன்கேள்
தருவதுதந்தை சுகமில்லைப்பூர்வம் தரணியிற்பேதமா மென்க
பெருகியபத்தா மதிபதியிரவிப்பெலன்றேளிற் பகையதாயிருக்கத்
கருஞ்சுகம் ஜீவனங்க ளிப்புவியிற் தக்கவாணிபந்தன்னா லென்னே. 7

## வேறு

கதித்தபுந்தி லாபாதி விருச்சிகத்தில்
கனபகையாய் நின்றிருக்கிற் கலகஞ்சத்துரு
விதித்தனர்காண் ஜேஷ்டனுண்டு விருவருக்கும்
மிக்கபகையுண்டாம் வேந்தர் நட்பாம்
மிதித்தனர் காண் மாதீஙப் பேதங்காட்டும்
மைந்தனுக்குத் தந்தைபொரு ளதிகமாகும்
விதித்தனர்காண் விரயாதி ஜென்மமேறில்
மிக்கபகை களத்திரத்தால் மிகுவிரயமென்றே. 8

## வேறு

தேரியதேளே ஜென்மம் ஜெனித்த ஜாதகற்கு வேழோன்
மீரியபஞ்சமாதி மிகுதனந் தனிலேநிற்க
மாரியப்பிதுர்க்கள்பூமி வருஞ்சுயார்சிதமே நிற்கும்
கூறினரம்மான்வர்க்கங் குணமில்லை சமனாஞ்செல்வம். 9

## (இரவி நின்ற பலன்)

தேள்தனி லிரவிநிற்கச் சிறந்தவர்க்காதி தோஷம்
கோள்கலகங்கள் கேட்பன் கொடிய ரோகங்களுண்டாம்
தோள்தனிற் குடைச்சல்நோயாம் துயரிலாயோகிநட்பன்
வாளுட னாயுதங்கள் வலுவொடு ஜெயிப்பனென்றே. 10

## (மதி செவ்வாய் நின்ற பலன்)

இன்பமாய் விருச்சிகத்தில் யினியசந்திரனே நிற்க
துன்பமாம் பிதுர்பூர்வீகம் சுகமில்லை யன்னைவர்க்கம்
அன்பொடு நிலமகன்றா னாக்ஷியாயிருக்க லக்கினம்
இன்பமாய் நின்றால்செல்வ மிடரில்லை சத்துருபூமி. 11

## (புதன் நின்ற பலன்)

வன்பொடு விவகாரங்கள் வழக்கினால் ஜெயமங்குண்டாம்
தென்பொடு புந்தி நிற்கச் சிறந்ததீர்க்காயு ளுண்டாம்
துன்பமொன் றில்லைபூமி சுயார்ச்சிதம் நிலமையாகும்
தன்பொருள் கடன்கொடுத்துத் தயங்கியே யிருப்பனென்றே. 12

## (குரு நின்ற பலன்)

இடரிலா தேளில்மன்ன னினியவர்க் கின்மைதாக
தடையிலை செல்வனம்மான் சார்ந்தவர்க்கத்தால் செல்வன்
உடையணி யதிகம்பூமி விற்றராஜ்ஙக மென்க
விடையேறு மீசன்பக்தி வெகுதனம் தானஞ்செய்வன். 13

## (சுக்கிரன் நின்ற பலன்)

படைசத்துரு ஜெயிப்பன் சுக்கிரன் பற்றியே நிற்பாராகில்
குடையோகங் களத்திரத்தால் கூடியச் செல்வமுண்டாம்
துடைரோக முடையன்றந்தை சொத்தெல்லாம் விரயஞ்செய்வன்
திடமிலான் மனைகளீனஞ் செய்குவன் சிறப்பில்லானே. 14

## (சனி நின்ற பலன்)

கலக்கமிலா விருச்சிகத்தில் காரிநிற்கி லதிகக்
கன்னியர்கள் நட்புடையன் கல்வியுள னாகம்

இலக்கணங்கள் கற்கவல்லோ னேந்திழையைப் பகைப்பன்
யினியசொல்லில் வல்லவன்கா னின்னமுங் கேள்மன்னா
துலக்கமிலா பெண் சகோதரர்களுமே யுண்டாம்
சொல்லுவது தானிரண்டு யொன்று செல்வமுளதாம்
விலக்கமினி யிப்பலன்கள் கண்டுரைப்பாய் மன்னா
மேன்மையிது ஜாதகற்கு மிகத்தெளிவா முறையே. 15

## விருச்சிக முதலோரையின் பலன்

பலமதுதேளில் முதலோரைதன்னில் பாலமொடு ஜெனித்த ஜாதகற்கு
உலகினில் கீழ்மேல் வீதிதென்முகப்பு வுறுதியா மெதிர்மனைச்சந்து
விலகியக்கீழ்பால் பெண்ணனுபவமா மேல்பக்க மிருமனைப் பிரிவாம்
கலகமொன்றில்லை யன்னையின்வீடாங் கருதுவீர்பிறக்கு மிவ்விடமே. 16

### வேறு

தேள்முதற்கா லோரைதனில் ஜெனிப்பாராகில்
தென்கிழக்கி லாலயமா மிரண்டுள துகங்கை
யாளெதிரி லாரலுண்டா மரசர்மனைக்கீழ்பா
லாகுமது பக்கமதி லோர்சந்து முண்டாம்
வாழ்மனைமேல் பக்கமுண்டா மப்பாலோர்சந்து
வருமதற்கு அருகினிலோ ராலயமுமுண்டாம்
சூழரச ரக்கினிதன் னாலழிந்தமண்ணே
சொல்வதற்கு வெந்தமண் ணென்றுறுதி யிதுவாமே. 17
சரமெனுமோர் பாக்கியாதி திரத்தில்நிற்க
தந்தைவர்க்கம் நான்கெனவே தலமையோதும்
திரமதிலே விர்த்தியிரண்டு மேன்மையாகும்
சிறந்தசௌக் கியமெல்லாந் திரம்பாழாகும்
வருமரசர்ப் பார்வையினால் வலுவாந்தந்தை
வரும்சகோ தரங்களதின் மகிழ்ச்சி மூன்றாம்
திரவியங்கள் பிதுர்சுகத்தின் மேலதாகும்
சிறந்த சௌக் கியமுண்டாந் திறமையீதே. 18

### வேறு

மருவிய ஜாதகற்கு வரும்நிறம் சமன்ரூபங்கள்
பெருகிய செல்வன்கீர்த்திப் பெலமுளன் பிதுர்க்குமேலாய்
தருமநீதி யுடையன்தெய்வ சார்ந்தவாலயத்துள் நண்பன்
இருவிதவித்தைகற்பன் இடரில்லா றறைகுவாயே. 19

## வேறு

தனமதுகேளாய் தனாதிகேந்திரத்திற் தரும்சுபர்பார்வையா யிருக்க
மனதுநல்லன் கீர்த்தியோகனுமாம் வருமிருவித்தையை யுடையன்
தனமதுலாபங் குடும்பவிர்த்தியுமாம் சஞ்சலமில்லை யென்றோது
தினம்நல்லோர் தங்கட்குத்திரவியவிரயம் செய்து நற்றவம் புரிகுவனே. 20
திருதியப்பலன்கேள் சகோதரனாசம் சிறப்பில்லை தசமுண்டாம்விரயம்
குருகியவிர்த்திப் பெண்ணிலையொன்றுக் குணமில்லையென் றுரைப்பதுவே
தருமிதிற்சத்துரு சுபஜெயமென்றபே சாற்றுவரைந்துளோன் கர்மம்
பெருமையாயிருக்கில் கர்ண பூஷணங்கள் பெருமிசையோகமும் பெறுவன்.

## வேறு

நன்மைதரு நான்காதி மதிக்குநான்காதி
நலங்கேந்திர கோணத்திற் நற்பாக்ஷியாக
வன்மைதரு மிப்பலன்கள் பெலன்பூமிவிர்த்தி
வருகுமே நற்செல்வீகம் வாகனங்கள்
பன்மையதா மாதுர்சுகம் பலநாளுமுண்டாம்
பாருலகில் மன்னவனே யிதுதர்மயோகம்
தன்மையுடன் செல்வமது வளர்மதியைப்போல
தான்வளரும் நாளுக்கு நாளாகத்தானே. 22

## வேறு

ஓதியநற் பலன்கேளா யன்னைகண்டம்
வொருநாற்ப தல்லாது வொன்றில்தீதாம்
வேதியன் கேந்திரகோணம் பார்வையாகில்
மிகுவாகனங்களது மிகுதி யுண்டாம்
ஆதிபனால் பொருள்பூமி தனில்வழக்கு
அரசரா லதில்விரய மாகுமென்பர்
அரசரா லதில்விரய மாகுமென்பர்
சேதிதலம் விட்டேகி யன்னியதேசத்திற்
சேயனவன் சட்டடங்கள் செய்வான்பாரே. 23

## வேறு

ஐந்தினுக்கைந்து மதிக்கைந்தாமாதி ஆறுளோன் சகிதமாயிருக்க
முந்தியவம்மான் பூர்வமேநாச முற்றிடுமனையிரண் டிடமாம்
தந்திடுந்தந்தை வர்க்கமேநான்குத் தலபேதமேகனாஞ்செல்வன்
சிந்தையிற்பேதமாகியேகன் சிறந்திடநிலைத் திருப்பதுவே. 24

## வேறு

வரும்புத்திர பலனறித லரசேகேளாய்
வலுவுடைய பாக்கியாதி வரும்சுபரால்பார்வை
தரும்பலன்கள் பெண்மூன்றுத் தலைவனொன்று
தழைத்திருப்பன் செல்வீகன் றாழ்வொன்றில்லை
பெரும்பலனாம் புத்திரனால் மகிழ்ச்சியுள்ளன்
பேதகியா ளதிலொருபெண் பெருஞ்செல்வீகம்
உருதிபல னிவ்விதமா யறிந்துமைந்தா
லோதுவது விப்பலன்க ளுறுதியாமே. 25
அறிதல்கே ளாறிடத்தால் பலனெவ்வாறென்னி
லாறினுக்கே யாறாதி யட்டமாதி
குறுகிய சத்துருக்களில்லை ருணங்களில்லை
குறிப்புடைய ரணங்களில்லைக் குணமிவ்வாறாம்
வருமிக்க நிலைக்காறு நிலவுக்காறு
வரும்வர்க்கந் தனிலேகன் வழக்குசெய்வன்
தெரிவதிவ்வாறு பலனாறா மிடத்திற்சத்துரு
சேதமெனச் சொல்வரிதின் திறமையீதே. 26
கண்டசத்தமப் பலன்கேள் களத்திரமொன்று
கணிதமுடனன்னியத்திற் கொள்வானென்க
உண்டெனுமோர் பிருகுக்கு வேழாமாதி
யுற்றசரந் தனிலிருக்கிற் கீழ்மேல்வீதி
கொண்டுவரு மிதன்வடபால் மனையெதிரில்சந்துக்
கூறுவது தென்கிழக்கி லாலயமாஞ்சொல்லு
சென்றசெல்வ மத்தியிலே சமனாமேயோகஞ்
சிறந்தமனைக் கட்டடங்கள் திரமாமென்றே. 27
இன்பமொடு சுபமுடியுங் காலங்கேளும்
ஏழாதிக் கேழிடத்தி லினியகுருவருங்கால்
துன்பமிலா சுபமுடிப்பர் விருபதல்லால்நான்கு
சொல்லொன்றிற் முடிந்துவிடும் துணிவாமீது
அன்புடையக் களத்திரத்திற் காயுள்தீர்க்கம்
அழகுடையா ளென்றுரைப்ப ரந்தணர்தம்பார்வை
தென்புடனே தானிருக்கத் திரவியங்கள் சேரும்
சிறந்தசெல்வங் களத்திரத்தால் திறமையுண்டாமென்னே. 28

## வேறு

காரிக் கெட்டுவதற்கெட்டுக் கணித்தமதிக்குத் தானெட்டு
தீரம்தீக்கோளிதிலாக்ஷி செல்வம்பெருகுங் தீர்க்காயுள்
பாரில்ஜன்மந் தனக்கெட்டுப் பலன்காண் புந்திப்பார்வையினால்
சேருமெட்டு வறுபதல்லாற் றிரமேயாதும் செல்வமுளன். 29

## வேறு

பாக்கியத்ததிபர் மதிக்குப் பாக்கியத்தோர் பற்றியே திரத்தினிலூறினும்
நீக்கியத்தந்தை காலத்திற்செல்வம் நிலையில்லை ஜாதகன்காலம்
நோக்கியமேன்மை யுச்சமோடாக்ஷி யுடையவர்ப் பார்வைகளாகில்
தோக்கியேயிருக்க சுபகர்மவிரயம் சொல்வது வின்னிலைப் பலனே. 30
பேதமொன்றில்லை பிதுர்க்கர்மமெவ்வாறு பிரித்திடி லீரைந்தாமாண்டில்
வாதனைக்கண்டம் பின்னேழிலரசே வலுத்தமாரகங்களைச் செய்யும்
ஓதியபிதுர்கள் பூர்வீகமெல்லா முற்றிலும் வழக்கினால்விரயம்
வேதியன்பார்வையதில்நிற்கவதிலோர் விகற்பமொன்றில்லையென்றுவரையே 31
இயம்பிடுபத்தாமாதி யேழிடத்தி லிருக்கவாறாதிபன் பார்வை
ஜெயம்பெரில்செல்வன் பிதுர்க்கு மேல்கீர்த்தி சிறந்திடப் பூமியால்செல்வம்
நயம்பெறுமரசர் பேட்டியுண்டாகும் நன்மையாம் விஷயத்தில்விரயம்
பயன்பெருஞ் செல்வமுள்ளவள் பூமிப் பற்றியத்தொழிலென்பர் பகுமே. 32
பேசியலாபப் பலனதைக்கேளும் பெலமொடு வடகீழ்த்திசையிற்
காசினிதன்னிற் பிரயாணம்நேருங் கனத்தநல் லாபமங்குளதாம்
மோசமேயில்லை யரசர்கள் பேட்டி முற்றிலுஞ் சுகமதிலென்க
வேசியர்தன்னா ததிற்சொற்விரயம் வீணதிற் கலங்கியேயிருப்பன். 33
வகுத்திடும்விரயத் தான்நற்பலன்கள் வருமிருமனையுண்டா மென்க
ஜெகத்தினில் தேச சஞ்சாரியாகும் திரமுடன் வதிகார நட்பு
மிகுத்தநற்செல்வம் வீண்விரயங்கள் மேதினிதனிற்வழக்குளனாம்
சுகத்தினில்மேன்மை யடைகுவனென்றுச் சொல்லுவரின்னிலைப்பலனே. 34

*விருச்சிக முதலோரையின் பலன் முற்றிற்று*

* * *

## விருச்சிக மிரண்டாமோரையின் பலன்

தேருவதுதேளதிலேயிரண்டாமோரை ஜனனமதுதென்வடலாய் வீதியுண்டாம்
சாருவதுகீழ்முகப்பு தென்பால் சந்துசதுரமனைக்கெதிரில்லந்தாழ்வதாகும்
கூறுவது வடப்பக்க மேகன்விர்த்திகுலவுகின்ற குடும்பத்திற்தத்துபுத்ரன்
மாறுவதுப் பிறந்திடமேமுன்பூர்வீகமாகுமிதில் பிறந்த நெனமகிழ்ந்துகூறே.35

## வேறு

சுகமுறுந்தேளினி லிரண்டாவதோரைச் சொல்வதுதென் கீழ்பாற்கங்கை
ஜெகந் தனில்மேற்பா லாலயமுண்டாஞ் சிறந்தநன்மனை யிரண்டுளது
சுகந்தருந்தந்தை காலத்திற்செல்வம் சுகமில்லை ஜாதகன்பிறந்தும்
அகந்தனில்விர்த்தி பூமியும்பொருளு மதிகநட்பாகுமென் றறைவார். 36

காரியின்பார்வை யடைந்திடிலதற்குக் கருதியப்பலனதைக்கேளும்
வீரியமுள்ளத் தந்தைக்குத்தந்தை விருமூன்றுபேர்களுமாகும்
பாரினில்நிலமை விர்த்தியுமூன்று பாகத்திலேகனேச் செல்வன்
வீரியமுளனாந் தந்தைகாலத்தில் விர்த்தியிலிரண்டெனு முரையே. 37

மாதுலவர்க்கந் தந்தைகளைந்து வருமதில்விர்த்திமூன் றுளதாம்
ஓதுவனம்மான் விர்த்தியிலிரண்டு வொருவன்கா ணன்னியதேசம்
பேதமேயங்க மீனமாமொருவன் பிணியுளனென் றுரைப்பதுகாண்
தீதிதுகுடும்பம் பூர்வீகநாசம் சிறப்பில்லை விரயமாமொன்றே. 38

## வேறு

கணிதமாய் ஜாதகற்குக் கண்டுறைப்பது கேளாயுள்
துணியுட னறுபதல்லால் சொல்வது மூன்றிற்கண்டம்
பிணியில்லை மத்தியிற்றான் பெருகியச் செல்வமுண்டாம்
துணிவுட னதிகாரங்கள் சொல்தரு மரசனென்றே. 39

தனத்தாதி பலன்கள் வாக்குச் சஞ்சலமொன்று மில்லான்
மனத்தினில் தர்மசிந்தை வருமிரு பாஷைகற்பன்
கனத்துடன் பொருளும் பூமி கன்னியர் தமக்குநல்லன்
இனத்துளோன் றனக்குநன்மை யிடரிலா திருப்பனென்றே. 40

பலனில்லை சகோதரங்கள் பற்றியநான்க தாகும்
தலமதில் பிறந்திருக்குந் தன்மைகே ளரசேபாலா
குலமதில் ஜேஷ்டன் செல்வன் குணமுளன் றெய்வபக்தி
நிலைமையாஞ் சத்துருவில்லை நீடியப் பலனாமென்றே. 41

## வேறு

பெற்றநான்காதிப் பெலமுடனரசன் பெருகியப் பார்வையங்கிருக்க
உற்றநல்மனையா மன்னைக்குச் சுகங்களுற்றிடு மிருவிதவித்தை
பற்றியேகற்பன் பூமியுமுண்டாம் பலனன்னை மாரகமுப்பான்
முற்றியேவிருமூன் றாண்டினிற்கண்ட மோதுவரிவ்வித மரசே. 42

## வேறு

கணக்கனுக் கைந்தாவாதிக் கணகனால் பார்வையங்கு
இணக்கமா யிருக்கிற்பாலா யிடரில்லை யிதற்குப்புத்திராள்

வணக்கமா யாண்பால்மூன்று வரும்நிலைப் பெண்பாலொன்று
துணைக்குறா விர்த்தியிவ்வாறு சொல்வது நந்திவாக்க. 43
பாலனே பரிக்ஷித்தாகேள் பாக்கியந்தனக்கு வொன்பான்
சாலவுங் கேந்திரகோணம் பாக்கியந்தனக்கு வொன்பான்
கோலிய மனைகளெல்லாங் குலைந்தன்னிய தேசம்சென்று
மேலதா யோகம்பெற்று விர்த்தியை யடைவன்றானே. 44
பிறைக்காறுக் காறாமாதிப் பெலனெட்டு விரயந்தன்னில்
நிறைக்குறா சத்துருவீனம் நிலையில்லை ரோகமில்லை
உரைத்தன ரிவ்வாறின்ன முறுதிகேள் குந்திபேரா
திரைப்பட வேண்டாமின்னஞ் சிறந்தநற்பலன்கள் சொல்வோம். 45
சிறந்திட வேழாமாதி சேய்பாவி சகிதம்பார்வை
உறைந்திடி லுபயதார மொன்றதில் விர்த்தியென்க
நிறைந்திடுங் கீழ்மேல்வீதி நிலைதென்பால் மனைகள்விர்த்தி
குறைந்திடாச் செல்வமொன்றுக் கூறுவர்பெண்பா லென்னே. 46

## வேறு

எட்டினுக்கெட்டா லதிற்கண்டமறித லீரைந்து லிருபத்தேழாண்டிற்
திடமாய்க்கண்டம் வந்துபின்னிவர்த்தித் திரமுடன் செல்வீகமென்க
கட்டமாய் முப்பத் தைத்தினிற்றானுங் கண்கபாலத்தில் நோயுளதாம்
வட்டமாய்ரோகம் அவுழ்தத்தால் நிவர்த்தி வருமெனநிலை யிவ்வாறோதே.47
ஒன்பதின்பலன்களே தந்தைக்குமேலா யுறும்பூமிப் பொருளினால்விர்த்தி
இன்பமாம் பாக்கியமுளன் தர்மவிரயன் இயல்புட னாலயந்தனக்கு
அன்புடன் பெரியோர்க் கூட்டமும்விர்த்தி யடைவனென் றுரைப்பதுமதிக்கு
தென்புடன்பாக்கியத் ததிபதிகேந்திரம் சிறந்திடி வின்னிலைப்பலனே. 48
கொடுத்திடும்பத்தா மாதியின் பலன்கேள் குளிர்மதி தனக்கு பத்தாதி
அடுத்திடுஞ்சரத்தி லுபயத்தோர்பார்வை யடைந்திடின் ஜாதகன்றனக்கு
தடுத்திடாசெல்வம் பூமியின்விர்த்தித் தரணியில்செட்டுநற் றொழிலா
லுடுத்திடுங்கீர்த்தி யன்னியகர்ம முறுதியாய்ச் செய்பவனென்றே. 49
செய்யலாபாதித் திரத்தினில்பார்வைச் சிறந்திடச் சகிதராகிடினும்
வையகந்தந்நில் வடமேல்பாற் றென்பால் வரும்லாபமென் றுரைப்பதுகாண்
துய்யபின் விரயத் ததிபதியே ழோன் துடர்ச்சியா மிருமனைவிர்த்தி
அய்யமொன்றில்லா னதிகாரக்கேள்வி யடைந்துபின் சௌக்கியமாமே. 50

## வேறு

விருச்சிக மிரண்டாமோரை விளங்கிடும் ஜாதகற்கு
பருத்திடுமதியும் லக்கினம்பங்கு பாதனுமே பார்க்க

பொருத்த மாதாவும்புத்திரன் பொருந்திய பக்ஷமொன்றில்
வருத்தமோ டுயிர்தரனீங்கும் வையகந் தன்னைவிட்டே. 51

*விருச்சிக மிரண்டாமோரையின் பலன் முற்றிற்று*

* * *

## விருச்-சிக மூன்றாமோரையின் பலன்

இலக்கினந்தேள் மூன்றாவ தோரையாக
இருக்கிலது பிரிவுமூன் றுளதாம்வீதி
கலக்கமில்லை மேல்முகப்பு விருபக்கம்விர்த்தி
கணிதமா மெதிர்த்தமனை பாழதாகும்
விலக்கமில்லை பூர்வமது சதுரமனையல்ல
வேந்தனிட மனைக்கருகில் விளங்கிநிற்கும்
பிலக்கமிதில் பிதுராதிப் பூர்வமேன்மை
பெலமுண்டாம் செல்வீகப் பெருமையென்னே. 52

வருந்தேளில் மூன்றாவதோரை கேளாய்
மன்னவனே வாயுதிசை தன்னிற்கோவில்
பொருந்தாத கங்கையுண்டாம் தென்கிழக்கில்
புணர்ச்சியுள்ள மனையிரண்டு பொருத்தமுண்டாம்
பிரிந்துவரு மாதீன மிரண்டிடங்காண்
பெருமைபிதா தனக்குபிதுர்ச் செல்வமில்லை
விரிந்தந்தை காலத்தில் விர்த்தியேகன்
விளங்கிநிற்பா ரென்றுரைப்பர் விபரமீதே. 53

அன்னைவர்க்கந் தனிலம்மா னைந்துபேரா
மதில்மூன்று விர்த்தியென வறியச்சொல்வாய்
பின்னையொரு வம்மான்காண் பேதகத்தால்
பெலன்கொண்டா னன்னியத்தின் பேதையைத்தான்
உன்னிதமென் றன்னியதேசத்தை நாடி
உலகில்வடக் கீழ்திசையி லுருகிநிற்பன்
வின்னமில்லை யிப்பலன்கே ளனுபவத்தில்
மேன்மையதா யிருந்திடிற்கேள் விபரஞ்சொல்வோம். 54

கேளிதற்குப் பரிக்ஷித்தா வெட்டுக்கெட்டோன்
கிளர்மதிக்கு வெட்டுக்கு மூன்றாமாதி
வாளிரவி நீலனிவர் மாறிப்பார்வை
வந்துவிடில் மாதமது வீரெட்டிற்குள்

கோளிதிலே துன்மரண கண்டஞ்செய்யும்
குடும்பத்தில் முன்கர்மங் குணமாய்ச்செய்யும்
பாழிதுகா ணிவ்வோரைப் பிறக்குமாகில்
பலனில்லைப் பாரினில் துன்மரணமொன்றே. 55
மரணமது வெவ்விதத்தா லடையுஞ்சொல்லும்
வலவெவ்வா றிதன்விபர மறியவேண்டும்
திரணமிதிற் பேதகங்க ளில்லைபாலா
சேய்க்கிரவி காரகத்தால் சிறந்தநோய்தான்
விரணமது ஜலரோகப் பீடைதன்னால்
மேதினியிற் கண்டங்கள் நேருங்காலம்
தரணிதனிற் றாய்முலைப்பா லருந்தும்போது
சண்டனுக்கு நிலையாவன் றரணிவேந்தே. 56

***விருச்சிக மூன்றா மோரையின் பலன் முற்றிற்று***

✲ ✲ ✲

## விருச்சிக நான்காமோரையின் பலன்

வீணாகவலையாதே விருச்சிகத்தின்
விரிவாக நான்காவ தோரைதன்னில்
ஆணாகப் பிறந்திட்டோன் வீதிகீழ்மே
லமர்ந்திடினும் தனித்தமனை யறியக்கேணீ
தோணாதுப் பூர்வமது வெதிர்த்தமனைகாலி
சொல்வதுகேள் தனித்தமனைச் சொல்லக்கேளாய்
ஏணாகத் தென்மேற்கி லாலயங்கள்
எதிர்பேத மாமெதிரில் கங்கையென்னே. 57
நன்மைதேளில் நான்காவ தோரைபலன்கேள் நலமரசே
தின்மையில்லை தென்பக்கஞ் சிறந்தகோவில் சௌகரியமாம்
துன்மைநீங்குங் கங்கையொன்று சொல்லும்வடபால் திசைதன்னில்
இன்மையிதுவே நிலையாகி லிதுவேநான்கா மோரையென்னே. 58
வந்திடுந் தந்தை வர்க்காதிமூன்று
வலுவதி லிரண்டெனும் விர்த்தி
தந்திடுந் தந்தைகாலத்தி லைந்துத்
தனியதி லேகனே தத்து
முந்தியப் பூர்வம் விர்த்தியாயிருக்கு
மூவரின் வழக்கதி லுண்டாம்
சுந்தரமாகத் தந்தைக்குச் செல்வம்

சொல்வது விப்பல னரசே. 59
அரசனே ஜென்மத் ததிபர்கோணத்தி
லடைந்துநற் சுபர்களால் பார்வை
உரவுடன் சுபர்கள் யோகம்நற் கீர்த்தி
யுறுமாறு ளுற்றிடு மெழுபான்
விரசொடுவிரண்டு வாண்டு மட்டதிலே
மிக்க செல்வீக முள்ளவன்காண்
சரசமீரைந்து வாண்டது நீங்கித்
தழைத்த செல்வீக மென்பதுவே. 60
தீரமாய்தேகக் தாந்தியு முளனாஞ்
சிறந்திடும் ரூபத்திற் சமனாம்
பாரதில்யோகம் பூமியும் பொருளும்
பலனாண்டு விருப தல்லாது
சேரிருநான்கில் யோகமே சிறந்துச்
சேர்ந்திடு மரசர்கள் பேட்டி
மாரிலாச் செல்வ மப்பாலோர் விரயம்
வருமைந்து வாண்டினி லென்னே. 61
கலக்கமொன்றில்லை ஜாதகன் றனக்குக்
கணிதமாய் வித்தை நால்விதமாம்
துலக்கமா மந்திரி சிந்தையுமுளனாஞ்
சுபதர்ம விரயத்திற் பிரியன்
பலுக்குநல் வாக்கு வித்தையுமுளனாம்
பரோபகார நற்சிந்தை
விலக்கியப்போ்க ளுக்குடன் கொடியன்
மிக்க செல்வீகனு மாமே. 62
கரியவன் மூன்றுக் கதிபனாகையினால்
கனிட்டர்கள் விர்த்தி மூன்றென்க
பிரியமாய்ப் பிறந்து நசித்திடும் பின்னால்
பெலன் விர்த்தி தானில்லைப் பின்னும்
மரியச்சத்துருக்க ளுண்டாகி நாச
மடைவர்நல் லாளடிமை கேளும்
தெரிவது மேன்மை யாகவேசேருந்
திரமந்தியந் தனிற்பேத மென்னே. 63
வலுவொடு நான்கு வதற்கு நான்காதி

வருஞ்சனிப் பார்வையா யிருக்கில்
பெலமொடுப் பாவிப் பார்வைகள் கெடுதி
பெலத்த நற்பூமியும் விரயம்
தலமதி லன்னை யமங்கல முளதாய்த்
தளர்ச்சியாந் தேகம்நற் சிந்தை
விலகியச் செல்வம் பாதிநாள் நிலைக்கும்
மிகுமத்தியந் துயர்தனை யடைவள். 64
அடைவதென் றுரைத்தீ ரெவ்விதஞ் சொல்லும்
மன்னைக்குத் துயரங்க ளெல்லாம்
விடைதனக் தாதித் திரத்தினிற் சகித
மேவியே யிருந்திடின் பலன்கேள்
தடையில்லைச் செல்வ மத்தியிற் கலகம்
சஞ்சலம் ருணத்தினா லடைவன்
குடைமன்னர் தன்னால் ஜாதகன் றனக்குக்
கொடுத்திடும் பாக்கியமென் றறைவாய். 65
செல்வமு மரசர் மூலத்தா லென்றீர்
திறமைசொல் லெவ்வித மிதற்கு
வெல்வது தந்தைத் தொழிலதி லுண்டாம்
வேந்தர்கள் மகிழ்ச்சி சன்மானம்
தொல்லையில்லை சூழ்ந்திடுந் தொழில்காண்
சொல்குவ தக்கினி திசையாம்
வல்லபங் கண்ணுட் கழிக்கும்நற் றொழில்கள்
வருமிவ்வாறு மூலத்தா லென்னே. 66
பெருகிய வன்னை மாரக மிதிலே
பேதமல்லாமல் நற்காலம்
வருவதுநிலைக ளாண்டது கேளு
மன்னனே நான்குக் கெட்டாதி
உருகியக் கேந்திர கோணமா யிருக்க
வுறுமன்னை மாரகம் நாற்பான்
பெருகிய வொன்று வொன்றதில் மன்னா
பெலத்த மாரகத்தினைச் செய்யும். 67
உத்தம மைந்தா மாதிபின் னைந்துக்
குடையவ சேராடுப்பின் பார்வை
பெற்றுமே யிருக்கிலதிற் புத்திரன் மன்னா

பிறந்திறந் திடுமென வுரையும்
விர்த்தியா முப்பத் தைந்தினிற் புத்திராள்
மிகுத்திடு முபய தாரத்திற்
சத்தியவசன முள்ள புத்திரனாய்த்
தந்தைக்குத் தந்தைபோல் பவனே. 68
ஆறதின் பலன்கேள் மதிக்காறா மாதி
யதற்காறா மாதியு மாறில்
மாறிலா திருந்து விவர்களின் பார்வை
வந்திடில் ஜாதகன் றனக்கு
மீறிய ரோகந் தானில்லை ருணங்கள்
மிகுதியா முப்ப தல்லாது
பாரினில் நான்கு வாண்டதி லிவ்வாறு
பலன்பின் னொன்றினிற் சுகமாமே. 69
சுகமது வாகுங் களத்திரப் பலன்கேள்
சொல்வது வுபய தாரங்கள்
ஜகமதில் ஜேஷ்டக் களத்திர மருகில்
சேர்ந்திடும் வீதி கீழ்மேலாம்
புகலுவர் வீதிப் பிரிவு மூன்றுளதாம்
பெருகிய வாலய மருகில்
ஜெகமதி லினியாள் நிறம் சமன்ரூபஞ்
சிறந்திடும் செல்வீக மென்னே. 70

## வேறு

குணமுடனே முதன்மனைவி விர்த்திதனைக் கேளாய்
கோள்பகையால் சஞ்சலங்கள் கொடுமை யடைந்திடுவள்
மணமுடித்து வேழாண்டு மன்னர்களால் மகிழ்ச்சி
வருமென்பர் பின்னாண்டு மூன்றினில் துன்மரணம்
பிணைகலகம் பெண்பாலால் கூபமதி லிறப்பள்
பெருமையுள்ள பரிக்ஷித்தா பின்னிளையாள் விபரம்
கணிதமதை யாராய்ந்து வுரைத்திடும் நற்பலனைக்
கருத்துடனே செவிகொடுத்துக் கண்டிடுவாய்த் தானே. 71
கேளாய் நீ யிப்பலன் ளுபயமிதி லரசே
கிளைவடகீழ் திசைசுபமாங் கீர்த்தியுள நிலையாம்
தாழ்வாகக் குடும்பமது சிறந்திருக்கு மிரண்டு
தையலுடன் சகோதரங்கள் தனிமைகா ணேகன்

பாழாகாள் யோகமுள்ளாள் மருவு சௌக்கியங்கள்
பற்றியநற் சுகங்களுடன் பாரில்மிக வாழ்வள்
கோளிதனில் புண்ணியரின் பார்வைக்கு மேன்மை
குடும்பத்திற் குணமுள்ளாள் குறித்திடு மிவ்வாறே. 72
ஐந்திற்கு மூன்றாதி யதற்கட்ட மாதி
யவர்க்கேந்திர கோணமதி லடைவாக நிற்கில்
முந்தியநற் கண்டங்க ளீரைந்தா மாண்டிற்
முதிர்ந்த வயதினிற்கண்ட முடிவொன்று மில்லை
சந்ததிக ளில்லையெனத் தயங்கி மிகத்தூரத்
தலபேதம் தேசசஞ்சார மிகச் செல்வன்
விந்தையாய் பாக்யாதி யட்டமத்தில் நிற்க
மேதினியி லேகசுதன் விர்த்தியென மொழியே. 73

## வேறு

பெற்றபாக்யாதி யதற்குமேல்விரயம் பெற்றுச்கேந்திரத் துள்ளோன்பார்வை
உற்றுபின்சுபரால் சகிதமங்கிருக்க வுணர்வொடு தந்தைக்குச்செல்வம்
சுற்றமுஞ்சூழு மன்னியர்கள் மகிழ்ச்சிசொல் லன்னதான மும்செய்வன்
பற்றுமாலயங்கள் பாக்கியவிரயம் பலர்கூடும் நிலைபடைத்திடுவன் 74
தப்பில்லையிவ்வாறு பலனெல்லாம்விர்த்தி சார்ந்திடுமாண் டிருபதுமேல்
ஒப்புடனெட்டா மாண்டினுக்கப்பா லுறுமதாம் விரயத்திற்பகுதி
இப்புவிதன்னி லிடரதாந்தர்ம மினியநற் சுகமதுவீனம்
செப்பியதிதனைத் தெரிந்துசொல்மன்னா சிறந்தநற்செல்வம் பின்வருமே. 75
வருகுவதாண்டு முப்பதுக்கப்பாற் வருமைந்து வாண்டினிற்செல்வம்
பெருவதுதர்ம விர்த்தியில் மேன்மை பெலனாயுள்வரையிலுஞ் சௌக்கியம்
தருவது சுகங்க ளரசர்கள் மகிழ்ச்சி தருமன்னதானம் நற்பலன்கள்
தெரியவிப்பலன்கள் நிலையுள்ளசெல்வம் சிறந்தபொன் பூமியும்வருமே. 76
கனத்திடுந்தந்தை மாரகமரசே கருதுவனீரைந்தா மாண்டில்
இனத்துடன்கண்டம் மாரகமதுகே ளினியதின்மே லைந்திற்கர்ம்ம்
மனத்துயர்கலகம் சஞ்சலவிரயம் வந்திடுந் தந்தைக்குப்பின்னால்
இனத்தினிற்சுகங்க ளில்லை நாண்பகைக ளிடருணச் சஞ்சலமாமே. 77
மதித்திடும்பத்தா மதிபதிசரத்தில் வந்திடவெண்மதிப் பார்வை
பதித்திடுங்கோள்கள் சகிதமங்கிருக்கிற் பற்றிய தொழில் புந்திதன்னால்
விதித்திடுந் தந்தைதொழில் விர்த்தி மேன்மை மிகுசெல்வ மரசர்கள்மகிழ்ச்சி
கதித்திடும்பிதுர்க்கு மேற்செல்வமரசர் கண்களிக்கூறும் நற்றொழிலே. 78
ஈரைந்துவொன்றில் மன்னனேபுந்தி யிடரில்லாப் பால்மதிநிற்க

ஓரைந்துக்குள்ளோ ருறுந்திசைதன்னி லுள்ளலாபங்களுஞ் சேரும்
ஆறைந்தாமாதி யவர்திசைதனிலு மதிகலாபங்கள் திரமென்க
சேரவிப்பலன்க ளதிகாரம்போலச் சிறந்திடச்செய்யும் நற்பலனே. 79
மிகுத்திடும்விரயத் ததிபதிபலன்கேள் மிக்கவேழாதி யாகையினால்
தகுந்தநல்விரயம் தர்மத்தின் வழியில் சார்ந்ததுர்க்க கர்மத்தினாலும்
இனத்திலுமன்னிய களத்திரமதனா லிடர்விரயங்களைச் செய்வன்
மனத்ததன்னாலு மரசர்களாலும் வரும்பூமி விரயமாமென்றே. 80
விரயாதிபிருகு நிலையாக்ஷியாகில் விரயங்க ளதிகமாமென்க
கரையிலாவிரயங் கன்னியர்மூலம் கைப்பொருள் விரயமாம் பின்னும்
தரைமிசைபூமிக் கட்டடமெல்லாந் தரணியில் விரயமதுண்டாம்
பிறைவளர்ச்சிபோல் செல்வமும் பொருளும் பெருமேழைந்தி லாண்டென்னே

*விருச்சிக லக்கின நான்கு ஓரைக்கும் செய்யுள் – 80*
*முன் லக்கினம் 6-க்கு 551*
*ஆக மொத்தம் – 631*
*விருச்சிக லக்கினப் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

# தனுசோதயம்

தனுசுலக்கினமே யாகில் தடமனு கிழக்குமேற்கு
மனதுயர் தெற்குவாசல் மருவியக் கட்டிரண்டாம்
அனுதின பூஜைசெய்யு மரன்கோவில் மேற்கி னுண்டு
கனமதாய்த் தெற்குத்தோப்பு காவிசூழ் மலருமுண்டே. 1

## தனுசில் பாவாதிபர்கள் நின்றபலன்

தரும்பலன் றனுசுவுதயமாகில் தக்க மன்னவ னா□யாகப்
பெரும்பலன்கேளாய் தாய்சுகமுடையாள் பெலனன்னை வர்க்கத்தில் சுகமாம்
வரும்பொருள் சுகங்கள் வாகனந் தனக்கு வரும்விரயங்கள் செய்திடுவன்
பொருந்திய சுகங்கள் சொல்வது தாய்க்குப் பூரணசுகமெனச் சொல்லே. 2
சொல்வதுதனத்தோன் கரியனவனட்பாய் சூழ்ந்து ஜென்மத்தினி னின்றால்
வெல்வதுவாக்கு பேதகமுண்டாம் வெகுகபடங்களைச் செய்வன்
அல்லல்காண்மூன்றா மாதியானதினா லதன்பலன் கேளிதில்மன்னா
வெல்லுவர்மிக்க சகோதரரென்க மீனமாஞ் சொல்வதுமிதுவே. 3
சொல்வதுநான்கா மாதியேயாக்ஷி சூழ்ந்து ஜென்மத்தினி லிருக்க
யெல்லைகாண்பூமி நூதனம்வாங்க லிடரிலா வாகனலாபம்

மெல்லெனவைந்தா மாதிசேய்க்கேந்திர மிகுந்திடிற்மிக்க செல்வீகம்
கல்லல் காணம்மான் குடும்பமேவீனங் கருதுவர்பூமியும் விரயம். 4
ஓதுவாராறாமதி பதிபிருகு வுற்ற கேந்திரத்தினி லிருக்கிற்
பாதிநாட்செல்வ மெய்யினில் ரோகம் பற்றியதுன்பங்க ளடைவன்
வேதியர்ப்பகையாமே ழாதிப்புந்தி மிக்க ஜென்மத்தினி லிருக்கிற்
ஓதிய மனையாளு பயமல்லாது வுரைப்பதுயோகந்தா னிலையே. 5
மாதுவந்திடிற் கேளந்தியமதனில் வலுவில்லை களத்திரநாசம்
ஓதியதெட்டா மதிபதிவேந்தன் உற்றகேந்திரந்தனி லிருக்கின்
ஓதுவர் தீர்க்காயுளு வுளன்மூன்று வுரைத்திடும் வித்தையுமுளனாம்
பேதியாதிருப்பன் மன்னர்கள்பேட்டி பெலமுள்ள ஜாதகனென்றே. 6

## வேறு

வரும்நிலை கேளொன்பாதி மார்த்தாண்டன் சிலையிற்
வந்த ஜாதகற்குப்பலன் வரும்நிலையைக் கேளாய்
தெரிவது பாக்கியம் பிதுர்கள் பூர்வீகநாசம்
திரவியநாசங்க ளதிற் தெத்துப் புத்திரன்
மருவும்பத் தாதிபதிமதி மகன்றா னட்பாய்
வரில்மன்னர் சினேக மனமகிழ்ச்சி தனலாபம்
தெரிவையர்கள் நட்புவித்தை செல்வ னதிகாரம்
செய்வனென மிப்புவியிற் செப்பிடுவா யரசே. 7
பெருகிய லாபாதிபதி யசுரகுரு நட்பாய்
பெற்றிடிற்கேள் களத்திரவர்க்கம் பெருமேன்மை லாபம்
தருமென்பர் விரயாதி நிலைமகன்றா னிருக்கிற்
தரணிதனி லாதீனப் பேமிகக் செய்யும்
மருவிய புத்திரதோஷ மன்னிய சஞ்சார
மதிற்பேத மாக்கி விடுமறிந் திடுவாயின்னம்
வருஞ்செல்வ மண்மனையால் வழக்குவந்து நேரும்
வருங்கலகம் சஞ்சலங்கள் வரும்பல னிவ்விதமே. 8

## (இரவி நின்ற பலன்)

சிலையது ஜென்மம் செங்கதிரிருக்க ஜெனித்தஜாதகற்கினி பலன்கேள்
கலைதனிற்பிரியன் நிறஞ்சிகப்புடையன் கருதிடும் சத்தியவாக்கன்
துலைபோகப்பிரியன் தீர்க்காயுளுடையன் சொற்பிரளா களத்திரமாம்
தலைதனில்நோயன் இடுப்பினில்மச்சம் சார்ந்திடும் பாக்கியமுளனே. 9

## (சந்திரன் நின்ற பலன்)

வில்லது ஜெனன மதில்மதியிருக்க வேந்தர்கள் நட்புளனாகும்

கல்லினாலிடரா லாயுதமதனால் கதித்திடுங் கண்டமேயுளதாம்
தொல்லையாம்பூர்வ பேதமாமம்மான் சுகமில்லை பகைத்துமே நிற்பன்
அல்லல்காண்சிந்தை பேதமாயுளனா மாறைந்து வயதினிலரசே. 10

## (புதன் நின்ற பலன்)

### வேறு

விருப்பமுடன் தேர்ப்பாகன் தனுர்பாகத்திற்
விலகிலாவது ஜெனன மாகவந்தால்
குறிப்புடைய் னுய்யவித்தைக் குணமுடையன் செல்வன்
கூர்க்கெணித வித்தையுளன் கூட்டன்னியர் நட்பன்
திருந்துமன சஞ்சலத்தன் களத்திர வர்க்கவீனம்
செல்வீக மனமகிழ்ச்சி சிந்தையதிற் கலகன்
பெருத்தசுப விஷயத்திற் விரயமதி லுண்டாம்
பேதையர்கள் நட்புளனாம் பெரும்யோகி நட்பே. 11

## (குரு நின்ற பலன்)

### வேறு

மன்னவனாக்ஷி மதிமனைக்காரில் வந்த ஜாதகற்குப் பலன்கள்
அன்னியதேசம் நட்புளன்றனவா னாதியாம் பூர்வீகநாசம்
உன்னியயோகி நட்புடையவன் காணோதுவர் வித்தையால்செல்வம்
தன்னவன்றனையே பகைத்து மேதிரிவன் சஞ்சல மனமுறுதியனே. 12

## (சுக்கிரன் நின்ற பலன்)

வென்னிய தனுசுதன்னி லசுரவேந்தனே நிற்பாராகில்
துள்ளியச் சத்துருதன்னைச் சுகமுடன் ஜெயமேசெய்வன்
புள்ளியாம் வார்த்தைசொல்வன் புவிமிசை யெவர்க்கும்நல்லன்
எஃளியபூமியெல்லாந் தியாகியென் றவர்க்கே யீவான். 13

## (சனி நின்ற பலன்)

தள்ளிய மனைவிமக்கள் சார்ந்திடாள் பகையுண்டாகும்
கள்ளியாம் நீலநின்றால் சுகமில்லை சகோதரங்கள்
கள்ளிய மனத்தன்பூமிக் கபடத்தால் விரயமென்க
தெள்ளிய மனமானாலுந் தியக்கமுண் டாகுமென்றே. 14

# தனுசு முதலோரையின் பலன்

தருவதுதனுசு லக்கினமுதற்கால் தரைமிசை ஜெனிதத ஜாதகற்கு
பெருவதுகீழ்மேல் வீதியாந்தெற்குப் பிசகில்லை மனைமுகப்புளதாம்
அரிவதுயெதிரில் சந்துண்டாங்கோவில் அவனியி லிருபக்கம்பாழாம்
தெரிவதுப்பூர்வப் பூமியங்கில்லைத் திசைதென்பா லாதீனமென்றே. 15

சிதமுளசிலையின் முதலோரைஜெனிக்கில் சிறந்திடுமனைக்கு மேல்பக்கம்
விதமுளமத்திய வாலயமுண்டா மிகுந்ததென்கீழ் கங்கையுளதாம்
இதமுளவீடு விருவர்க்குப்பாக மிடறதல் பிறந்திடப்பின்னால்
அதமுளதாகும் நிலைவேறாய்நிற்ப வறிவது யின்னிலைப்பலனே. 16

வில்லதின் சரத்தி லோரையா யுபயம்
விரிந்ததால் பூர்வம் ரெண்டிடமாம்
கல்லலொன்றில்லை விர்த்தியு மொன்றாங்
கருதுவன் பாட்டனோ டிருவர்
செல்வனாந்தந்தை காலத்தில் மூவர்ச்
சிறந்திடச் செல்வீக முளராம்
வல்லவனே கனதில் தத்துபுத்திரன்
மாரகமென் றுரைப் பதுவே. 17

நிலையைந்தா மாதிவுபயத்தில் பார்வை
நிலையாகிலிதி லம்மான் குடும்பம்
கலைமதிப் போலவிர்த்தி யங்குளதாய்க்
கதித்து பின்சுக மில்லையென்க
விலைபூர்வ மன்னியர்க்காகவே விட்டு
விருதந்தை யேக ளன்னியமாம்
தலமதிற்சென்று பூமியும் பொருளும்
தழைத்தம்மான் யோகனா மென்றே. 18

யோகமே யிவ்வாறு பிறந்த ஜாதகற்கு
உரும்வய தைந்தினிற் றந்தை
போகமும் பொருளும் பூமி நல்விர்த்திப்
பொருந்தியத் தொழிலிரு விதத்தால்
வேகமாய்ச் சத்துருஜெயமதிற் பொருளும்
வேந்தர்கள் முன்னிலை ஜெயமாம்
தேகநற்சுகம் சௌக்கிய முளனாய்ச்
சிறந்திடுவா னெனச் செப்பும் 19

இருபுறமும் நல்லோர்கள் பார்வையதிலிருக்க
விடர்பிணி யொன்றில்லைகா ணினியநிறஞ்சிகப்பு
திருவுடையன் செல்வீகனாயுள் விர்த்தியுளனாஞ்
சிறந்தரசர் சன்மானம் செய்யக் ளித்திருப்பன்
வருமனைவி வழிச் செல்வம் வாலிபத்திலுண்டாம்

மன்னவரால் பூமிதனம் வலியவந்து சேரும்
பெருகிவரும் வயதிற்கு யறுபதல்லாலேழுப்
பெலனாயுள் மட்டுமிதிற் பெருஞ்செல்வமுண்டாம். 20

## வேறு

உதித்திடுமிரண்டோன் பலனதையறித லூறுமிருவித்தையு முளனாம்
பதிதனில்மேன்மை குடும்பசெல்வீகம் பாலனும் சிறப்புடன் வாழ்வன்
விதித்திடல்தர்ம சிந்தையில்பேதம் வேந்தர்க்கு விருப்பமுள்ளவன்காண்
எதிர்த்திடுஞ்சத்ருஜெயமுளன்மன்னா விதில்பிணியொன்றுண்டாமென்னே. 21
பிறைக்குமூன்றாதி உபயத்திற்சரமாய்ப் பெருங்கேந்திரக் கோணத்தோர் பார்வை
இருக்கவேயேகசகோதரம் நிலையாமிருப்பதில் விர்த்திப்பெண் மூன்றாம்
உரைப்பதிவ்விதமே யாளடிமைகளு முறுஞ்செல்வ மத்தியிற்கலகம்
சிறப்புடன் கர்ண பூஷணலாபம் சிறந்திடுமின் னிலைப்பலனே. 22
இருந்திடகாண்கிற் பலனன்னை சுகமாமிடர்ப்பிணி தானில்லைபூமி
பொருந்தியமனைகள் கட்டடம் விர்த்திப் பூரணம் வாகனலாபம்
திருந்தியவன்னை மாரகம் நாற்பான் றிரமேகவாண் டினிலரசே
நெருங்கியக்கண்ட மாரகமன்னை நிரியாணமென்பது நிலையே. 23
பஞ்சமத்ததிபன் மதிதனக்கைந்தோன் பற்றிய விரயத்தி லாக்ஷி
மிஞ்சியேயிருக்கி லதிலம்மான்வர்க்கம் மிகுமேகன் விர்த்திகாண் விரயம்
தஞ்சமாயன்னிய தேசஞ்சாரத் தலமதிற் பேதமாயிருப்பர்
கொஞ்சியப்புத்திரரிதில் விர்த்தியிரண்டுக் கூறுவரின் னிலைப்பலனே. 24

## வேறு

சத்தமாதிப் பலனறிதல் சார்ந்ததார மிரண்டுளதாம்
சுத்தமினைய தாரத்தால் சுகமும் புத்திரர் மிகவுண்டாம்
சித்தந்தன்னிற் றெளிவுடையன் சிறந்தசெல்வன் களத்திரத்தால்
உத்தமினை யாளிடமதிக வுறுதிவாக்கு வுள்ளவனே. 25
புந்தியேழுப் பின்பத்துப் புகர்க்கேழாதி யுடன்சகிதம்
வந்தேயிருக்க விதில்தாரம்வரும் சிங்கததிற் குடும்பமதாய்
பங்கமில்லை யின்னிலையிற் பாலன்றனக்கு மனைவியெனச்
சங்கைக்கும் பந்தனிலிளையாள் சார்ந்த நிலையி லென்றோதே. 26

## வேறு

ஓதுவர்நிலைகாண் கும்பத்தின்கீழ்மே லூறும்வீதிமனை வடபக்கம்
தீதில்லையெதிரில் சந்துண்டாம்தெற்கில் சிறந்தநல்லா லயமொன்று
பாதிநாள்தந்தை வர்க்கத்திற்செல்வம் பலன்மத்தியம் தாழ்வதிற்கலகம்
பேதமாயன்னிய நிலைதனின் மனைகள் பெலமொடு விர்த்தியாமென்றே.27

அட்டம்பலன்கே ளதற்கட்டாமாதி யம்புலிதனக் கட்டமாதி
திட்டமாய்க் கேந்திரக் கோணத்தி லாக்ஷிசேர்ந்திட தீர்க்காயுளென்க
வட்டமாமிருபத் தேழுனின் மன்னாவந்திடுங் கண்டமொன்றுளது
பட்டுடன் நிவர்த்திப்பல னன்னியதேசம் பாக்கிய விரயமாமென்றே. 28
துன்பமொன்றில்லை வொன்பதாமாதி சூழ்சுபர்ப் பாபர்கள் சகிதம்
இன்பமாயிருக்கில் பாக்கியவிரயம் இடர்பிணிச் சத்துருதந்தை
அன்பொடுநின்ற மித்துருபகையாய் அன்னியத் தலத்தினில்விர்த்தி
துன்பங்கள் சுகமாமீன்ற தந்தையர்க்குச் சொல்லுவ திவ்விதமாமே. 29

## வேறு

கண்டடிடக் கேளிதிற்றந்தை மாரகங்கள்
கருதுவன்பாக்கியத் ததிபன்காரி பார்வை
உண்டாகுங் காலமதுகேள் முப்பத்தைந்து
வுருமேழாமாண்டி தனிலுறுந் தந்தைக்கர்மம்
கொண்டபாக்கியன்றனக் கேழ் திசையந்திரம் வருங்கால்
கூறுவர்காண் மாரகமேகுண மன்னியதேசம்
உண்டாகுந் துன்மரணம் வயிற்போக்கா லரிட்ட
முத்தமனே யிப்பலன்க ளுறுதியெனக் கூறே. 30
காணவிதில் கர்மாதிபதி பலன்க ளெவ்வாறு
கணிதமது ரவிபுதல்வன் மால்கலந்துப் பார்வை
தோணவிதில் நின்றிருந்தால் ஜீவனங்கள் கேளும்
தொல்புவியிற் பூமியினால் தொடுத்த புந்தித் தொழிலால்
பேணியநற் பலன்மேலாய் யோகமதுக் காட்டும்
பெருலாபந்தனம் சேர்க்கைப்பெரும் தென்கீழ்த் திசையில்
ஆணுவநற்பலன் வடக்குதிசை தன்னிற் செல்வ
மடைந்திடுவ னென்றுரைப்ப ரறிதலிது வாமே. 31

## வேறு

மெய்ப்படவிரயத் ததிபதிகேந்திர மிக்ககோள் சுபர்தன்னால் பார்வை
இப்படிமதிக்கு விரயாதியெட்டி லிருந்துடன் பாபரும் பார்வை
தப்பிலாதிருக்கில் விரயம்வர்க்கத்தால் சார்ந்தோர்க ளரசர்களாலும்
துர்ப்பலவிரயம் கோள்களால்கலகம் சூழ்ந்திடும் விரயமென்றென்னே. 32

***தனுசு முதலோரையின் பலன் முற்றிற்று***

✲ ✲ ✲

## தனுசு மிரண்டாமோரையின் பலன்

கண்டதனுசு மிரண்டாங்கால் கருதும்ஜென்ம லக்கினத்தில்
உண்டாம் வீதித்தென்வடலா மோதும் வடக்கு முகப்புளதாம்
துண்டாமெதிரில் நிற்குமனை சூழும் செல்வமிருபாகங்
கொண்டாரருகி லுள்ளமனைக் கூறும்பாகம் பெண்பாலே. 33
தனித்ததனுசி லிரண்டாங்கால் சார்ந்த ஜெனன மதிற்பலன்கேள்
ஜனித்ததோர் தனக்குத்தென் கீழ்பால்சிறந்த கோவிலுண்டாகும்
இனித்தவிந்திரன் றிசைதன்னி லினியகங்கை விருக்ஷங்கள்
பனித்தமன்னர் மனைவடமேற் பாசமிருக்கும் பலனிதுவே. 34
சிறந்ததந்தைப் பூர்வீகந்திரமாய் மூன்றுவிடமென்பர்
பிறந்தவிடந்தான் விட்டகலும் பேதமன்னிய தேகமென்க
திறந்தான் பிதுர்களின்பாட்டன் திறமைமூன்று விர்த்திரெண்டு
நிறங்காண் தந்தைகாலத்தில் நிலைரெண்டு விர்த்தியொன்றே. 35

***தனுசு மிரண்டாமோரையின் பலன் முற்றிற்று***

✲ ✲ ✲

## தனுசு மூன்றாமோரையின் பலன்

சிறந்திடுந்தனுசு லக்கினமதில் திரமூன்றா மோரையின்பலன்கேள்
பிறந்திடும்வீதிப் பிரிவதுமூன்று பெலன்வாசல் வடக்கெனவோதும்
திறம்படும்வீடு வன்னையின்மனையாம் தெரிவிப்பா யெதிரினில்விர்த்தி
உறம்பெருமிரண்டு பக்கமுஞ்சந்து முண்டாகும் நிலையெனவோதே. 36

### வேறு

கொர்ப்பந்தனுவின் மூன்றாங்கால் கீர்த்தியுள்ளன் றான்பிறந்த
அர்ப்பநிலைகா ணாதீன மல்லவன்னை வர்க்கத்தில்
தப்பில்லாமற் றான்பிறந்தான் தந்தைக்கிரண்டு விடமாகும்
செப்புங்கும்ப ராசிதனில் திரமாம்பூர்வ மென்றோதே. 37
உற்றவுபயந் தனிற்றிரமா யுதித்தோர்தனக்கு வுறுமேழில்
பெற்றவயதிற் பிதுர்தனக்குப் பெருமையுண்டாம் பெருஞ்செல்வம்
அற்றுப்போகா தாதீனம் அதிகச்சுயார்ச்சித நிலையுண்டாம்
சுற்றத்தோடுங் கீர்த்தியதாய்ச் சுகமாயிருப்பரெனச் சொல்லும். 38
சொல்லும்வயது எழுபதல்லால் துலங்குமொன்று தீர்க்காயுள்
வெல்லும்மத்தியக் காலத்திற் வேந்தர்நட்புப் பின்னுண்டாம்

அல்லல்பிதுர்க்குத் தானில்லை யன்னியதேச மதில்விர்த்தி
யெய்லுயதனிற் பொருள்பூமி யிடரொன்றில்லை யிப்பலனே. 39

## வேறு

தனமதின்பலன் கேள் வித்தையுமுளனாந் தக்கமன்னர் மறையோர்கள்
இனமுடன்கூடி விர்த்தியாய் வாழ்வன் இடரில்லை யதிகாரநட்பு
மனமதுநல்லன் யோகிகள்நட்பன் வர்க்கத்திற் சத்தியமுளனாய்
குணமுடையவனாய்க் கூட்டுறவதனாற் கூடியேவாழ்வனென் றுரைப்பர். 40
ஜென்மத்திற்மூன்றிற் சகோதரமைந்துத் திரமூன்று விர்த்தியிலிரண்டு
உன்மத்தன் போல வொருவன்காண்கலக முற்றன்னிய தேசமேபோவன்
கன்மத்தோன்பார்வை மூன்றினுக்கிருக்கில் கர்ணபூஷண மிகவுண்டாம்
தன்மத்தன்செல்வ னாளடிமைகளும் தழைத்திட விர்த்தியாய்வாழ்வன். 41
சுபமது பலன்க ளன்னைக்குவாயுள் தொடுத்திரம் நாற்பத்துமூன்றில்
அபதமாய்க்கண்ட மாரகமன்னை யறிவதுபூமி லாபமுமாம்
தபமதுசெல்வம் வாகனலாபம் சார்ந்திடு மன்னர்கள்பேட்டி
உபயகட்டடங்கள் விர்த்தியாகுமென்று வோதுவர்ஜாதகன் பலனே. 42
ஐந்தினாற்பலன்கே ளம்மானோயேகன் அதில்தந்தை வர்க்கங்கள்மூன்று
முந்தியயோகம் மத்தியிற்றாழ்வு மூன்றினில் விர்த்தி ரெண்டாகும்
சந்திரர்க்கைந்தா மிராசிபின் பலன்கள் தவறிடாதெடுத் துரைப்பதுகேள்
சுந்தரமாக நிலையம்மானேகன் சூழ்புவிதனிற் செல்வமுளனே. 43
வருவதாறா மாதியின் பலன்கேள் வருஞ்சத்துரு ருணமதுண்டாகும்
தெரிவதுரோகந் தானில்லையரசே சிறந்தன்னிய மாதரால்கலகம்
பிறந்திடுமன்னிய தேசசஞ்சாரம் பேதையர்க் கலகத்தால்போவன்
அறிந்திடுமிவ்வாறு பலனெலாமின்ன மறியக்கேள் புவிதனக்கரசே. 44

## வேறு

ஆரினைக் காரிநோக்க யடைவது வாதரோகம்
சீரிய மாதர்தன்னால் சேர்ந்திடுந் தலபேதங்கள்
மீரியஜாதகற்கு மிகுத்திடு மிருபான் ரெண்டில்
தேரியவிவாக முண்டாந் திரமிது வாகும் சொல்லே 45
மணமது முடியுங்காலம் மாதரால் கலகமுண்டாம்
இனமதை விட்டு ஜாதகனிருபதுந் துலைகாண்மேற்கு
ஜனத்தினில் மாற்றானுக்குச் சாற்றியப் பெண்ணேயாகும்
கணத்தினிற் கிழக்குத்திக்கில் கன்னியும் வலுவிலாமே. 46
முடிவதுத் தாரமேக முற்றிலு மாண்களில்லை

கொடியப்பெண் விர்த்திமுந்திக் குணமில்லை பிந்திமூன்று
படிதனில் பெண்பாலாகும் பற்றிய நாற்பத் தைந்திற்
முடியவே மனைவிசாவாள் மொழிகுவாய் நந்திவாக்கே. 47

## வேறு

பக்குவமாக மன்னனேயேழோன் பாக்கியத்ததிபனால் பார்வை
தக்ககோணத்தில் நின்றிடப்பலன்கேள் சார்ந்திடுந் தாரமேயேகம்
மிக்க செல்வீக முள்ள நல்லிடமாய் விரும்புவன் வீதிகீழ்மேலாம்
திக்குகீழ்பக்க மருகினில்சந்துச் சிறந்திடு மாலயங்கிழக்கே. 48

## வேறு

சசிக்கேழு பிருகுக்கேழு தனித்திடு மிராசிக்கேழு
பசியகோ ளிருக்கின்மன்னா பலன்மூன்றில் சுபங்கள்செய்வன்
அதிபனுங் குருவின்பார்வை யடைந்திடி லரசேகேளாய்
நிதிதனங்க ளத்திரத்தால் நிலையோக மென்றுகூறே. 49
மதிக்கெட்டு நீலற்கெட்டு வரும் ஜென்மந் தனக்ககெட்டாதி
பதிக்கெட்டாய் நின்றகோளால் பலனாயுள் செல்வந்தீர்க்கம்
நிதிக்கெட்டா மாதிப்பார்வை நிலையொடுநிற்க தீர்க்கம்
பதிற்குள் நிலைமையிவ்வாறு பலனறிந் துரைப்பரீதே. 50

## வேறு

ஆதியதொன்பான் பலனெவ்வாறென்னில் ஐந்தினுக்கைந்தாகு மிடத்தோன்
பாகமாய்ப்கெர்ப்பம் சரத்ததிபதிகள் பற்றியப்பார்வையங் கிருக்கில்
வேகமாய்ப்பூர்வ தனமெலாம்விரயம் வேந்தர்கள் கலகமேயுண்டாம்
தாகமாயன்னிய தேசசஞ்சாரம் தரைமிசைப் பிரயா ணமென்னே. 51
மருவியவிவ்வாறு பலன்தந்தைக்காகு மாதர்கள் கலகத்தால் பிணியால்
உருதிநல்மனையாள் பகைமிகவுண்டா முற்றவரால் பொருள்விரயம்
கருதியதந்தை வர்க்கத்தில் கர்மம் கணிதமா யிருபாகம்விர்த்தி
பொருதிகாண்பூர்வ நிலையதுபேதம் புவிமிசை யன்னியர்மனையே. 52

## வேறு

கதிரேழா மிடத்ததிபரதற்குமூன்றாய்க்
கனத்ததசை மாரகமாந் தந்தைக்கிவ்வாறு
பதிபுகழும் ஜாதகற்கு முப்பத்தே ழாண்டிற்
பற்றிய பாக்கியத்ததிபன் பலர்கூடிற் கண்டம்
மதிபதியா யிருந்திறப்ப னதிகசெல்வ முளனா
மாதீனமது நாசமறிந் துரைப்பீ ரின்னம்

விதிமுப்ப தல்லாது லொன்பதனிற் றர்மம்
விளங்கவிவன் நிலையொன்று விருப்பமதாய்ச் செய்வன். 53

## வேறு

கதிர்நீச மாகநிற்கில் கன்னியொன்றா ணுநான்கு
விதியதாம் பிதாவுககேதான் விதித்திடும் தாரமூன்று
சதியதாந் தாயுமாள்வள் சத்தியம் திங்களாறில்
பதியதாம் சகோதரங்கள் பாகத்திற் கில்லைதானே. 54
பிதுர்வர்க்கம் நான்குதன்னில் பெலன்விர்த்தி யிரண்டதாகும்
கதித்திடும் பிதுர்பாகங்கள் கன்னியாம் சகோதரிக்குத்
துதிக்க நன் மேன்மையாகும் தொழுவதி காரமுண்டாம்
மதித்திடுஞ் சிறியதாகும் வருமூன்றாமாண்டில் மாள்வள். 55
மந்திரி நீசன் கூடில் மருமணம் பிதாவுக்கேதான்
சுந்தரப்பெண்களெல்லால் சொல்லவு மைந்தரில்லை
வந்திடுமேழைந் தாண்டின் மன்னனே ஜாதகன்றான்
நொந்திடப் பிதாவுமாள்வன் நுவலுவர் கணக்கிதாமே. 56

## வேறு

ஓதிய பத்தாமா திப்பலனெவ்வா றென்னி
லுறும்பூமியதிகார முணர்வுடனே செய்வன்
வேதியர்ப் பார்வையுமிதனி லிருந்திடிற்கேளரசே
மிகலாபப்பலன் ஜாதகன் விரும்புவன் தென்கிழக்கில்
நீதியுடன் பொருள் வருத்துத் தென்திசையிற்பலனாம்
நிலைபூமி வியாபாரம் நிலுவிர்த்தியதனால்
பாதிவயதினிற் சுகமாம் பின்சமனேயாகும்
பற்றியதிவ்வித மென்றுப்பலன் களுரைத்திடுவாய். 57
கொடுத்திடுவ னைந்தாதி பலனிதிலே கேளாய்
குடும்பாதிப் பார்வையுடன் கோள்பகையாய்நிற்க
தடுத்திடுவன் புத்திரனோ பிறந்திருக்கும் பெண்பால்
தனித்துநின்று காலாந்திரமதிற் புத்திரனென்க
எடுத்தசுக மதக்கைந்தாமாதி தனையாறோன்
இன்பமுடன் பார்வையதி லினிதாகநிற்கில்
தொடுத்த கர்மமுடிக்க வல்லவன் காணிவனே
சுயார்ச்சித நற்பொருள்பூமி சொந்தமுளனென்னே. 58

### வேறு

கூறிய வீர்யத் ததிபதியுபயங் கொடுந்திர ராசியிலிருக்கில்
வீரியமுடையன்மனை யிரண்டுளனாம் விர்த்தியே யோர்மனையாகும்
தேரியத் தலபேதங்களிற்செல்வன் சிறந்தமன்னவர் களால்நட்பன்
பாரினில்நன்மை விரயமேசெய்வன் பற்றியயோக ஜாதகமே. 59

*தனுசு மூன்றா மோரையின் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## தனுசு நான்காமோரையின் பலன்

குரித்தனர்காண் தனுர்பாகம் நான்காமோரைக்
கூறுங்கால் கீழ்மேலாய் வீதியாகும்
பிரித்தமனை யிரண்டுபிரிவாகத் தோன்றும்
பெலனெதிர்த்த மனைபாழு பெலன்கோவில் மனையாம்
உரித்தாகுந் தென்முகப்புப் பாதிமனைபாழா
முள்ளமனை தந்தைதக்கு வுறுதியதுவாகும்
தெரிந்துவிடு மதிற்பகுதி கன்னியர்கள் தமக்குக்
சேர்ந்துவிடு மென்றுரைப்பார் திறமையிதுகாணே. 60

### வேறு

பொன்னவனாக்ஷி வில்லதில்ஜனனம் பொருந்திய நான்காவதோரை
வின்னமொன்றில்லை யாதீனமிரண்டு மிக்கதென் கீழ்கங்கையுளதர்
பன்னியப்பலபேர் கூடிடுமிடங்கள் பற்றியவிருக்ஷமும் வனங்கள்
உன்னுமேல்பக்க மிவ்விதம்நிலையா முறுதிசொல் தென்மேற்கில் கோவில் 61
எண்ணிய ஜென்மத்தாதி யிடரிலாசரத்தில் நிற்க
நண்ணியே பார்க்கச்செல்வம் நலந்தந்தை காலமென்க
புண்ணியமதனால் கீர்த்திப் பெருமையாமம் தந்தைகாலம்
வண்ணமாம் பாட்டன்வர்க்கம் வலுவொடு விர்த்திரெண்டே. 62
விர்த்திகாண் தந்தைகாலம் விகல்பமொன் றில்லைநான்கு
பத்தியாய் மூவர்நட்பாய் பலமொடு யிருப்பர்மன்னா
மற்றரே கன்பதாகவலு வெலாங்கெடுத்து அன்னியர்
பெற்றநன் மனையைச் சேர்ந்துப் பேதித்து விருப்பானென்றே. 63
மானிடர்க்கயன் விதித்தவருமாயுள் தன்னைக்கேட்கில்
ஊனமொன்றில்லை வெள்ளியுறும் புந்திநீலன் வெய்யோன்
தானிவராண்டு தன்னைச்சார்ந்துமே கணிதம் செய்யில்
ஈனமில்லாத வாயுளிது தனைவகுத்துச் சொல்லே. 64

சொல்வது மிவ்வாறாகும் தொகைகளே மொத்தமாயுள்
வெல்வது மத்தியகண்டம் விருப்பமா யிதனிற்சொல்லும்
செல்வனே யரசேபாலா சிறந்தட்டமாதி யாண்டில்
கல்லலாய்க் கண்டமொன்றுக் கங்கையி லுண்டாமென்னே. 65
உண்டது நீலனாண்டி லுறும்நாற்கால் சகடைதன்னால்
கண்டிடுங் கண்டமொன்றாங் கிளையேறி வீழ்த்தலொன்றாம்
துண்டெனு மரிட்டங்கண்டு சுகமுண்டாய் பரிக்ஷித்தாகேள்
நண்டட்ட மாதியாக நலம்செய்வா றென்றேசொல்லும். 66
தக்கமன் னவனே செல்வன் தரைமிசைப் பிதுர்க்குமேலாய்
மிக்கசெல்வீக முண்டாம் விருப்பமாய் வாலிபத்தில்
ஒக்கவே சுகங்கள் பூமி யுறுமதிக் காகத்தன்மை
நிற்கவே பூமிதன்னால் நிறைசெல்வ மடைவனென்றே. 67
நாடிய தேககாந்தி நலம்சம ரூபமாகும்
தேடிய மச்சம்மன்னா செவிக்குப்பின் மருவுண்டாகும்
கூடிய வாலிபத்தில் கொடுமையாந் தந்தைபூமி
நீடிய ஜாதகற்கு நிலைசுயார்ச்சிதங்க ளுண்டே. 68

## வேறு

துலங்கும் தனத்தோன் கோணத்தில் சூழ்ந்தங்கிருக்க வதில்வித்தை
நலங்கானன்னிய பாஷையுளன் நாட்டிலுள்ளோர்க் கதிகாரி
பெலன்காண் வாக்குவுறுதியுளன் பேதைதமக்கு நட்புளனாங்
குலங்கள் தன்னிற் கீர்த்தியுளன் குணவான் ஜாதகன் பலனிதுவே. 69

## வேறு

பெருகிய மூன்றாமதி பெலமுட னாறில்நிற்கில்
வருமதி தனக்குக்கேந்திரம் வரும்நில மகனும்நின்றால்
வருமிதி லரசேபாலா வறைகுவர்ய் விர்த்தியோகன்
உருந்தன விர்த்தியேகன் உறுதியா யுரைப்பரீதே. 70

## வேறு

வாழ்நான்காமாதி சரத்தினிற்பார்வை வந்திடயன்னை யர்க்காயுள்
தாழ்வில்லைச்செல்வன் வயதிருபத்தேழ் தனித்தபாலைந்தில் மாரகமாம்
சூழவே வாகனங்களுமுண்டாம் சொல்பூமி விர்த்தியுளனாம்
வாழ்புவி தன்னின் மன்னர்கள்பேட்டி வலுவெல்லா மன்னையின்பலனே. 71
பாலகன்றனக்கு கற்பலனரசே பகருவன் பஞ்சமத்ததிபன்
சீலமாய்க்கேந்திரக் கோணத்திலுறினும் சிறந்திடுமம்மான்கள் மூவர்

கோலமாயன்னிதேசத்தி லொருவன்குணம் பெண்பால் விர்த்தியா லிருப்பன்
சீலமாயிவ்வாறு பலனெலாமறிந்துச் செப்புவீர்ஜாதகன் றனக்கே. 72
நல்லவர்பார்வை யைந்தினுக்கிருக்க நாடியப் புத்திரவிர்த்தி
சொல்லுவரிதில் பெண்விர்த்தியுமூன்றுச் சுகமுளாளதிலொரு பெண்பால்
வல்லபமுடையாள் வாலிபத்திறப்பள் மைந்தரின் புத்திரபாகம்
அல்லலொன்றில்லை மற்றதுசுகமா மவனியிற் றீர்க்காயுளென்றே. 73

## வேறு

மேவிய வாறாமாதி மிக்ககோள் பார்வையாகில்
தாவியச் சத்துருநாசம் தரணியில் ருணங்களில்லை
பாவிகள் சகிதப்பார்வைப் பற்றிடிற் றீங்கதாகும்
மேவியத் தனங்களெல்லா மேதயர்க் கழிப்பான்றானே. 74
வலியவேழா மிடத்தின் வரும்பலன் றன்னைப்பார்க்கில்
நலிவதொன் றில்லையோகம் நலமுடன் களத்திரமேகம்
பொலிவுற சுகங்கள் மேன்மைப் பொருந்திய சுகங்களுள்ளாள்
நலிவதொன்றி ல்லையோகம் நலமுடை யவளாமென்னே. 75
நலமதாங் கீழ் மேல்வீதி நாடியத் தென்பால்வீடு
பெலமுள்ள மனைக்குமேல்பாற் பெருகியக் கோவிலுண்டாம்
ஜலமது வடபாலாகும் தரைமிசைக் கீழ்பால்சந்து
பலபேர்கள் கூடுந்தானம் பலமென வடபாலோதே. 76
ஓதியத்தந்தை மூவர்வொரு தந்தை யன்னியதேசம்
வேதியர் சகிதம்பார்வை மிகுபலமாக நிற்கில்
நீதியாய் தந்தையேகன் நிலையுளன் சகோதரங்கள்
தோதிதில் விர்த்திமூன்றுச் சுகமுள்ள நிலையிவ்வாறே. 77
மதிக்கெட்டுஜன்மத் தெட்டோர் வலுவுடன் திரத்தில்நிற்க
பதிக்கெட்டாலாயுள் தீர்க்கம்பகர் மத்தியக் கண்டமொன்று
நிதியுடன் பொருள்கள்மாறும் நிலையிதுசர்ப்ப கண்டம்
நதிக்கருகினிற் கேள்மன்னா நாலேழா மாண்டிற்றானே. 78
நிறைந்திடும் பாக்கியாதி நிலையொடு திரத்தோன் பார்வைக்
குறைந்திடா திருக்கச் செல்வம் குணமுடன் பிதுர்க்கங்கோது
சிறந்தசேய் நீலன்ராகு திரமதைப் பற்றிப்பார்வை
உறைந்திடாய் பிதுர்க்குமேலே யுறுஞ் செல்வமடைவன்றானே. 79
கூடியபத்தாமாதிக் குணமுடன் கேந்திரக்கோணம்
தேடியங்கிருக்கப்பூமி சிறந்திடும் விர்த்திதன்னால்

நாடியபலனாந்தந்தை நல்தொழில் செய்வனென்கத்
தேடிய வயதுமுப்பான் சிறந்திடயோக மென்னே. 80

***தனுசு லக்கினம் நான்கு ஓரைக்கும் செய்யுள் - 80***
***முன் லக்கினம் 7-க்கு செய்யுள் - 631***
***ஆக மொத்தம் - 711***
***தனுசு லக்கினப் பலன்கள் முற்றிற்று***

* * *

# மகரோதயம்

மகரலக்கின மேயாகில் வருமது கீழ்மேல்வீதி
அகமகிழ் தெற்குவா சலதிற்கெதிர் சந்துண்டாகும்
ஜெகம்புகழ் கோவில்மேற்குச் செப்புநீரோடுங்கால்வாய்
மகரமேன் றிசையிற்கங்கை மரங்களுமுண்டாஞ் சொல்லே. 1

## மகரத்தில் பாவாதிபர்கள் நின்றபலன்

மகரமது சனியாக்ஷியதி லுதயமாகில்
மன்னர்களால் மனமகிழ்ச்சி மைந்தர்சுகமுளனாம்
சுகமுடையன் நல்வசனன் தந்தையினாற் செல்வன்
சுகமென்ப ரிருவித்தை சுகமுடையனாகு
மிகமூன்றா மாதிகுரு நீசமதிலிருக்க
மிளையோரால் சுகமில்லை மேதினியிற் சீவன்
ஜெகமதனில் நான்காதி மகரத்திலுச்சம்
சார்ந்திருக்கப் பூமிதனம் தாய்வழியில் செல்வம். 2
ஜெகமதனிற் வித்தையுள னைந்தாதிசுகங்கள்
சிறந்துநிற்கச் செல்வீகன் சிறப்புடையனென்க
அகமதனி லன்னைவர்க்கந் தனிற் சுகங்களுளனா
மதிற்பூமி விவகாரமதில் ஜெயங்களுண்டாம்
மிகசுகவானாறாதி மிதுனம் புந்தி மகரம்
மேவிநிற்க சுகபேதமிகுந்த ருணமுளனாம்
யூகமதிரோகவான் யுற்றநட் யோர்ப்பகைஞன்
உற்றாரால் சஞ்சலத்தனுறு மம்மான்பகையே. 3
பேசுமிலக்கின மகரமேழாதியுடனே
பிறைசூழ்ந்து நிற்கமதில் பேசியநற்பலன்கேள்

மாசிலா சுகமுடையன் மனைவியினால் சுகவான்
மன்னரிட நட்புளனா மந்திரி சாஸ்திரீகன்
நேசமுள்ள மித்திரனாம் நிபுணசாஸ்திரீகன்
நேர்வசனன் வளர்மதிக்கு நேரானப்பலனாம்
தேசமரமதியாகில் தாரமதுவீனம்
சிறந்ததொழில் பேதமாம் செய்ந்நன்றி மறப்பன். 4

## வேறு

எட்டாதிவெய்யோன் பகையதாய்மகர மிருந்திடப்பிறந்த ஜாதகற்கு
துட்டர்கள் தமக்குத் துட்டனாயிருப்பன் சொல்தனிற்மிக வல்லவனாவன்
கட்டமாய்ப்பெண்பால் பகையுளனாகுங் கன்னியர்கலக்கமே யுளனாம்
திட்டமாயன்னிய தேசசஞ்சாரந் தீர்த்தயாத்திரை யுளனென்றே. 5
வரும்நிலையொன்பான் புந்தியேமகரம் வந்த ஜாதகற்கினிப் பலன்கேள்
பெருகியமெய்யன் பூர்வீகநாசம் பேதமன்னிய ருறவு
தருவதுகுணத்தால் பூமிகள்விரயம் சஞ்சலசோரமேகாட்டும்
பெருவதுபத்தா மதிபதிக்கேந்திரம் பலமொடுமகரத்தின் பலன்கேள். 6
வரும்நிலைத் தொழில்கள் பூமிவர்க்கத்தால் வருங்களத்திர மீனமென்பர்
குருகியசுயார்ச்சிதப் பூமிகள்விரயம் குணலாபத்ததிபர் கேந்திரத்தில்
திருதியத்தொழில்காண் சிறப்பதிலில்லை சிறந்த மன்னவர் நீசமகரம்
வருபவர்தனக்குப் பூமியும் பொருள்கள் மன்னவர்ப் பகையுண்டாமென்றே. 7

## இரவி நின்ற பலன்

உதயத்தில் மன்னாகேளுற்ற மார்த்தாண்டன் நிற்கில்
இதயமேகலஞ்சத்துரு வினியவார்த்தையினால் மேன்மை
கதையுறும் ஞானக்கேள்விக் கல்விமானாயுள் தீர்க்கம்
பதிதனைவிட்டு நீங்கிப் பலனன்னிய தேசம்வாழ்வன். 8

## மதி செவ்வாய் நின்ற பலன்

பிறைமகரத்தில் நிற்கப் பிறந்தசேய் தனக்குச்செல்வம்
திரமனமுடைய னன்னைச் சிறந்தவர்க்கத்தில்செல்வன்
குறையுளக்களத்திரம்ரெண்டு குஜனிற்கப் பலன்கள்கேளு
குறைவில்லை பூமிலாபங் குணமொடுசெல்வனாமே. 9

## புதன் நின்ற பலன்

கணக்கனு மகரம்நிற்கக் கருதியே ஜெனித்தபேர்க்கு
இணக்கமா யிருவர்பூமி யிடர்பகை விவரங்கள்

பிணக்குடன் சகோதரங்கள் பெலன்மனைச் சேருமென்க
குணப்படாத் தந்தைசொத்துக் கூறன்னிய தேசஞ்செல்வன். 10

## குரு நின்ற பலன்
## வேறு

மருவியமகர ராசியில்மன்னன் வரில்ஜென்ம லக்கினமாகின்
திருதியமதனாற் சகோதரனேகன் செல்வியு மொன்றெனலாகும்
குருகியவுருவன் மன்னர்கள்நட்பன் கூறதிகார நட்புடையன்
பிரிவுடன் பூர்வப்பொன் பூமி விரயம் பெலன்புத்திரவீனமென்றோதே. 11

## சுக்கிரன் நின்ற பலன்
## வேறு

சுக்கிரன் கலையில்நிற்க சுரரவது ஜெனனமாகில்
தக்கவன் பிதுர்க்குச்செல்வன் தரணியில் ருணத்தால்துன்பம்
பக்குவ மனையைப்பற்றிப் பலபலவழக்குடநேரும்
துக்கவானன்னியர் நட்பால் சுகமது யடைவன்றானே. 12

## சனி நின்ற பலன்
## வேறு

மந்தன் மகரந் தனிலாக்ஷி வந்த ஜாதகற்குபலன்
முந்திமனையுஞ் சுயார்ச்சிதமு மூவர்வழக்கா மதில் ஜயமாம்
சொந்தமனைக ளன்னியர்க்காம் சுகங்களிருபத்தைந்தின்மேற்
மைந்தன்யோகமடைந்திடுவன் வழக்கும் ஜயிப்பானெனச் சொல்லே. 13

## மகர முதலோரையின் பலன்

கலைமுதலோரை ஜனித்தபேர்க்கெல்லாங் கருதுவன்கீழ் மேலாம்வீதி
மலைவுறுவடக்கு முகப்பயுண்டாமெதிரில் வாழ்மனைச்சந்துண்டாமரல்
நிலைபூர்வபேத மன்னியர்மனையி லிருமனை விர்த்தி யொன்றாகும்
பலமொடுதென்கீ ழாலயங்கங்கைப் பாலகாவிருக்கு மென்றுரையே. 14
மதித்திடுமகர முதலோரை ஜெனிக்கில் வடமேற்கி லாலயங்கங்கை
பதித்திடும் பிதுர்கள் பூர்வீகமில்லைபாலனே வன்னியதேசம்
விதித்திடல்தந்தைப் பூர்வம்விட்டகன்று வேந்தனற்றிசை தனிலிருப்பன்
கதித்திடுந்தந்தைப் பிற்பலன்வித்தைக் கணிதமுள்ளவ னெனவோதும். 15
கண்டபாக்கியாதி யதற்குக்கன்மாதிக் காரியின்பார்வை யங்கிருக்கில்
மிண்டியத்தந்தைப் பிதுர்த்திருதியமா மிரண்டதில் விர்த்தியுமொன்றாம்
கொண்டரோகாதி யதற்குப்பின்விரயம் குணமுள்ள பஞ்சமத்ததிபர்
தண்டதுவிடையின் அதிபர்கள் பார்வைச் சார்ந்திடில் யேகனாந்தந்தை 16

## வேறு

ஐந்தினுக்கு மூன்றாதிப்பலன் கேள்புந்திக்
காகுமிவ்வாறு நிலையன்னை வர்க்கந்தன்னில்
முந்திவருந் தந்தையர்க ளிருவராகும்
முன் பூர்வமதுவிர்த்தி முன்னாள்யோகம்
தந்தையர்தாய் சுகமுள்ளக் குடும்பம்முன்னாள்
தலபேதமாகு மெனக்சாற்று மன்னா
சிந்தையம்மான் வர்க்கமது ஏகனென்றே
திறஞ்சொல்லு மிவ்விதமாய்த் திறமையீதே. 17

## வேறு

வருகும் ஜாதகற்கு நிறமதுசமனாம் வரும்நெடி செல்வ நற்குணவான்
பருவம்வாலிபத்திற் செல்வங்களுளனாம் பகையுளோர்த் தனமிதிற்சேரும்
தரும்பிதுராதித் தந்தைகாலத்தில் தழைத்த செல்வீகங்கள் நாசம்
பெரும்பலன்ஜாதகன் பிறந்த காலத்தில் பெருகிய செல்வமாமென்றே. 18

## வேறு

உள்ளதனத்தின் பலன்கேளு முறுதிவாக்கு வுளன்மேலும்
கள்ளமனதில் தானெண்ணான் கடினவாக்கொன் றில்லையிதிற்
தெள்ளும்வித்தை யிரண்டுவிதம் சிறந்தேவரும் பின்செல்வமென
உள்ளமறியநந்தி யவருரைத்தநூலு மிதுவாமே. 19

## வேறு

தனத்தினிற் தனத்தாதிப் பலன்கேட்கிலிரண்டு
சகோதரங்கள் விர்த்தியதி லொன்றுசெல்வம்
இனத்தினில் பின்சகோதரத்திற் பகையுண்டாகும்
யின்பமில்லை யிப்பலன்கேள் ளினியப்பாலா
மனத்தினிற் சஞ்சலமுள்ளன் மன்னர்நட்பன்
மந்திரியின் கிந்தையென வகுத்துச்சொல்வர்
கனத்துடையன் லீலைபுரிக்கன்னியர்கள் நட்பன்
கவலையுளன் ரோகமுளன் கணித்ததிவ்வாறாமே. 20

## வேறு

உற்றிடும் நன்காமாதியுறும் பலனன்னை செல்வம்
பெற்றுமே யிருப்பாளாண்டு பெலன்முப்பத்தைந்துதன்னிற்
குற்றமாரகமே செய்யுங்குணமில்லைக் குடும்பமப்பால்

அற்றிடுஞ்சுகங்களில்லை யழிந்திடுங் குடும்பமென்றே. 21
உண்டெனும் பஞ்சமா யுணர்வொடுக் கூடியேழோன்
கண்டிடனிற்பாராகில் கன்னியர் தனக்குபுத்திராள்
துண்டெனுமொன்று விர்த்திசுக முடன்பாலீனம்
தொண்டர்கள் பணியும்புத்திரன் தொல்புவி வருவனென்றே. 22
குறைவிலாரேகத் தாதிகோண கேந்திரத்திலாக்ஷி
அறையவே நல்லோர்காண வமர்ந்திடில் ருணங்களுண்டாம்
தரைமிசை சத்துருவாலே சஞ்சலமுண்டாமென்க
நிரையுள்ள சத்துருக்கள் நிலையப் ஜெயங்களென்னே. 23

## வேறு

தோணுமேழா மிடப்பலன்கேள் சொல்லுங்களத்திர மொன்றாகும்
பூணுமன்னியத்தாரமதுப் பொருந்துமிரண்டு நிலையுளதால்
காணுங்கீழ்மேல் வீதிதனிற் கனத்தவடபால் வீடாகும்
காணுங்களத்திர வர்க்கத்திற் நலமாங்கிளைகளிரண்டென்னே. 24

## வேறு

காரியின் பார்வை யட்டமத்திருக்கக் காரிக்குவட்டமத்ததிபன்
வீரியமுடனேசுபர்களோடடுத்து மேன்மையாயிருந்திடப்பலன்கேள்
பாரினிற்செல்வன்யோகவானாயுள் பலன்தீர்க்கமிருபதிற்கண்டம்
கூறினரிவ்வாறு பலனெலாமரசே கொடுமையொன்றில்லை யென்பதுவே 25
யோகமேயறித லொன்பதாமிடத்தி லுறுந்தந்தைதனக்கு மேல்யோகன்
பாகமாஞ்சுயார்ச்சித பூமியுமுண்டாம் பலரிடப்பொருளும் வந்துதவும்
யோகியரரசர்மகிழ்ச்சி யுள்ளோனாம் புண்ணியந்தனி லெண்ணஞ்சமனாம்
தாகமாயன்னியக் களத்திரமதனால் சார்ந்திடப்பொருள் விரயமுமே. 26

## வேறு

வாசமாம்பத்தாமாதி மருவிப்பாவிபார்வை
நேசமாய் சுபர்களோடு நிலையுடனிருப்பாராகில்
தேசசஞ்சார முள்ளோன்றியங்கிடா திருப்பன் செல்வன்
பாசமாம்பூமி தன்னால் பாக்கியமுடையனாமே. 27
மின்னியலாபத்தாதி மிருசரத் ததிபன்பார்வை
பின்னமேயில்லை லாபமிகு வடமேற்காமென்க
உன்னியத்திசையே லாபமுறுந் தொழில்வியாபாரத்தால்
அன்னியர் தன்னைக்கூடி யடைவன்காண் செல்வமென்னே. 28

பாவியாம் லாபத்தாதிப் பங்கறியே யாறில்நிற்கத்
தாவியக் காரிபார்வைத் தரித்திட முன்னோரெல்லாம்
ஏவியவிருநான்காகுமிதுவெல்லா நாசமாகும்
தேவியின் சர்ப்பந்தன்னால் சேதமாஞ் ஜெனித்த போதே. 29
பாரினில்வியத்தானாதிப் பரிந்துநற்சுபரால் பார்வை
தேரியே யிருக்க நன்மைத் திரத்தினில் விரயமாகக்
கோரியக் கோதைதன்னால் குடும்பத்திற் விரயமென்க
நேரினிலர்சராலும் நிலைவிரயங்களென்னே. 30

*மகர முதலோரையின் பலன் முற்றிற்று*

* * *

## மகர மிரண்டாமோரையின் பலன்

மருவியமானி லிரண்டாவதோரை
வண்மையாய் ஜெனித்த ஜாதகற்குப்
பெருகியவீதித் தென்வடல் முகப்புப்
பெலன்மேல் பானெதிர் மனைபாழாம்
தெரிவதுயிரண்டுபக்கமு மனைகள்
சிறந்திடும் விர்த்தியாய்த் தென்பால்
பிரிவதுக் கோவில்விர்த்திப் பூர்வீகம்
பெலமொடு நிலையென்பர் பெலமே. 31
பெலமுள்ள மரகமிரண்டாவ தோரை
பெருகியே ஜனித்த ஜாதகர்க்கு
தலமதிற் றென்பால் கங்கை காண்தென்கீழ்
தனித்தொரு வாலய முளதாம்
நலமதுகீழ் பாற்பிதுர்க்க ளாதீனம்
நலமில்லைப் பிறந்திட மன்னியமாம்
ஜலமதுக் கால்வாய் வடபக்கஞ் செல்லும்
சார்ந்திடும் விருக்ஷம தென்னே. 32
இவ்விதமிருக்கத் தந்தைக்குத் தந்தை
யிருமூன்று பேர்விர்த்தி யிரண்டாம்
அவ்விதந் தந்தைச் சகோதரமாகும்
ஆதீன மிரண்டிட மென்க
இவ்விதமிவ்வாறு நிலைசொன்னீ ரதனை

யெடுத்துரைத் திடுவீர்காண் குருவே
தவ்வியத் தனைத்தனித் தனியாகச்
சார்ந்தடி யார்க்குச் சொல்வதுவே. 33

## வேறு

சொல்வதுகேளாய் ஜாதகன்செல்வன் சொர்ணமாந்தேகம் நற்காந்தி
வெல்வதுயிடதுதுடைதனில் மச்சம்வேந்தனே தீர்க்காயுளுடையன்
வல்லவன்மனதிற் றுயரிலானாயுள்கா ணறுப தல்லாது
சொல்வதுகண்ட மாரகமாறில் குணமசுரத்தால் நலியாமே. 34

## வேறு

தப்பாதிதற்குத் தனபலன்கேள் சார்ந்தவித்தை யிரண்டுளதாம்
இப்பாரதனிற் றந்திரமுளன் இனியக்குடும்பச் செல்வீகன்
ஒப்பார்க்கொடியவரின் வார்த்தை யுற்றார்தமக்குங்கொடுமையதாய்
தப்பாதுரைப்பா ரெனச்சொல்லுந் தரணிமீது விப்பலனே. 35

## வேறு

திடமுள்ள மூன்றாமாதி செய்கைகேள் மூன்றுள்மூன்றோன்
படமுருப் பாவியோடுப் பற்றியே நிற்கப்பார்க்க
அடமிலா திருக்கவிருத்தி ஐந்துகாண் சகோதரங்கள்
உடன்விர்த்தி மூன்றுநிற்கும் உறுதியிப் பளன்களோதே. 36
ஓதிய நான்காமாதி யுறும் பலனன்னை கண்டம்
தீதிலை யைந்தாமாண்டிற் செப்புவாய் மாரகங்கள்
வேதியர்ப் பார்வையங்கு மிகுபலம் பற்றிநிற்க்
கோதிய மனைகள் பூமிக் குறைவிலா செல்வமாமே. 37
செல்வமென றுரைத்தீர் நான்கோன் திரம்பாவியாகிநிற்க
கல்லலில்லாமல் மேன்மைக் கதித்திட லெவ்வாரங்கு
அல்லாமல் செவ்வாய் பாவியானதால் ஜென்மத்தாதி
தொல்லையாம் பாவியாகச் சூழ்ந்ததால் நன்மைமைந்தா 38
மைந்தனே ஐந்தாமாதி வரும்வெள்ளி பத்தாமாதி
சொந்தமா யைந்துக்காருச் சொல்வதுத் துரோகந்தன்னால்
முந்திய வம்மான்செல்வ மொழிசுக மில்லைத்தாழ்வு
பிந்திய செல்வபேதம் பெலவீன மடைவனென்றே. 39
அடைவதென் றுரைத்தீ ரைந்தோன் அசுரமந்திரியுமாகி
திடமுட னிருக்கச்செல்வம் சிறப்பில்லை யென்றீரெவ்வாறு
தடையிலாப் பரிக்ஷித்தாகேள் சஷ்டாட்டத் தானத்தாதி
விடைதனக் காரேவாக விகல்பமாங் குடும்பமென்னே. 40

அன்னையின் சகோதரங்கள் அறிவது நான்கதாகும்
உன்னிய வாண்பால்ரெண்டு வொருவர்க்குப் புத்திரநாசம்
பன்னிய வைந்திற்கர்மம் பண்ணுவனேக னம்மான்
வின்னமாம் பூர்வம்விட்டு மிக்கப்பெண் வழியிற்செல்வன். 41
ஆறினுக் காறாமாதி யனலவன் றனக்காறாதி
மீறியக் கேந்திரகோணம் மிகுபலம் பெற்றுநிற்கத்
தேரிய ருணங்களில்லைச் சேயவற் பார்வைதன்னால்
பாரினிப் பூமிதன்னால் பலபல வழக்குண்டாமே. 42
கேளிதிற் சப்தமாதிக் கிளைமதிக் கேழாமாதித்
தாழ்விலா திருக்கத்தாரம் தரைமிசை விர்த்திரண்டாம்
ஏழினுக்கதிபர் முன்றோர் இன்பமாய்ப் பார்வைநிற்க
சூழதிகாரச் செல்வம் துணையுள்ள களத்திரமென்றே. 43
செல்வமேப் பூர்வமில்லைச் சிறந்ததோர் நிலைகேடாகும்
வெல்வனே யேழாமாதி மிகுத்த சுக்கிரற்கேழாதி
அல்லலாய்க் கூடிப்பார்வை யடைந்திடி லேகதாரம்
தொல்லையா மன்னியத்திற் றொடர்ச்சியா மேமென்னே. 44
பெருகிய சப்தமாதிப் பெலன்கீழ்மேல் வீதியாகுந்
தருவது தென்பால் வீடுத்தனுவதிற் கோவிலாகும்
எருதினிற் விருக்ஷங்களிட ரதிலிருக்கு மிவ்வாறு
குருகியநிலையிற் பெண்பால் கூடுவதிதுகாண் பாலா. 45
அன்பொடு வட்டமாதிய வதற் கட்டமாதி
இன்பமா யினியோர்பார்வை யிருந்திடக்கண்டஞ் சொல்வோம்
துன்பமாம் பத்திற்கண்டம் சொல்வது இருபத்தொன்றில்
அன்பொடு கட்டம்நீங்கு மாயுள்காண் தீர்க்கமென்றே. 46
தீர்க்கமென் றுரைத்தீரேழோன் செங்கதிர்ப் பார்வைதன்னால்
பார்க்கவன்கூடிப் பார்வைப் பற்றியங் கிருக்கவாயுள்
சேர்க்க யெவ்விதத்தாலென்னிற் திரத்ததிபன்கா ணெட்டோன்
மார்க்கமாய்ப் பாவியாகவந்ததால் தீர்க்கஞ் சொல்வோம். 47
பாக்கியப் பலன்கேள் பாலா பரிக்ஷித்தா பத்தாமாதி
நீக்கிய மிதுனங்கன்னி நிலையுள்ள ராசிப்புந்தி
தேக்கியக் கேந்திரகோணம் சுபரொடுப் பார்வையங்கு
தாக்கியே யிருக்கத்தந்தைத் தரணிமீ தன்னியதேசம் 48
அன்னிய தேசமென்றா லதின்விபரங்கள் சொல்லும்

முன்னமே யரசேவொன்பான் முற்றிலு மாறாமாதி
பின்னத்தால் கலகமொன்றுப் பேதமையுரைத்தேன் கண்டாய்
வின்னமொன் றில்லைவிர்த்தி விரும்பிய ஞானியாவன். 49
சோகமே யில்லைபாலா சுகமொடு ஜாதகற்கு
பாகமாய்ப் புத்திரனேகன் பகருவாய் பெண்பாலொன்று
வேகமாய்த் தவங்கள் தன்னால் விர்த்தியாம் புத்திரனென்று
வாகுட னுரைத்தேன்பாலா வறைகுவாய் புவியினோர்க்கே. 50
பற்றிய பத்தாமாதிப் பலனது ஜீவனங்கள்
அற்றது போலாம்பூமி யதுதன்னால் வருகும்லாபம்
முற்றிலும் சுகங்கள் பேதம் முன்பூர்வ பூமிநாசம்
கற்றறிந் துரைத்தல்வித்தைக் கணிதத்தால் விர்த்தியென்னே. 51
சிறந்திட லாபத்தாதி சேய்கேந்திர கோணந்தன்னில்
உறைந்திடப் பாவர்பார்வையுறும்வட மேற்கில்லாபம்
நிறைந்திடும் பூமிதன்னால் நிலைசுகம் சௌக்கியங்கள்
குறைந்திடா திதற்குமேன்மை குணமெலாஞ் சொல்வரீதே. 52

**வேறு**

பங்கமேயில்லைவிர யாதிமன்னன் பற்றியேதிரத்தினிலிருக்க
சங்கையொன்றில்லைப் பூமியால்வழக்குச் சஞ்சலவிரயமே செய்வன்
தங்கியருணமாந் தந்தையால் விரயந் தரைமிசை யன்னியதேசம்
மங்கையர்க்கலக மாகியே திரிவன் மன்னர்கள் பகையுளனென்றே. 53

***மகர மிரண்டாமோரையின் பலன் முற்றிற்று***

✲ ✲ ✲

## மகர மூன்றா மோரையின் பலன்

கண்டிடுதல் கலைதன்னின் மூன்றாமோரைக்
கணிதமுடன் ஜெனித்தோற்கு வீதிகேளும்
உண்டாகுங் கிழக்குமேற் கானவீதி
யுடன்மேல்பான் முகப்பதுவு முறுதியாகும்
துண்டாகு மெதிரில்ல மீனமாகுஞ்
சொல்லக்கே ளிருபக்க மனையும்பாழாம்
சென்றதொருப் பூர்வீக நிலையென்று 54

**வேறு**

பொருந்தியமகர மூன்றாவதோரைப் புண்ணியன் ஜெனிப்பான்காண்மேற்கு

திருந்தியக்கோவி லாலயமுண்டாஞ் செங்கதிராக்ஷியிற் கங்கை
வருந்திடமனையோ யிருவிதப்பூர்வம் வலுவில்லை யன்னியதேசம்
இருந்தன்னியர்பூமி தனையேநிலையா யிருப்பன்காண் தந்தையின்பலனே. 55
தந்தையின்தந்தை சகோதரமூன்றுத் தரைமிசைவிர்த்தியி லிரண்டு
முந்தியப்பூர்வ மிரண்டிடம் நிலைகாண் மூன்றாவதிடத்தினில் விர்த்தி
விந்தையாய்தந்தை காலத்திலிருவர் மிகுசெல்வமே தற்குண்டாம்
சந்திரர்க்கொப்பான் றன்னையைக்கொண்டுத் தண்டையிலாதிப்பலன்சாற்றே. 56

## வேறு

இந்துக்கைந்தா மிடப்பலன்கே ளிடரொன்றில்லை யேழாதி
வந்துப்பார்வைக் கூடிநிற்க வன்னைப்பிதுர்க ளதிலிருவர்
சொந்தமன்னை சகோதரங்கள் சுகமாய்மூன்று விர்த்திரண்டாம்
அந்தந்தனிலே பூர்வீகம் ஐந்தாமிடத்தா லறிவதுவே. 57

## வேறு

வயதிற்கு யைம்பதல்லா லாறிற்கண்டம்
வருஞ்சேய்க்கு ரூபமது வலுத்தநிறஞ் சிகப்பு
நயமிதற்குத்தர்ம சிந்தைநலந் தொழில்கள்விர்த்தி
நல்லோர்கள் கூட்டமிதில் நாடியினிதிருப்பன்
பயமொருநாள் வாராது தெய்வபக்தியுடையன்
பண்ணுமறை யோர் கூட்டம் பலபேர்நாட்டம்
நேயமதாய்க் குடும்பத்தில் கீர்த்திச்செல்வன்
நிலையுள்ளான் பூமிதனம் நிலையுள்ளானே. 58

## வேறு

அன்பாமிரண் டோன்பலனறிதல் அரசேபுந்தி சரமாகத்
துன்பமில்லை சுபர்பார்வைச் சூழ்ந்தங்கிருக்க விதில்வித்தை
வந்தேமத்யந் தான்பேதம் வாலிபத்திற் றானில்லை
சொந்தமுதிர்ந்த வயதுதனில் சொல்வாய் வித்தையின்பலனே. 59

## வேறு

தலமதுமூன்றால்சகோதரப்பலன் தன்மைகேள்சகோதரமைந்து
பெலமொடுவிர்த்தியொன்றதில் நீங்கிப் பெலன்பின்னுங்கொஞ்சநாள்விர்த்தி
நிலைதனில்நின்று வீனமேயடையும் நிலையிதுப்பின்மற்றோர் செல்வம்
கலகமொன்றில்லைக் கனிட்டனேகன் கருதுவரின் னிலைப்பலனே. 60

## வேறு

பெலனிதற்குத் திருதியத்தோன் றனக்கிரண்டு

பெலமுள்ள திசையாண்டு போலச்செல்வம்
பலனிதற்கு சுகஸ்தானம் விரயமீதில்
பற்றிநிற்கு மற்றவிர்த்திப் பகருமிதிற்செவ்வாய்
குலமிதற்குக் காரகங்காணிப் பலனைக்கொண்டும்
குறித்திடுநற் பலனெல்லாங் குணமுளதாய்த்தெரியும்
தலமதனிலினி நான்காமதிபதி யின்பலன்கள்
சாற்றுகிறேன் பரிக்ஷித்தா தன்மையுடன்கேளே. 61

## வேறு

மருவியமாதுர்ப்பல னெவ்வாறென்னில் வருமிதற்காறரூதி நான்கில்
பெருவதுபின்னும் நான்கினில்விரயம் பெலமுள்ளபாவிகள் வருநாள்
தருமிதிற்கண்டம் பிறை செவ்வாயிருவர் சார்ந்திடுமாண்டினிற்றாய்க்கு
குருகியக்கண்ட மாரகமென்றே குறித்திடுமரசே யிப்பலனே. 62

## வேறு

அறிதலைந்தா மாதிபலன் அம்மானோடு சகோதரங்கள்
தெரிதலைந்து நிலையிரண்டு செல்வம்பூர் வந்தானில்லை
பருதிபார்வை யடைந்திருக்கிற் பலன்காண்மூன்று சுகமுளதாம்
திருதியதோன் பார்வையிதிற் சிறந்தசெல்வம் பின்னுண்டே. 63

## வேறு

பருதியு மாறாமாதிப் பாவக்கோள் பார்வைதன்னால்
திரமுளன் செல்வங்கீர்த்திச் சிறந்திட சௌக்கியமுள்ளோன்
கரமுள ருணங்களில்லை கடினமாஞ் சத்துருநாசம்
உரமுளன் மித்ருதன்னை யுறுதியாய்க் கூடிவாழ்வன். 64
அன்புட னேழாமாதி யந்தணர் சகிதம்பார்வை
இன்பமா யிருக்கத் தாரமேகாமாம் விர்த்தியென்க
துன்பமொன் றில்லைவீதி சூழ்ந்திடும் வடக்குதெற்காய்த்
தென்பொடுக் கீழ்மேலாகச் சிறந்திடு மனையாமென்றே. 65
விதித்திடு மட்டமாதி வெய்யவன் கேந்திரகோணம்
மதித்திடப் பாவிபார்வைப் பற்றியங் கிருந்தபோதும்
மதிதனைக் கொண்டுவாயுள் வருந்தீர்க்க மென்கவ்வாறு
கதித்திடும் செல்வமேன்மைக் கண்டமு முப்பதென்னே 66
வந்திடும் பாக்கியாதி வரும்பல னெவ்வாறென்னில்
முந்தியப் பிதுர்பூர்வீக மூவர்க்கன்னிய மாய்ச்சொல்லும்
சிந்தியப் பூர்வந்தன்னில் திறமையா யிருப்பார்தந்தை
சந்ததிப் பிதுர்களைந்து சாற்றுவர் நிலைமைமூன்றே. 67
மூன்றதில் விர்த்தியேகன் முறுஞ்செல்வ முன்னால்காட்டும்

சந்ததி விர்த்தியாகித் தழைத்துப்பின் விரயங்காட்டும்
பிந்தியப் பலன்கள்விர்த்திப் பெலனைந்திற் பொருள்கள்கூடும்
தந்திடுஞ் செல்வமெல்லாந் தழைத்திடும் பிற்பாதிக்கே. 68

## வேறு

காரியத்தானப்பலனெவ்வாறென்னில் கர்மங்கள் தந்தைக்குக்காலம்
வீரியமுடனே முப்பதல்லாது மிகுமெட்டுமொன்றில்மாரகாமாம்
பாரினிற்றொழில்கள்திருதியுமாகும் பற்றியவித்தையாற்செல்வம்
தேரியத்தொழில்கள் ஜாதகன்றனக்குச் சிறந்திடுமென்றுரைத்திடுமே 69
நன்மையாம் லாபாதியின்பலன்கேளும் நலமுடன்றிசை வடகிழக்கு
துன்மையொன்றில்லை லாபமேவிர்த்திச் சிறந்திடுமிரு விதத்தொழிலால்
தர்மமூலமதாய் விரயங்கள்செல்வம் தழைத்திடுமனை யிரண்டுண்டாம்
வர்மமேயில்லான் வெகுஜனப்பிரியன் மாதர்கள் வழியிற் பொன்வருமே. 70

*மகர மூன்றாமோரையின் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

# மகர நான்கா மோரையின் பலன்

சொல்வதுமகரம் நான்காவதோரை சுந்தரன்ஜனிப் பனேயாகில்
வெல்வதுவீதிகீழ் மேலாமருகிற் வீதிகாண்தென் வடலாகும்
அல்லலொன்றில்லை யறிவதுமுகப்பு அதுதென்பாலே திரினில்வாசல்
தொல்லையாமிரண்டு பக்கமும்நாஸ்தி சொல்வதுகோவில் தென்மேற்கே. 71
பாங்குளமகரம்நான் காவதோரைப் பற்றியேஜனித்த ஜாதகற்கு
தீங்குளத்திற்குத்தென் கீழ்பாற்கங்கைத் தென்மேற்கி லாலயமுளதா
நீங்கிய பூர்வமிரண்டிடம் நிலையாய் நிலைபேதமா கியேநிற்பா
சோங்கியத்தந்தைக் குடும்பங்கள்விர்த்தி சுகமில்லைப்பிதுர் தந்தையேகன். 72
பறவியத்தந்தை காலத்திலிருவர்ப் பற்றியச்செல் வங்களுளராம்
திறமுளப்பூர்வம் நாசமேசெய்துச் சோந்திருதலத் தினிலிருப்பார்
அளமுளவம்மானாக்கமு மூன்று அதில்ரெண்டு விர்த்தியாமென்க
உறமுளவம்மா னேகனேவிர்த்தி யுறும் பலனிவ் விதமென்னே. 73

## வேறு

சிறப்பில்லை ஜாதகற்குச் சிறந்தவாண் டொன்றிற்கண்டம்
குறிப்புடன் வயிறுப்போங் காற்கோதையே ரன்னைகண்டம்
பறிப்பது ஜாதகற்குப் பெறுமாறு மாதந்தீர்க்கம்
நெறியது மாரகங்கள் நிலையிவ்வா றென்றுசொல்லே. 74

## வேறு

அறிதல்மகரம் நான்காமோரை யவனி தன்னில் பிறந்தோற்கு
செறியுமிரண்டு மூன்றில்தாண் திங்கள் பாபியுடனிருக்க
விரிவாம் பிறந்தகாலத்தில் வேதனைகள் மிகவுண்டாம்
தருவீதாண்பாலிரட்டையெனத்தறிக்குங் கர்ப்பமெனச்சாற்றே. 75

## வேறு

கற்பங்களழிவு காணுங்கலக் கங்கள் மெத்ததாகும்
அற்பங்களாணே யாகும் அதற்குப்பின் பெண்பால்மூன்று
நிற்பது விவ்வறாகும் நேரினி லிளையோன்கர்மம்
அற்பமாம் வாரமொன்றி லழிவது திண்ணந்தானே. 76
மகரத்தில் நான்காமோரை மகிழ்வீதி கீழ்மேலாகும்
ஜகமதில் வடப்பக்கத்தில் சிறந்திட மனையுண்டாகும்
அகமதில் பிரிவுமூன்றா மன்னையுமிரண்டதர்கும்
விவேகவான் பிதாவுமிக்க வேந்தர்கள் சமானமாமே. 77
மாதுலவர்க் கந்தன்னில் மகிழ்ச்சிகள் மெத்தவுண்டாம்
சூதிதி லொன்றுகேளாய் சொல்லிய சனியுமாக்ஷி
வேதனை வியத்தில்சோமன் மேறியே சுங்கன்பார்க்கில்
சோதனை வாரமொன்றில் சொல்வது மரணமாமே. 78
இன்னமுங் கேளும்சுங்கன் நிசாகரன் மாறிநிற்கில்
முன்னமே சொன்னதெல்லாம் முற்றிலும் பிசகேயில்லை
வின்னமாஞ் ஜாதகற்கு விபரமாந் திங்களொன்றில்
பின்னையும் திங்களொன்றில் பெற்றிடுந் தாயுமாள்வள். 79

*மகரலக்கினம் நான்கு ஓரைக்கும் செய்யுள் – 79*
*முன்லக்கினம் 8-க்கு செய்யுள் – 711*
*ஆகமொத்தம் செய்யுள் – 790*
*முற்றிற்று*

✲ ✲ ✲

# கும்போதயம்

கும்பலக்கினமே யாகில்குலவிய வடக்குதெற்கு
சம்பரமாய்க் கிழக்குவாசல் தடாகமுங் கிழக்கேயுண்டு
கும்பவாய் அரசுமேற்குக் குறுகியக்கிணறுமுண்டாம்
இன்பமாய் விஷ்ணுகோவி லிருப்பது மேற்குதாமே. 1

## கும்பத்தில் பாவாதிபர்கள் நின்றபலன்

திறமையொடு கும்பத்தில் நீலனாக்ஷி
சிறந்துநிற்க ஜாதகற்குத் திறமைகேளாய்
கறமுடைய னாதீனம் விரயமுள்ளோன்
கணிதமுளோன் யோக்கியரைக் கருதிநிற்பன்
இறைதனத்தோ னிறையவனே கும்பராசி
யினிதாகில் யிடரில்லை யினிய வித்தையுளனாம்
குறைவிலைகாண் மூன்றாதிசேய்க் கும்பராசிக்
குறித்துநிற்கப் பலன்கேளும் குணமாய்த்தானே. 2
விரணமுண்டாஞ் சகோதரங்கள் றீனமாகும்
வேந்தர்பகை யதில்விரய கும்பராசி
பரவியநான்கா மாதிவெள்ளி கும்பராசி
பற்றிநிற்கப் பலனன்னை வர்க்கத்தால்மேன்மை
திரவியங்க ளம்மான்க ளாலதிக முண்டாய்ச்
சிறந்திருப்ப னெனச்சொல்லும் விர்த்தியோடு
துறவிமிட நட்புடைய னென்றுரைப்பர் மன்னா
சுகமுள்ளோன் கீர்த்திமான் சுகவானென்றோதே. 3

## வேறு

கும்பத்திற் கைந்தாமாதிக் குறித்தபுந்தியுமே கும்பம்
துன்பமொன் றில்லையம்மான் சுகமில்லை புத்திரவீனம்
இன்பமா யாறாமாதி யினிகடகத்தோன் கேந்திரம்
வன்புட னின்றாராகி லறைகுவாய் ரோகமுண்டே. 4
அன்பொடு ருணங்களுண்டா மாறியே யன்னியதேசம்
தென்பொடு சப்தமாதி சிறந்துகும்பத்தில் வெய்யோன்
அன்பொடுங் கூடிநிற்க வறிவது யேகதாரம்
இன்பமாய்த் தந்தைவர்க்கம் மிடராகு மென்றுகூறே. 5
குடந்தனக் கெட்டாமாதிக் குணம்புந்தி கேந்திரமேறில்
திடமதா மாயுள்தீர்க்கஞ் செல்வனா மன்னைதோஷம்
உடன்பாக்கியாதி கேந்திர முற்றிடத் தந்தைசெல்வம்
இடந்தனை விட்டுநீங்கி யிடரிலா திருப்பன்றானே. 6
பத்தாதிக் குடத்தில்நிற்கப் பலன்பூமி தனங்களுண்டாம்
சித்தர்கள் கூடும்நட்பாஞ் சிறந்த செல்வீகனென்க

வித்தையு முடையன்பூமி மிகுவேந்த ராலயத்திற்
புத்தியாய் சுபத்திற்றானே பொருள்தனை விரயஞ்செய்வன். 7
நலந்தரும் லாபத்தாதி நற்குருக் கும்பராசி
தலந்தனி லிருப்பாராகில் சஞ்சலமில்லாத சிந்தை
குலந்தனில் மேன்மையுள்ளோன் குணவானாங் குறுகமெய்யன்
பெலன்கெடும் விரயத்தாதிப் பெருகியே நின்றால்கேளே. 8
பலன்படுந்தொழிலுங்கேடுப் பற்றிய மனையாளீனம்
நலஞ்சுப விரயமாக நாடியே செலவு செய்வன்
ஜலந்தனில் கண்டமெட்டிற் சரத்துள்ளோ னாகையாலே
பலன்கெடா சுபர்கள்பார்க்கில் பார்தனிற் செல்வனாமே. 9

## (இரவி நின்ற பலன்)

குடமதிற்ஜனன மிரவியேயிருக்கில் குருகியக்களத்திர தோஷம்
திடமிதுரோகத் தேகனுமாகஞ் சிறந்தன்னியர் மனைகள்குடும்பம்
வடதிசைப்பூர்வம் நிலைதென்மேற்பாகம் வணங்கியச் சத்துருஜயமாம்
தடமதில் துன்பமாயுதநலியாந் தணமதுப் பெண்களாலழிவே. 10

## (சந்திரன் நின்ற பலன்)

மதிகும்பராசி யாகமிப்புவியிற் வந்தஜாதகற்கினிப்பலன்கேள்
நிதியெலாஞ் சத்துருதனக்குமேகொடு த்துருணத்தினால் துன்பங்களடைவன்
அதிபனாஞ்செல்வன் ஆறைந்துவயதானபின் யோகமேயிருப்பன்
பதிதனைவிட்டுப் பாலகன் சுயார்ச்சிதப் பலத்தினை யடைந்துமேயிருப்பன். 11

## (செவ்வாய் நின்ற பலன்)

நிலமகன்கும்ப ராசியில் ஜனனம் நிலைத்த ஜாதகற்கினிப் பலன்கேள்
வலுவுடையவனாம் வஞ்சமில்லான் வருந்தனப்பூமி வாலிபத்தில்
பெலமுடையவன்காண் பெண்ணொருமூவர்ப் பேதமில்லாது காணுண்டாம்
தலமதைச்சேர்ந்த சுயார்ச்சிதமுளனாய்த்தரணியில் வாழ்வனென்றுரைப்பார். 12

## (புதன் நின்ற பலன்)

புந்தியேகுடத்தில் நின்றிடிற்புத்திராள் பூரணமில்லைப்பெண் ணுண்டாம்
சந்ததியவந்தா லுரைநதியந்தனில் தனியனாந் தக்கசெல்வீகன்
வந்துமேபிறப்பன் ஜாதகன் வித்தை வாலிபத்தினில் மன்னவனாவன்
சிந்தையாய் ஞானக் கேள்வியன் ஞானிச்சிறப்பொடு நன்மையென்றோதே. 13

## (குரு நின்ற பலன்)

## வேறு

குருவுமேகும்ப லக்கினத்தில் நிற்கக்

குணவித்தைக் குணமந்திரிக் குணவானாகும்
தருந்தன லாபாதிபதி யாகையாலே
சகலருக்கு மித்திரனாய்த் தழைத்துவாழ்வன்
பெருகிய புத்திரலாப மன்னியரால்மேன்மை
பிரபல யோகமுடையன் பெறுவன் பூமி
வருவதுகேள் தந்தைபொரு ளன்னியர்கொள்வர்
வழக்கிட்டுப் பின்பதனை வாங்குவானே. 14

(சுக்கிரன் நின்ற பலன்)

வேறு

வெள்ளியுங் கும்பராசி விளங்கியே நிற்பாராகில்
தெள்ளிய யோகம்பூமி சிறப்பதா மன்னைவர்க்கம்
துள்ளியப் பிதுருவர்க்கம் சுகமுடன் செல்வமுண்டாம்
உள்ளிய மனையாள்வர்க்க மோதுவர்ச் செல்வமென்றே. 15

(சனி நின்ற பலன்)

வேறு

மந்தனுங் கும்பராசி மருவியே யிருப்பாராகில்
தந்திர முள்ளவனாவன் தழைத்த செல்வீகம்பாழாம்
முந்தியப் பூர்வநாசம் முற்றிலும் பெண்ணாற்செல்வம்
சந்ததி யந்தியத்தில் தனமது சுயார்ச்சிதமேயாமே. 16

வேறு

கும்பலக்கினமாய் வந்தஜாதகற்குக் குளிர்மதிக் கேந்திரம்நிற்க
தம்புருவீணை சாரங்கதாளம் தமிழ்களில் பரதவல்லவனாம்
அன்புமே பெருகும் வேதவேதாந்தன் அமைச்சர்மே லதிநற்பிரியன்
இன்பமேபெருகுந் தேவேந்திரராஜ னிந்திரவம்சமுள்ளவனே. 17

## கும்ப முதலோரையின் பலன்

குறிப்பிடுதல் கும்பமது முதலாமோரை
குறித்துவிடு வீதிவட தெற்கதாகும்
வறித்துவிடு கீழ்முகப்ப தெதிரிற்சந்து
மேதினில் வடப்பக்கங் கங்கைகோவில்
செறித்துவீடு விருபக்க மனையும் பாழு
செல்வனின் பிறந்தவிடம் சிறப்பொன்றில்லை
மறித்துசெல்லல் மனைபாழா மன்னியதேச
மாறிவிடு மென்றுரைப்பர் வண்மையீதே. 18
பெலத்தகும்ப முதலோரை ஜனிப்பாராகில்

பெலன்வடகீழ் கங்கையது யருகில்நிற்கும்
வலுத்ததென்பா லாலயங்கள் பிதுராதீன
மதிலிரண்டு விடமென்ப ரன்னியர்பூமி
தலத்தினிலே விருபிரிவாம் பூமிதன்னில்
தந்தையதில் விர்த்தியென சாற்றக்கேளு
சொலத்தகுங்கா ணிவ்விதமாய் நிலைகளாகில்
சூழ்ந்தகும்ப முதலோரைச் சொல்வதென்னே. 19
சொல்லக்கேள் தந்தைக்குத் தந்தைமூவர்
சூழ்புவியி லதிலொருவர்த் தனித்துநிற்பார்
வெல்வதுகாண் தந்தை காலத்திலைந்து
மிக்கவிர்த்தி யதில்மூன்று மீதிப்பெண்பால்
அல்லலிலை யதிலொருவ ரறிதல்பெண்பால்
அதில்மணமா மன்னியர்க்கு வரிந்தக்கர்மம்
தொல்யில்லை சுயார்ச்சிதங்கள் பூமியெல்லாஞ்
சொந்தமென வனுபவிப்பன் சொல்வர்களத்திரத்தால். 20

## வேறு

பாவி காண் ஜன்மத்ததிபதிகோணம் பற்றிய பார்வை யிருக்க
மேவியவாயுள் தீர்க்கமாமறுபான் மிக்கமூன் றாண்டினிற்கண்டம்
சாவியப்பிதுர்கள் பூர்வீகமெல்லாந் தரைமிசை விரயமேசெய்து
நாவினால்ஜயங்க ளடைந்துபின்செல்வம் நவிலுவாயரசர்சன்மானே. 21

## வேறு

அறிதலன்னை வர்க்காதி யாண்பால்மூன்று வொன்றன்னியம்
தெரிதலம்மா னதிலேகன் சிறந்தகீழ்மேல் வீதியதாம்
குரியச்சந்து கீழ்மேலாங் குணமாயிரண்டு நிலைபூர்வம்
அறிதலிவ்வாறு பலனென்றி யறைந்தார் நந்தீஸ்வரர்வேந்தே. 22

## வேறு

சிறந்திடுங்கும்பமுதலோரைதன்னில் ஜெனிப்பதுநிறஞ்சிகப்புளதாம்
அறிந்திடும் ரூபஞ் சமனதாந்துடையி லதிற்வலப் பக்கமேமச்சம்
தெரிந்திடுமைந்தாமாண்டினிற்கண்டம்சிறந்ததொன்பானாண்டினிற்றந்தை
புரிந்திடுமரணமாதீனபேதம் புகழன்னியர்நிலையார்ச்சிதமே. 23
நாடியமிரண்டா மதிபதிலாபம் நன்மையாம் பார்வையங்கிருக்க
தேடியவாக்கு வித்தையுமுளனாஞ் சிறந்திடுந் தந்தைக்குமேலாய்
கூடியயோகம் மன்னர்கள்சினேகங் குடும்பத்திற் சுகமுளனென்க
நீடியவுறுதி வாக்குடையவன்காண் நிலையிருவித்தையா மோதே. 24

## வேறு

தருமூன்றா மாதிபதி சசிக்குமூன்றாதி
தரும்பலன்கேள் சகோதரங்கள் தகுபஞ்சமங்காண்
பெருகுமிதில் விர்த்தியது திருதியமேயாகும்
பெரும்பெண்பா லதிலிரண்டு பெலனொன்றுச்செல்வம்
வருகுமிவ்வாறாளடிமையுடன் விர்த்திச்செல்வம்
மகிழ்ச்சியுடன் வீரபராக்கிரமு மிகவுண்டாம்
பருவமுடன் கர்ணபூஷணங்களுடன் மிக்கப்
பாக்கியங்களும் பெறுவன்பாரில் மிகத்தானே. 25

## வேறு

புகலுவர்நான்காமாதியின் பலன்கேள் பொருந்தியவன்னையுமிருபான்
ஜெகமதிலொன்று மாரககண்டம் செப்புவாரன்னை ரோகங்காண்
சுகமதுவிர்த்தி வாகனமுள்ளாள் சுபார்ச்சிதப் பூமியுமுள்ளாள்
பகலவன்சப்த மாதியேயாகப் படிந்ததால் பாக்கியமுளனே. 26

## வேறு

கொள்ளுமைந்தா மாதிபலன் கூறக்கேணீ மதிக்கைந்தோன்
தள்ளும்பாவிப் பார்வையதில் சார்ந்தங்கிருக்க யதிலம்மான்
செல்வமுண்டா முடன்விரயம் சிலந்தேயிருப்பன் பிற்பலன்காண்
சொல்லுஞ்சுயார்ச்சித நிலையுண்டாம் சொல்லுமம்மான் சுகமுளனே. 27
இந்துக்காறுக்காறாதி யிடராம் பாவிகள் பார்வை
வந்துவிருக்கச் சத்துருக்கள் வலுவேயுண்டா முடநாசம்
பந்துவிற்கலகம் விரயமெனப் பாவைவழியிற் சத்ருக்கள்
சொந்தமாகத் தான்வந்து சூழ்ந்தகொடுமை ஜயிப்பானே. 28
பலன்களுரைப்போ மேழாதி பலன்கேள் களத்திரமொன்றாகும்
தலந்தனி லன்னியதேசம் தனித்தமனைகாண் தென்வடலாய்த்
துலங்கும் வீதி தனில் வீடுச் சொல்லுங்களத்திரத் தந்தையவர்
பெலன்காண்மூன்றுவிர்த்தி ரெண்டுப்பெருமையுடைய நிலையன்னே. 29

## வேறு

திரமுபய மெட்டிடமா யதற்கெட்டு சரமாய்ச்
சிறந்த பாக்கியத்ததிபன் திறமையொடு பார்வை
பரவிநிற்க விதற்காயுள் தீர்க்கமென வோதும்
பலனைந்து பாக்கியவா னாண்டதிற்கண்டம்
கரமுடையக் கண்டமதுப் பதின்மூன்றி லுண்டாங்
கன்னியரா லிருபத்தி நான்கதிலோர் கண்டம்

தரைமிசை யிவ்விதப்பலன்க ளட்டமத்தாலறிந்துத்
தயங்கிடா திப்பலனை சாற்றுவர் ஜாதகற்கே. 30

## வேறு

அடுத்தபாக்யாதியதற் கொன்பான்புந்தி யரசனால்பார்வை யங்குறினும்
தடுத்திடாச்செல்வம் விதுர்க்குமேல்விர்த்தி சஞ்சலமத்தியி லுளனாம்
கொடுத்தவந்தியத்தி லதிகநற்சுகங்கள் குடும்பங்கள் விர்த்தியாமென்க
எடுத்துரைத்திடுதல் பிதுர்க்குமாரகங்க ளிருபதிற்கண்டம முப்பதுவே. 31
இன்பமாய்பிதுர்க்குவிதில் மொத்தமுரைத்தாலிடரிதுந் தந்தையின்பலனில்
துன்பமெவ்விதங்காண் சுகமதிலெவ்வாறு தொகைமொத்தப் பலனிதிலொப்போன்
அன்பொடுவைந்தா மாதியாறாதி யதற்கைந்தா மாதியின் பார்வை
தென்பொடுநிற்க விதற்காரிள்செல்வம் சிறந்திடநிலையெவ்வாறு சொல்லும். 32
சொல்வதுயரசே சுபரைந்தமாதி சுகமொடு பாக்கியத்ததிபன்
வெல்வதுபார்வை மிகுத்திடவேந்தர் மிகுசெல்வமடைவதுதந்தை
அல்லலொன்றில்லை யாதிற்செல்வ மாறைந்து வாண்டினிற்றாழ்வாம்
தொல்லையாம் ருணங்கள் பூமியும் விரயம் சுகம்பின்னால் விர்த்தியங்குளதே33
விர்த்தியாம்தென்கீழாதீனமகரம் விளங்கிடும் திசைசுயார்ச்சிதமாம்
பத்தியால்மேல்பா லாலயமதற்குப் பலன்வடதிசைதனில் கங்கை
சுற்றிலும் விருக்ஷம் கீழ்பக்கமறையோர் சூழ்ந்திடுமனையரு கிருப்பன்
இத்திசைதன்னை விட்டுமே நீங்கி யிடர்துன்பமடைந்து பின் செல்வன். 34
மேவியப்பத்தா மாதியின்பலன்கேள் மிகுமாறுபின்னெட்டுக் கர்மம்
தாவியததனால் பூமியால்விர்த்தித் தழைத்திடும் வாலிபமதனால்
பாபிகள்பார்வையிருக்கிலும் நன்மைப் பலன்றன்னைவிர்த்தியாய்க்கொடுப்பர்
தூபியதன்னிய தேசசஞ்சாரம் சொல்வது ஜாதகற்கிதுவே. 35
நலந்தரும்லாபத் ததிபதிபலன்கேள் நாடியதிசை வடகீழ்பால்
தலமதில்செல்வ லாபமங்குண்டாம் சாற்றியமேல்திசை லாபம்
நிலந்தன்னாலன்னியர் நிலையினால்விர்த்தி நின்றிடுந்தொழில் கேதுதன்னால்
பெலன்தருமவிழ்த மணிமந்திரத்தால் பெருகியத்தொழில் லாபமென்னே. 36

## வேறு

கொண்டலாப மதிற்றொழிலைக் குறித்தநிலைக ளெவ்விதங்காண்
கண்டநிலைக ளிதில்விவரங் காட்டும் நிலைகள் கணிதமிதில்
உண்டாந்திரத்தோ ருபயத்து ளோங்கிநிற்கும் பலனதுவால்
விண்டார்மன்னன் றனுவிருந்து மிக்கமேடப் பார்வைனால். 37
சேர்ந்தவிரயத் ததிபன்காண் ஜன்மத்தோனாய்ச் சிறந்துபயம்

சார்ந்தேவிருக்க சுபவிரயம் சாற்றும் சுபர்கள் பார்வையுறில்
சேர்ந்தகோவி லாலயமும் சிறந்தமனைக ளுண்டென்று
தேர்ந்தேயுரைத்தார் நந்தீசர் திறமையாக விப்பலனே. 38

*கும்ப முதலோரையின்பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## கும்ப மிரண்டாமோரையின் பலன்

குடமதிலிரண்டா மோரையின்பலன்கேள் கூரியவீதி கீழ்மேலாம்
திடமுடன்தெற்கு முகப்பெனலாகுந் தென்பக்க மெதிரினிற்சந்து
இடமதிலெதிரி லிருமனைப்பாழ மிருக்க மேற்றிசைத்தாழ்வு
உடனதுபூர்வப் பேதமாயிருப்பா னுடனம்மான் வீடெனலாமே. 39
நிறையதாங்கும்ப மிரண்டாவதோரை நிதியுடன் ஜனித்தஜாதகற்கு
உறமுளச்செல்வன் தந்தைக்குத்தந்தை உணர்வொடுசுகமது வில்லான்
கறமுளதந்தைப் பிறந்தபின் செல்வம் கபடிலான் தந்தைபின் சுகவான்
அறமுளன்றந்தைத் தனக்கதிகார மடைவனென்றுரைத்திடுமரசே. 40
பொருந்தியத்தந்தை வர்க்காதிமூவர் பூரணவிர்த்திகா ணிரண்டு
திருந்தியத்தந்தை காலத்திலிரண்டு திரமொன்று விர்த்தியாஞ்செல்வம்
வருந்தியப்பூவி லரசர்கள்பேட்டி மன்னர்க்குச் சமானமாந்தந்தை
தெரிந்துமிப்பலன் கானாதீனமில்லைச் சிறந்திடும் பிதுர்களால்நிலையே. 41
முன்னமேபிதுர்க்குச் சுகமிலைப்பிதுர்க்கு முடிவதாங் கர்ப்பத்திலுறுநாள்
உன்னியசுகங்க ளிதுயுந்திதன்னா லுறும்தொழில் விர்த்தியாமென்க
கன்னியின்றிசையிற் சுயார்ச்சிதநிலைகள் கன்னியால் விர்த்தியாமென்க
மின்னியவுமையாள் கிருபையுண்டாகி விளங்கியேயிருப்ப னென்பதுவே. 42

### வேறு

ஒன்றேயம்மான் வர்க்கமது உறுதிகாணும் சகோதரங்கள்
நன்றேயைந்து நலமொன்று நாடுங்கீர்த்தி செல்வீகம்
சென்றநாளில் பலன்மேலாம் சிறப்பொன்றில்லை பிற்பலனாம்
நின்றே செல்வம் ஜாதகற்கு நேருங்காலம் சுகமென்னே. 43
சுகங்களம்மான் பூர்வீகம் சொல்வதிரண்டு நிலையதனில்
சுகங்காணதிலே கீழ்மேலாம் தரும்பின்னருகிற் சந்துண்டாம்
அகங்காண்வடபால் மனையுண்டா மதற்குவெதிரிற் சந்துண்டாம்
சிகங்காண்பின்னே யிருமனைகள் சிறந்தசெல்வம் போல்யோகம். 44
யோகமுண்டாஞ் ஜாதகற்கு வுண்மையுரைக்கப் பலன்கேளாய்
பாகம்கர்ப்பமதிற்செல்வம் பற்றி ஜனித்தப் பாலனென்பர்

சோகமில்லைத் துணிவரசர் சூழுங்கீர்த்தி மானாவன்
தேகந்திடவான் நிறஞ்சமனாம் தெய்வசகாய முள்ளவனே. 45
வயதேயறித லதிலறுபான் வருமேமூன்று வயதிருப்பன்
சுயமாஞ்செல்வம் வாலிபத்திற் சுகங்களனுபவ மனுபவிப்பான்காண்
நயமாங்குடும்ப மதில்கீர்த்தி நாட்டிலனைவோர் தான்வேண்ட
பயமொன்றில்லை யரசனெனப் பாரிலிருப்பன் பலனிதுவே. 46
தேனேதனத்தோன் பலனறிதல் சிறந்தவித்தை யிருவிதமாம்
ஊனமில்லை தனலாபம் உறுதிப்பூமி தனில்கிடைக்கும்
தானேயன்னிய தேசமதில் சஞ்சாரங்கள் தொழிலதனால்
மீனாதிபனாற் பார்வையதில் விரும்பப்பலன்க ளிவ்விதமே. 47
மூன்றிலுபய மதுமூன்று முறுதிலாப முபயமதால்
தோன்றுமிதனால் சகோதரங்கள் சொல்வரைந்து விர்த்தியிரண்டு
சேர்ந்தவர்க்கந் தனில்மூன்று சிறந்தேயிருப்பர் சகோதரங்கள்
கூர்ந்திவ்விதமாய் பலனுரைத்தார் கூறும் நந்தீஸ்வரர் வாக்கே. 48

## வேறு

தெரிந்திடநான் காமாதி பதிபலன்கேள் தீர்க்கநல்லாயுள் வன்னையர்க்குப்
பொருந்தியமனைகள் கட்டடம் விர்த்திப் பூமிகள்நூதன விருத்தி
தெரிந்துமிவ்விதங் காணலாபம் சிறந்ததேவாலய விர்த்தி
வருந்திடாதிருப் பன்மாகனஞ் சிறம்பாமரசர்கள் பேட்டியுமுளனே. 49
ஐந்தினுக்கைந் தோன் மதிதனக்கைந்தோன் ஆறாதிசகிதமங்கிருக்க
முந்தியத்தலமே நிலையதாமம்மான் முன்சுகமில்லைப் பின்சுகமாம்
சந்ததியில்லை யென்றுரைப்பதுகாண் தக்கமன்னவர் நட்புளனாம்
சொந்தமாம் சுயார்ச்சித விர்த்தியுமுளனாய் சுகமுடனிருப்பனென்றோதும் 50
வீதிதென்வடலாய்மேல்பக்கமனைகள் விரும்புவன்கேள் மூன்றிடத்தில்
நீதியாயம்மான் குடும்பங்கள் விர்த்தி நிலையுளச்செல்வீகனென்க
பாதிநாள்செல்வ மத்தியிற்பேதம் பலனன்னிய தேசசஞ்சாரம்
ஞாதிகள்சூழவனு பவித்திருப்பன் நல்வித்தைநல முளனென்னே. 51
புந்திவீடைந்துக் கட்டமத்ததிபன் பொருந்திய பார்வையங்கிருக்க
நிந்தையாம்புதல்வர் பாலாந்திரத்தால் நிலைப்பதும் பிரதமைவிர்த்தி
மந்தனும்பாம்பும் பார்வையும் பாவி மன்னவற்பார்வையங்குறினும்
விந்தையாம் செல்வ னதிகாரத்தன்மை மிகுமிசையுடையன்காண்புத்ரன் 52
மேவியவாறோன் பாபிகளோடு மிக்ககோணந் தனிலிருக்கத்
தாவியச்சத்துரு யில்லைகாண்ருணங்கள் சஞ்சலமுண்டதில்கீர்த்தி
மேவியேநிற்கும் ருணத்தினால்மாறல் மிகுவேந்தர்நட் பெனலாகும்

கோவினாற்கண்டம் பனிரெண்டாம்வயதில் ருணமுடன்சௌக்கியப்படுமே. 53
உண்மைகேலாழ மாதியின்பலன்கள் உறுதியாங் களத்திரமேகம்
தண்மைநற்குணத்தாள் பாக்கியமுமுள்ளாள் தனவதிவாக்குநன்மையுமாம்
வன்மையாய்ப்பெண்பால்வரும்நிலைகீழ்மேல் வடபக்கமனையெனவுரைக்கும்
தின்னமாய் தென்மே லாலயங்கீழ்பால் சிறந்திடுங் கங்கையங்குளதே. 54

## வேறு

கருதும்வயது விருபதின்மேல் கனிதமூன்றா மாண்டதனிற்
உருவமுளதாய்த் திருமணமுமுடிப்பனுண்மையிதுணர்வாய்
பருதிமதிக்குப் பாக்கியமாய்ப் பாவர்பார்வை யதில்வருங்கால்
திருதியத்தோ னிதிலந்தரம் சேர்ந்தகாலம் சுகமென்னே. 55

## வேறு

கண்டவெட்டாதிசரத்தினிற்பார்வை கலந்திடிற் கண்ட மேழாண்டில்
உண்டெனும்பத்து விருபத்தல்லாது வுறுதியேழாண்டினிற்கண்டம்
மிண்டியரோகமொன்றுளதரசே மேதினிதனில் மன்னர்பகைகள்
அண்டிடாதிதற்குத்தீர்க்க செல்வீக மடைதல் காணட்டமப்பலனே. 56

## வேறு

நலந்தருமொன் பான்பலனகைப் பார்க்கில்
நன்மையாம் பிதுர்த்தோழில் தன்னால்
பெலன்தருஞ் செல்வம் நாளுக்கு நாள்காண்
பெருகியக் கீர்த்தியா முலகில்
குலந்தனில் சிரேஷ்டன் கூறுமன்னவரால்
குணம் பொருளதிக விர்த்தியனாம்
தலந்தனில்சுபங்கள் தரைமிசையரசர்
சார்ந்திடச் செல்வமுள்ளவனே. 57
கண்டுரைப்பகர் மாதிபலன் கேள்பூமி
கதித்ததொழில் வியாபாரம் கருதுங்கங்கைக்
கொண்டபொருள் லாபமதில் பலபேர்க்கூட்டம்
கூறுமதிகாரத்திற்குணந் தொழிலேகாட்டும்
அண்டியதோர் தந்தைக்கு மாரகங்கள்புவியி
லறிதலிருபத் தேழாமாண் டதனிற்கர்மம்
தொண்டர்கள்சூழ் மடந்தேவாலய மிவைகள்மூலம்
சொல்தர்மவிஷயமதிற் சுகவிரயமென்றே. 58

## வேறு

வல்லதோர் லாபத்ததிபதி பலன்கேள் வருந்தொழில்தனிற் பங்குலாபம்

செல்வமாம் புவியோர் போற்றிடுங்கீர்த்திச் சிறந்திடும் லாபமேயாகும்
நல்லவர்கூட்டம் நயமதில் விரயம் நாடியக்குணங்களு முண்டாம்
கொல்வதுவந்தியகாலத்தில் நன்மைக் குணமதாய் சிந்தைமாரகமே. 59

*கும்ப மிரண்டாமோரையின் பலன் முற்றிற்று*

* * *

## கும்ப மூன்றாமோரையின் பலன்

நிறைந்தகும்ப மூன்றாவதோரை தன்னி
நிலைபிரிவு மூன்றாகும் நிலைகேளின்னம்
குறைந்திடுங்காண் வடதெற்கு வீதிதனில் வீடு
கூறுவது விருபக்க மனையும்பாழாம்
நிறைந்திடுங்கா ணெதிர்த்தமனை நிலையாஞ்செல்வம்
நீடித்த மனையிருவர் பாகமாகும்
அறைந்துவிடு மாதீனன் தனக்குமூன்றாய்
அமர்ந்தவிட மென்றுரைப்ப ரவனிமீதே. 60

### வேறு

அறிவது கும்ப மூன்றாவதோரை யாக்கினை திசைதனிற் கங்கை
நிறையுமே தென்பாலா லயமிரண்டு நிருதியின் திக்கதிற் கால்வாய்
தரைமிசைப்பூர்வமிரண்டிடந்தந்தை சாற்றுவர்ப்பிதுர்ப்பிரதமனாம்
நறைவதுவம்மான் குடும்பங்களிரண்டு நிலையுளச்செல்வமாமென்றே. 61
நலிவதுவெட்டாமதிபதியரசே நலமிலாப்பாவிகள்சகிதம்
அலிவதாம்புதல்வனாண்டதுவொன்று வதற்கு மேல்மாதமொன்றில்லை
மெலிவதுகண்டம் தீர்க்கமதில்லை வேந்தர்கள் பகைபிதுர்க்குண்டாம்
வலியதாம்பொருள்கள் பூமியும்விரயம் வந்திடுமிவ்விதப்பலனே. 62

### வேறு

கும்பததின் மூன்றாமோரைக் குறித்திடும் பாலனுக்கு
கும்பத்தில் சனியும்செவ்வாய் கூடியே நிற்பாராகில்
தம்பித்த மாதம்பததில் தரைமிசை மாள்வானன்றோ
பம்பித்தே னொழுகுந்தாராய் பாவைமுன் பிறந்தோர்வீதி 63
மரித்திடும் வடதென்வீதி மன்னியக் கீழ்மேல்சந்தில்
திருதியக் கர்ப்பஞ்சின்னம் திரேமேகப் பெண்ணேயாகும்
வருந்தியப் பிதுருமாதுர் வருமுடன் பிறப்பிவ்வாறு
தருமிதில் சுகங்களீனத் தந்தையால் சுகமும் பாழே. 64

### வேறு

மதிக்குமூன்றினில் மன்னவ னாக்ஷியாய்
விதிக்குங் காலத்திற் விந்தையாந் தனக்கு
பதியை விட்டுகேள் பாலகனு மேங்கிக்
கதியைச் செல்லுங் கணக்கிது வாகுமே. 65

*கும்ப மூன்றாமோரையின்பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## கும்ப நான்காமோரையின் பலன்

கண்டாய்கும்பம் நான்காமோரைக் கருதும்ஜனித்த ஜாதகற்கு
உண்டாம்வீதிக் கீழ்மேலாமோதும் வடபபால் முகப்புளதாங்
கொண்டமனையோ சதுரமில்லைக் கூறுமெதிரில் மனைபாழாந்
துண்டாயிரண்டு பக்கமதிற் சூழ்ந்தமனைகள் சுயார்ச்சிதமே. 66

### வேறு

கூறினர்கும்பம் நான்காவதோரைக் குணமுடன் ஜனித்தஜாதகற்கு
தேரினர் திரத்தால் சரமதுதீர்க்கம் தீர்க்காயுள் வீதிகள்கேட்கில்
உரமதுகீழ்மே லருகினிற்சந்து வோதுவர்ப்பிரிவு மூன்றுளதாம்
கரமதுவிருபால் மனையதுவருமாங் கருதுவர் நிலைபேதமென்றே. 67

### வேறு

பெருகியதோர்ப் பிதுர்வர்க்க முன்னாலைந்து
பெலன்றந்தைக் காலமதிற் பிரிவுகொண்டு
வருந்தந்தை காணேகன் பாகமீனம்
வரும்பாக முன்னியர்க்கு மாறிப்போகும்
தரும்பின்னா லதிற்மூன்றி லொன்றுபாரில்
தலைமையாகிநிற்பர்காண் தலத்தின்மீது
உறுமிவ்வாறு பலனெல்லாமறிந்தேகும்ப
வோரைதனிற் ஜனித்தோர்க்கு வுரைப்பர்தாமே. 68
கூர்வதுகேளதிலரசே பத்தாமாதிக்
கோளதுகாண் ரெண்டாதிக் குணத்தைச்சொல்வோம்
நேரம்மான் வர்க்காதி நிலைரெண்டாகும்
நிலைபேத மாகிநிற்பர் நிலையொன்றில்லை
வருமிதிலோர் நிலையொன்று பெண்பால்மூலம்
மகிழ்ச்சிதனம் பூமிபொருள் வரும்போலெண்ணம்
தரும் ஜாதகற் கிவ்வாறெண்ண மல்லால்

தருகபொருள்கள் தானில்லை தனித்தங்கோவே. 69

## வேறு

பெலமொடு ஜாதகர்க்கும் பெருகியப்பலன்கள் சொல்வோம்
தலமதிற் பனிரெண்டாண்டிற் றந்தைவர்க்கத்தில் கர்மம்
குலமது விளங்கமேன்மைக் கூறுவர் பிதுர்க்குச்செல்வம்
பெலமதா மிருபதாண்டிற் பலனன்னிய வித்தைகற்பன். 70
வித்தையாலிருபத்தைந்தில் மிகுசெல்வ மடைவரென்க
சித்திதான் பொருளுங்கூடும் ஜெகந்தனில் முப்பத்தைந்திற்
உத்தமப் பலன்கள்தன்னா லோதுவர் தலபேதங்கள்
சுத்தமா மப்பாலைந்திற் சொல்லிதில் பேதமென்னே. 71

## வேறு

சிறந்திடுங்கும்பம் நான்காவதோரை ஜெனித்த ஜாதகற்கு பலன்கேள்
நிறம்பொதுவாகும் ரூபமேசமனாம் நிறைவித்தை புத்தியுமுளனாம்
மறைந்திடாத்தொழில்காண் மன்னவர்கள் பேட்டிவரும் வித்தைமூவிதமென்க
வரந்தனிலெண்ண மல்லாது வேறு வருங்கலகங்களால் பேதம். 72
பேதமெவ்விதங்காண் தனத்தாதிகுருவாய் பெருகிய நீலற்குச்சமனாய்
ஈதலாபாதியா னதிலாலு மிடரதிலெவ்வித முரைத்தீர்
சூதிதிலில்லை யரசனே கேளாய் சொல்தனத்திற்குக் கர்மாதி
வேதியன்றனக்கும் புந்திக்கும் பார்வை மிகுசரந்திர மாகநிற்பர். 73
நிற்பதல்லால் பலன்கேள் நேசமாயரசே நின்றதிவ்விதத் தொழில்தன்னில்
உற்பவமுற்று மதிகாரச்செல்வ வுறுதிமத்தியந் தனிற்பேதம்
சிற்பமாந்தொழிலே வியாபாரமதனால் சிறப்பில்லை விரயமங்குளதாம்
கற்பனத்தொழில்காண் காரியாலலைதல் கலகமிவ்விதத்தாலென்றுரைக்கும். 74

## வேறு

ஓதுமிதிற் பலன்கேளாய் வோரிருப தாண்டுக்
குடன்மூன்று வாண்டதனி லூறுமணமாமென்க
தோதுமிதிற் களத்திரந்தான் சொல்லுவதுமிரண்டு
துடர்ச்சிசுபந் தான்முடியும் றுணையொன்றுவீனம்
சூதிதிலொன்றுமிலைகாண் சொல்வதுகேள் களத்திரம்
சுகநாற்ப தாண்டலல்லாற் றுணையேகமாண்டிற்
நீதியதாங்களத்திர கர்மபாலோ ரெண்மை
நிலையாகச் செல்வமிதில் நிலைபேதமென்னே 75
பேதமில்லை யிரண்டாண்டு முன்பின்னும் பேதம்

பெலன்பொருள்கள்நஷ்டமுடன்பெருமித்திராள்பகையாம்
சோதிமதிக் கைந்தாதிஜென்மத் தைந்தாதி
சுக்ரற்கு வைந்தாதிசுக லாபாதி
வேதியனால் பலனென்றீர் பின்னெவ்வாறோது
மிகுத்தரசே புத்திரனால் மிகுசெல்வ மடைவன்
ஆதியினாதனாதியென்றீ ரெவ்விதங்காண் பலன்க
ளதில்வித்தை ஜாதகற்கு வதிற்சுகமுண்டென்னே. 76
சுகமூன்றாமிடப்பலன்கேள் சகோதரங்களைந்து
சூழ்ந்தநிலையிரண் டொன்றுச் சொல்லிடுவரீனம்
ஜெகந்தனிலே பெண்சகோதரங்கள் மூன்றில்
சாற்றிடுவா யிரண்டுவிர்த்தி யொன்றுசெல்வம்
அகம்நிலைகள் தானீன மன்னியதேசங்கள்
அலைந்துநிற்பர் தத்துபுத்திரன்போல் செல்வம்
புகலுமிவ்வாறு பலனறிந்து மூன்றாந்தானம்
பொருந்திய செவ்வாய்நிலையைப் புகழ்ந்துகூறே. 77

## வேறு

நாலுக்காதிபதி நான்கோர்நலம் காண்மதிக்கு நான்காதி
மேலுக்கிவர்கள் கேந்திரங்கள் மிகுத்தவிச்ச மாக்ஷியெனில்
நீலன்றனக்குப் பாவிகளும் நிறைந்தபாவிப் பார்வையதில்
தாலவிருக்குந் தந்தைசுகம் தான்பின்னன்னை சுகம்போமே. 78
போகும்வயதுவீரெழிற் புகர்காணாண்டைதான்சேர்க்க
சாகுமிரவிதான் பாதித்தனித்தவாண்டிற் மாரகங்கள்
பாகுங்கலந்த தேன்மொழியாள் பற்றி சுகங்கள் ஜாதகற்கு
விவேகமுள்ள வன்னையென மிகுதிப்பலன்களெடுத்துரையே. 79

## வேறு

நிறைந்திடு மதிக்கைந்தாதி நிலைசர மைந்தாமாதி
உறைந்திடுஞ் ஜென்மத்தைந்தோ ருறுதிகேளதற் கைந்தாதி
மறைந்திடா திருக்கப்பார்வை வலுவுடன சுபர்களோடு
குறைந்திடாப் பார்வையாகில் கூறுவர் புத்திராளைந்தே. 80
ஐந்தெனும் விர்த்திதன்னி லாபவிர்த்தி யிரண்டுமுன்போம்
சந்த்தி விர்த்திமூன்றுத் தரணியிலுபயம்நிற்கும்
முந்தியே விர்த்திரெண்டு முறுவீன முன்னுஞ்செல்வம்
சிந்தையி விதிலும்பேதந் திரமில்லைப் பிரிவுசொல்லும். 81

பிரிவிதில் கேளாய்மன்னா பெலன்மூன்றோ னதற்குமூன்றோன்
நெரியுட னேகனாகும் நிலைதனில் தத்துபுத்திரன்
குரியதா மற்றிரண்டிற் கூறுவர் செல்வன்மூன்றாம்
பாரினிற் யோகவானாய்ப் பலன்தொழில் பேதமாமே. 82
தொழிலதுப் பிரித்துக்கேட்கில் சொல்வது வைந்திறகேபின்
பழுதில்லை யரசராலும் பாக்கியம் ரெட்டிப்பாகும்
அழிவில்லை செல்வங்கீர்த்தி யாறைந்து வாண்டுக்கப்பால்
வழிவிலா பதினைந்தாண்டில் வருஞ்செல்வம் புத்திரருக்கே. 83
புத்திரர் மற்றோர்க்கெல்லாம் பொருந்தியத் தொழில்வியாபாரம்
சித்திரஞ் சிறப்புப் போலச் சிறந்திடும் தொழிலால் செல்வம்
குத்திர மில்லாமற்றான் கூடியே புத்திராள்செல்வம்
மத்தியிலே கண்றானும் வரும்பேதம் பின்னாலென்னே. 84
பேதமாய் நீலன்புந்திப் பெருகுமாண்டுடனே வெய்யோன்
நீதியாய்ச் சேர்க்கவாண்டு நிலைபுத்திரன் முன்னோனுக்கு
ஓதினரி தில்பாதிக்கு வொருகர்மம் தத்துபுத்திரன்
பேதமில்லாமற் பெண்பால் பெருகிய நிலையிற்செல்வன். 85
செல்வமும் பின்னாலல்லால் திரமத்தியம் பிரிவொன்றில்லை
வெல்வது சகோதரங்கள் மிகுசத்துரு பகையாவார்கள்
கல்ல லொன்றில்லை பூமிக்கனதனந் தானபேதம்
அல்ல லொன்றில்லாமற் பின்னறிவுடன் நிலையில்நிற்பார். 86

## வேறு

துணிவதா மானாமாதியின் பலன்கேள் சொல்வது வாருக்காறாதி
தணிவதாஞ் சுபர்கள் பார்வையேயாகில் தரணியில் ருணத்தினாலலைவன்
பிணியதி லில்லை மதிகுருபிருகுப் பெலமொடு சரந்திரமாக
அணிவதாமு பயமாகிடில் ருணங்க ளற்பமாமதி செல்வனாமே. 87
கண்டுரைப்பது கேளாழாதிப் பலன்கள் களத்திரமொன்றது நிலைகாண்
தொண்டெனும் வீதிக்கீழ்மேலா மெதிரில் சொல்வ தென்வடல்சந்து
கொண்டதோரவ்வாறு நிலைதனில்வீடுக் குறிப்புடனிரு மனையொன்றாம்
மிண்டியத்தந்தை வர்க்கமூவர் விர்த்தியி லிரண்டெனலாமே. 88

## வேறு

மீறிய சகோதரங்கள் மிகவைந்து விர்த்திரெண்டாம்
தேரிய தாண்பாலேகன் சிறப்பொடு நிலையுண்டாகும்
பாரினில் நிலையும் பின்னால் பலன் விர்த்தியென்க

நேரினில் ஜாதகற்குநிலை யைம்பதாண்டிற்செல்வம். 89

## வேறு

எட்டினுக்கதிபர் சரந்திரமாக யெட்டினுக் கெட்டாமாதியோடு
திட்டமாய்ப் பார்வைக் கூடியேயிருக்கில் தீர்க்காயு ளறுபதல்லாது
கெட்டிடாதாண்டுப்பத்தொன்பதல்லால் கெணிதங்காண் மூன்றினைசேர்க்க
அட்டியொன்றில்லை யாயுளிவ்விதங்கா ணறிந்திவ்வாறு நிலைதனையோதே 90

## வேறு

கருதிய தட்டமாதிக் கனபாவரோடு வாறோன்
பருதியின் பார்வையங்குப்பலமொடு நிற்கக்கண்டம்
சுருதிகாண் மொழிதப்பாது சொல்வது மேறிழ்கண்டம்
விரிவதி லில்லையொன்பான் மிகுப்பதிமூன்றிற் றுன்பம். 91

## வேறு

ஒன்பதாமாதி யேழினிற்பார்வை யுறுதிகாண் சகிதமாகிடினும்
அன்பொடுதந்தை பொருளெல்லாமூவர்க் காகுமென் றோதுவர்நிலையே
தென்பொடுபூர்வம் நிலையிரண்டிடமாஞ் சேர்ந்தொரு நிலைதனிற்செல்வம்
கென்பதிவ்விதமாய் நிலைதந்தைக்கீர்த்தி நீடியப்பலனிவ்வாறு நிகத்தே. 92
வாதலில்லை மன்னனேகேளு மாறெட்டி லீதாறிலொன்பான்
பேதியாதிருக்க ருணத்தினால் பொருளும் பெலபொடும் பூமியும்நஷ்டம்
நீதியாய்த்தந்தை தேடிடும்பொருள்கள் நிலைபுதல்வன் றனக்கில்லை
மாதுகள்விர்த்தியது தன்னால்சுகங்கள் வந்திடும் ஜாதகற்கிதுவே. 93
மன்னனேவொன்பா னதற்குமே மூன்றால் வரும்பிருகுக் கிவர்சத்துரு
வின்னமேயிதனா லதிலிருபாகம் விரும்புவனதி லொருவன்காண்
உன்னியதந்தைப் பூமியும்பொருளு முறுமன்னியர்க்காகவேமாறும்
வின்னமேபின்னால் மாறியும் நிலையால் விருப்பமங்கிருப்பது நிலையே. 94

## வேறு

ஜென்மாதி யட்டமாதிச் சேர்ந்திட வேழாமாதி
கன்மதானத்தில் நிற்கற் கணிதமாம் பலன்கள்சொல்லும்
ஜென்மித்த வயதீதாறில் சேதமா மீன்றதந்தை
வன்மித்த பிதாவினோடு வந்திடுமாண்கள் மூன்றே. 95
குடும்பத்தை நீசன்பார்க்கக் குணமில்லை வித்தையற்பம்
தடுத்திடுக் குடும்பபேதம் தையலர் விவாகமில்லை
கொடுப்பது வக்கினிமூலங் கொடுந்தொழில் வடிசலென்பர்
விடுப்பது நாற்பானாண்டிற் மேல்விழித் தாயுஞ்சாமே. 96

சாவது சகோதரங்கள் தனக்குப்பின் னிரண்டேயாகும்
போவதுப் பூமியற்பம் பொருந்தியப் பொருளுமற்பம்
ஆவதுத் தாயின்பாகமது ஆதியாகு மல்லால்
மேவிய சுயார்ச்சிதங்க ளில்லையென் றுரைப்பர்தாமே. 97
நாலாதி யைந்தாமாதி நலம்பெறக் கூடிநான்கில்
மேலாக பாவிபார்வை மிகுந்திடப் பலன்கள்சொல்வோம்
கீலகமாதர் வர்க்கம் கிளையதிலேகன் விர்த்தி
சாலவிக் குடும்பந்தன்னை சார்ந்துமே யிருப்பன்றானே. 98
மூன்றாதி யிரவியோடு மூரியே வைந்தில்நிற்க
ஜென்மாதி சுபருங்கூடிச் சேர்ந்திடப் பாவர்பார்வை
முன்னமே ஜேட்டனேகன் முறையுடன் பெண்ணிரண்டாம்
தன்மமே யுடையத்தந்தைத் தக்கவனேகனாமே. 99

*கும்பலக்கின நான்கு ஒரைக்கும் செய்யுள் - 99*

*முன்லக்கினம் 9-க்கு செய்யுள் - 790*

*ஆக மொத்தம் செய்யுள் - 889*

*கும்பலக்கின பலன்கள் முற்றிற்று*

* * *

# மீனோதயம்

மீனலக் கினமேமாகில் மேற்கது கிழக்குவாசல்
தானது வடக்குவாசந் தடாகமும் கீழ்மேல்வீடு
தானதுவடக்குகோவில் தகமையாய்த் தோப்புமுண்டு
கானகம் சூழ்ந்திருக்கும் காண்கடைத் தெருவுமுண்டே 1

## மீனலக்கினத்தில் பாவாதிபர்கள் நின்றபலன்

மீனமே யுதயமாக மிக்கபொன் னவனேயாக்ஷி
ஊனமில் லாதான்யோக முடையவ னுறுதிசொல்லன்
கியானமுங் கீர்த்தியோகன் கிளையொடு புத்திரலாபம்
தியானவான் சிவன் சொத்துக்குச் சிறந்திட விருக்கவல்லன். 2

## வேறு

கண்டமீன மிரண்டாதிக் கருதுஞ்செவ்வாயுபயமதில்
கொண்டே யிருக்கப்பூர்வீகங் குணமேபேத மிருவித்தை
யுண்டா மூன்றாமாதி வெள்ளி யுகந்துவுச்சக் கேந்திரத்தில்
துண்டாயிருக்க வாயுள்விர்த்தி சுகங்கள் பெண்பால்சகோதரமே. 3

## வேறு

தீரமொடுநான்காதி புந்திநீசம்

திறமையுடன் கேந்திரத்தில் நிற்பாராகில்
பார்தனீலேயாதீன பேதமாகும்
பற்றியதோர் மனையதுவும் பாழேயாகுங்
கூறுவர்கானன்னைக்குத் தோஷஞ்செய்யுங்
குணமுடைய வாகனமும் பேதஞ்செய்யும்
தேறுவதுபஞ்சமத்தோன் மதியேமீனம்
தேய்மதியாகிற் சிறந்த மம்மானீனம். 4
தரணியிற் புத்திரதோஷம் சஞ்சலப்பேதஞ் செய்யும்
கருணையா மரசர்மித்திரர் கனபகை மிகவுண்டாக்கும்
மருவியசுகங்கள் பேதம் வளர்மதியாதி லின்பம்
திருமகள் கடாக்ஷமுடாய்ச் செல்வீகம்மேன்மேலுண்டாம். 5

## வேறு

மிரியவேயிரவி மீனலக்கினத்தில் மிகுநட்பாய் நின்றிடப்பலன்கேள்
தெரியலேதேகந் தன்னிலேரோகஞ் சிறந்திடும் ருணத்தினால்துன்பம்
பிரிவதுவேழா மாதியேபுந்திப் பெலவீனம் நீசமாய்வரிலோ
தருமதில்மனைவிநாச மாஞ்சுகங்கள் தனித்திடுங் குடும்பசஞ்சலமே. 6
பெருமட்டாமாதி யுச்சனாய்க்கேந்திரம் பெலமொடு நின்றிடிலாயுள்
அரிவதுதீர்க்கங் காதலியோக மமர்ந்திடுமன்னை வர்க்கத்தில்
யுரியபாக்கியாதி நிலமக ன்பகையா யுற்றிடப் பூமிகள்விரயம்
தெரிவதுசுயார்ச்சித நிலையுண்டாஞ்செல்வம்சிறந்திடவிளங்குமென்றுரைக்கும் 7

## வேறு

மன்னனே பத்தாமாதி மகிழ்ச்சியாம் மீனமாக்ஷி
முன்னிய மணங்கள் சௌக்கியமுடிந்துடன் கர்மங்காட்டும்
உன்னிய லாபத்தாதி யுடன்வரை யாதீனம்
நன்னுவாலிபத் தில்செல்வம் நலமில்லை யந்தியமென்னே. 8

## இரவி நின்ற பலன்

உதயமே மீனமாக ருற்றமார்த்தாண்டன்நிற்க
கதையுறும் ஞானக்கேள்விக் கல்வியன் ரோகமுள்ளன்
சிதைமன முடையன்றந்தைச் செல்வீக விரோதமுள்ளன்
விதியுள்ள மட்டும்ரோகம் வேகமே வருந்துஞ்சிந்தை. 9

## சந்திரன் நின்ற பலன்

பதிதனை விட்டுமன்னிய பாக்கியந் தன்னைச்சேர்வன்
அதிபனாம் பிறையே நிற்க லவனியில் ஜெனித்தபேர்க்கு

துதிபெரும் வித்தைகற்பன் சொல்லில் வல்லமையுள்ளோனாம்
சதிசெய்ய நினைத்தபேரை சரசமாய் தண்டிப்பானே. 10

### செவ்வாய் நின்ற பலன்

நேசமாம் மீனந்தன்னில் நிலமகனிருக்க லக்கினம்
பாசமாய் பூமிசேர்க்கைப் பாக்கியம் தந்தைதன்னால்
வாசமாய்க் கூடும்பாகம் வலுவொடு மூன்றதாகப்
பூசல்செய் திருபாகத்தைப் பெற்றுமே விருப்பன்றானே. 11

### புதன் நின்ற பலன்

புந்தியே மீனராசிப் பொருந்தியே யிருப்பாராகில்
வந்திடும் சுயார்ச்சிதபூமி மன்னர்கள் மகிழ்ச்சியுள்ளோன்
சந்ததி விர்த்தியில்லான் தழைத்திடு மனைகள்விர்த்தி
பந்துக்க ளுறவுநட்புப் பலன்கன்னியர் வர்க்கத்தோஷம். 12
தோஷமே யெவ்வாறென்னில் சூழுமே ழாதிநீசம்
பாழது களத்திரவர்க்கம் பலனெல்லா மீனஞ்செய்வன்
சூழ்புவி யதனிலம்மான் சுகமெலாம் பேதமென்க
தாழ்வாகு மன்னைவர்க்கம் தாரமு மிரண்டாமென்னே. 13

### குரு நின்ற பலன்

மீனத்தில் குருவேயாக்ஷி விந்தையாய் ஜனித்தபேர்க்கு
தானமுந் தர்மஞ்செய்வன் சந்ததி செல்வமுண்டு
ஞானவான் கீர்த்திசெல்வன் நன்றியை மறக்கான்யோகன்
தியானமுங் கல்வியுள்ளோன் சிறப்பொடு சிந்தைநல்லோன். 14

### சுக்கிரன் நின்ற பலன்

புகருமே மீனந்தன்னில் பொருந்தியே யிருப்பாராகில்
சிகரமீ திருந்துவீழ்ந்து தேகமும் நலியுண்டாகும்
மிகசுக பேதங்காட்டும் வேதியர் நட்புள்ளோனாம்
ஜகமதில் சத்ருவுக்குநி சத்துருவா மாயுள்தீர்க்கன். 15

## மீன முதலோரையின் பலன்

மீனமிதில் முதலோரை ஜெனனமாகில்
மிக்கதொரு வீதியது வடக்குதெற்கு
நலமில்லை யெதிர்த்தமனை விர்த்தியாகும்
இருபக்கமனைபாழா மினிமேல்பான் முகப்பு
ஊனமில்லை நாற்சதுர மனைபூர்வமல்ல
முடனன்னையிட மாகு முறுதியீது

சேனமன்னிய தேசசஞ்சாரந் தன்னில்
ஜனித்தனென்று வுரைத்திடுவர் திறமையீதே. 16

## வேறு

அரிதல்மீன முதலோரை யரசேதென்பா லாலயமாம்
வரிதல்கீழ் பாலாரலதில் வந்தங்கருகே சந்துண்டாம்
தெரிதல்மேல்பால் கங்கையுண்டுச் சிறந்த விருக்ஷ முண்டாகும்
பிரிதலிரண்டுப் பிரிவாகப்பேதம் தந்தையிட மென்னே. 17
நிறைதல்பூர்வம் தனில்தந்தை நிலையாய்மூன்று விர்த்திரெண்டு
குறைதல்தந்தை காலத்தில் குறித்தபூர்வம் பெலனில்லை
உறைதல்தந்தை சகோதரங்க ளுறுதிமூன்று விர்த்தியொன்று
மறைதல்பூர்வச் சொத்தெல்லாங் வழக்கிட்டன்னியர் கொள்வாரே. 18
கொள்வார்தந்தை சகோதரத்தால் குணமொன்றில்லை நடுவயதிற்
தள்ளுஞ்சுகங்க ளதிகாரம் தவறுஞ்செட்டு வர்த்தகமும்
துள்ளிமுறியும் தந்தைநிலச் சுயார்ச்சித நிலைபோல்ருணமாரல்
மெள்ளவதனை யடுத்துமிக மேன்மைசுகங்க ளுண்டாமே. 19

## வேறு

மருவிய பஞ்சமாதி வரும்நிலை யம்மான்றந்தை
இருவராய் நிலைத்துச்செல்வ மிடரதாய்ப் பூர்வபேதம்
குருகிய வம்மானேகன் குணமில்லைக் குடும்பபேதம்
அரிவது யன்னியதேசம் அதிகாரமில்லை யென்னே. 20
பூரண சகோதரங்கள் பொருந்திய தேழுதன்னில்
சீரணம் நீங்கிமூன்றுத் திரத்தினில் நிலமைரெண்டு
தாரணி தன்னில்கீர்த்தி சவுக்கியத் தோடுவாழ்வன்
நாரணி கிருபையுண்டாய் நன்மையே மிகுதிசேரும் 21
பார்வைகாண் மொத்தமீது பலன்றனைப் பிரித்துசொல்லும்
கூர்மையா மரசேகேளாய் கொடுமைகளில்லைபாலன்
நேர்மையாய்ப் பிறந்தகாலம் நிலையொடு செல்வமுண்டாம்
நீர்மைகாண் தொழில்கள்விர்த்தி நிறைசெல்வ மீரேழாண்டே. 22
ஆண்டப்பால் தந்தையன்னிய மடர்செடி காடுதாண்டி
மீண்டப்பால் சென்று மேன்மை மிகுசுகமடைவன் பின்னும்
வேண்டிய வெண்ணத்தோடு வெகுதொலை யதிகாரத்துள்
ளாண்டைந்து மட்டும்புந்தி வருமெட்டுத் தொழிலால்நஷ்டம் 23
நஷ்டமே யடைந்துரோகம் நயமுடன் பெற்றுக்கொண்டு

திட்டமாய்ப் பூர்வந்தன்னில் தியங்கியே நிலைப்பார்பாலா
வட்டமா மாதுர்தீர்க்கம் மாரகமிருப தல்லால்
கட்டமா மிரண்டிற்செல்வம் கனிட்டரால் விர்த்தியாமே. 24

## வேறு

மதிதனக்கு நான்கிடத்துள் புந்திசூரன்
மருவிநிற்கப் பலன்சொல்லும் மகிழ்ச்சியீது
சதிசெய்வர் பிதுர்வர்க்க மெல்லானாசம்
சஞ்சலங்கள் பொருள்விரயந் தானுமுண்டாம்
விதியதாம் பிதாவாலே மேன்மையாகும்
விரும்பியநற் களத்திரமுண்டா மின்னங்கேளு
பதியதனில் மாதாவின்பர மாயுளிரண்டுப்
பத்தில்விதி முடிவாமென் றுரைத்தார்நந்தி. 25

## வேறு

சிறந்திடும்ரூபம் பொதுநிறம்நெடியன் சிறப்பொடு செல்வம் வாலிபத்தில்
உருகவேபாலர் மிருபதல்லாது வோரைந்து வாண்டினின்மேன்மை
பிறந்திடலறுபதல்லாது வேழிற் பெருகிய மாரகமென்க
திரந்தனம்விர்த்தி சகோதரன்றன்னால் செல்வமுண்டாகு மென்பதுவே. 26
தனமொன்பானாதி நிலமகனாகச் சார்ந்து பயந் தனிலிருக்க
இனமுடன்பாவிப் பார்வையேயாகில் யினிதுகா னன்னியபாஷை
மனமுடன்கற்பன் மன்னர்கள் மகிழ்ச்சி வாக்கினில் முதிர்ந்தவனென்க
கனமுளன்செல்வன் கன்னியர்வழியில் கனம்பொருள் விரயமாமென்னே. 27
கொடுத்திடல்மூன்றா மாதியின்பலன்கேள் கொடியவர்தனக்குமுன்கொடியன்
தடுத்திடாச்செல்வம் சத்துருஜயத்தன் தைரியமுளனன்னியபூமி
அடுத்திடுமனைகளு விர்த்திகள்செய்வன் அவனிமீ தன்புடன்பாலா
இடித்திடுமிதுமூன்றா மிடர்பலன்கா னினியன்னைப் பலன்றனைக்கேளே. 28
பலனதுவன்னை வர்க்கத்தில்சுகங்கள் பலனில்லைவர்க்கம் ரெண்டுளது
தலமதிற்பேதம் தரைமிசைமனைகள் தரும்பிரிவிரண்ட தாமென்க
பெலமெனும் புந்திநான்காதி நான்கோன்பெருக்கியே யின்னிலைபலன்சொல்
உலகினில்பூமி யிருவிதமதனால் உறுவடபாகத்தில் வழக்கே 29
குறித்திடலைந்தால் பலனெவ்வாறென்னில் குணம்பெண்பால் விர்த்திமூன்றுளதாம்
தரித்திடலப்பாலணவாபாலிண்டுத் தரைமிசை யோகவானெரகன்
பிரித்திடல்வித்தை விதானஷ்வாந்திரப் பெலன்சுகப் புத்திரப்பலன்காண்
மரித்திடலாண்டு விருபத்தைந்திலே வருஞ்செல்வ மன்னர் பேட்டியனே 30

## வேறு

கூறுமாறாமிடப் பலன்கேள் குணமேசத்துரு தானில்லை
மாறும்ருணங்கள் ரோகங்கள் வாதையில்லை மன்னர்களால்
பேருங்கலகம் தான்காட்டல் பெலனாம்பின்னு மதிற்சுகங்கள்
யாருங்கொடுமை தனைச்சொல்வா ரதன்சுகங்கள் நிலையாமே. 31

சத்தமாதிப் பலனறிதல் சார்ந்தேழுள்ளோர் சரமுபயம்
சித்தமாகத்தா னிருக்கத் திரங்காணேகத் தாரமென்க
உத்தபலன்கள் மதிக்கேழோ னுறதிய்ன்னை வர்க்கமதில்
சுற்றமுளதாய் பாலனுக்கு சூழ்ந்தநிலைகாண் களத்திரமே. 32

## வேறு

குணமொடு களத்திரத்தின் கூறினைப்பிரித்துப் பார்க்கில்
மணமதாய்வீதிகீழ்மேல் வருந்தென்பால் மருகின்கீழ்பால்
துணையதா மருகிற்சந்து சொல்தென்பால் கோவிலுண்டாம்
தணலதா லெரிந்தவீடுத் தரைமிசை யெதிரிலென்னே. 33

அட்டமந் தன்னில்கால மறிவதுமன்னா கேளும்
நட்டமொன் றில்லையாயுள் நலமதாம் புவியின்மீது
திட்டமா யாறேழாண்டாற் திடமதாய்க் கண்டமொன்றாம்
வட்டமிவ் விதமாயாயுள் வகுத்தனர் புவியின்மீதே. 34

நிலையதாம் பாக்கியத்துள் நிலைப்பூர்வம் நான்கிலொன்று
விலையதா யன்னியர்க்கு வேறதாய் நிற்கும்பின்னும்
குலைவிலாக் குடும்பந்தன்னில் கூறுவர் தந்தைசெல்வம்
துலையதாங் கும்பம்ரெண்டு சொல்வரிவ்வித மாய்பூர்வம். 35

பொருந்தியப் பூர்வம்நட்பாம் பெருமையாஞ் செல்வம்பின்னும்
திருந்தியேக் கூடுஞ்செல்வம் சிறப்பொடு சகோதரங்கள்
வருந்திய நட்புகீர்த்தி வளமது பூமிசேர்க்கை
அருந்தவ ரறிஞர்தன்னால் அடர்பகை யாவனென்றே. 36

## வேறு

கண்டிடபத்தா மதிபதி பலன்கேள்
கணிதமாம் தந்தைமா ரகங்கள்
உண்டெனு முப்பான் பின்னொன்பான்முற்றி
லூறும்பிதா மாரக மென்பார்
துண்டெனுந்தந்தை சுகமொடு செல்வம்
சூழ்ந்துடன் வித்தையால் நன்மை
கொண்டிடச்செல்வர் தனக்குமே தொழில்கள்

கூறுவா ரரசர்களிடமே. 37
வருந்தியலாபத் ததிபதி பலன்கேள்
மன்னர்கள் மகிழ்ச்சியால் லாபம்
பொருந்தியக் கீர்த்தி யதிகாரந்தன்னால்
பூரண பலனிதி லுண்டாம்
திருந்தியபாக்கியம் பூமியால்செல்வம்
சிறந்திடு மன்னர்கள் பேட்டி
சொரிந்திடுந் துணைவர்தொழில் வேறதாகச்
சொல்வதுபின் புந்தி நிலையே. 38

## வேறு

கூரக்கேள் விரயாதி உபயக்கோள் பார்வை
கொடுமையினா லாண்டிருபத் தேழில்மனைவிர்த்தி
மாரல்கா ணிருமனையா மதின்கீழ்பால் மனையில்
வழக்குண்டாய் பின்ஜெயமா மகிழ்ச்சி யதிலென்க
சீரக்கேளதி னன்னியதேச சஞ்சாரச்
சிறுமைதனில் யாத்திரைகள் செய்திடுவானென்க
பாரில்காணிதில் ஞானப்பக்தி மிகவுண்டாம்
பதமடையும் தொழில்செய்வன் பகர்ந்திடுவீர் தாமே. 39

*மீன முதலோரையின் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## மீன மிரண்டாமோரையின் பலன்

கருதியக்கயலி லிரண்டாவதோரைக் கணிதமாய்பிறந்த ஜாதகற்கு
வருவதுவீதிக்கீழ் மேலாமுகப்பு வடதிசை யெதிரினிலாரல்
தருவதுவிரண்டுப் பக்கமுஞ் சந்துத் தாழ்வுமண் வடமேற்கில்கோவில்
பெருவதுபூர்வ மண்ணதில் பிறப்பன் பிசகில்லை யிருபாகமென்றே. 40
சிறப்பில்லை மீனமிரண்டாவதோரை ஜெனித்தஜாதகற் கினிப்பலன்கள்
நிறப்படுமேல்பா லாலயம் வடகீழ் நிலையொடுகங்கை யக்குளதாம்
குறைப்படுமனைகாண் வடபக்கமதனில் குணமிலாமனை யொருபாகம்
திறப்படும்பாதி மனையபிவிர்த்தித் தீரமன்னிலை பிறந்திடமே. 41
தந்தையின்பிதுர்க் களறுவர்காணதிலே தலமதில்நிலைகள் பேரிரண்டாம்
பிந்தியத்தந்தை காலத்தில்நால்வர் பெலமொன்று வன்னியதேசம்
சந்ததியொருவர்க் கில்லைகாணிருவர் தலத்தினில் நிலையொடுவாழ்வர்
சுந்திரன்பிறந்தவுடன் தந்தைக்கிளையில் துர்க்கன்மமுடன் முடிந்திடுமே. 42

பெலமில்லையாயு ளாண்டுவோரிரண்டில் பெலத்தமாரகந் தனையோதும்
தலமதில்நிலைக்க விதிலன்னைவர்க்கம் தந்தையின் சகோதரமூன்று
குலமதில்விளங்க விர்த்தியேயம்மான் கூறுவர்நிலை யிரண்டென்க
உலகினிலிவ்வாறு பலனெலாமுரைத்தன னுண்மைகே ளின்னமுமரசே. 43

*மீன மிரண்டாமோரையின் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## மீன மூன்றாமோரையின் பலன்

நின்றமீன லக்கினத்தில் நிலையாய்மூன்றா மோரைதனில்
சென்றகாலம் பிறந்தவர்க்குத் திரமேவீதி தென்வடலாம்
என்றேகிழக்கு முகப்பளதாம் மிருபக்கத்தில் மனைவிர்த்தி
உண்டாமென்பர் எதிரில்மனை யுள்ளகங்கை யெனவோதே. 44

### வேறு

வீசியமீன மூன்றாவதோரை மேதினிதனில் பிறந்தோற்கு
பாசமாய்தென்கீ ழாலயமென்க பற்றியமேற் றிசைகங்கை
வீசியப்பிதுர்களிட மதுவிரண்டா மிகுசுயார்ச்சிதந் தனில் நிலையார்
மாசிலாசுகங்க ளடைவதுதந்தை வர்க்கத்தி லின்ன முங்கேளே. 45
தங்குபாக்யாதியதற் கொன்பான்மதியே தலத்தினில் பின்னைந்தாமாதி
பங்கமில்லாமல் பாவர்கள் பார்வைப் பற்றியே யிருப்பரேயாகில்
சங்கையொன்றில்லை தந்தையின்றந்தை சகோதரம் திருதியமாகும்
இங்கிவ்வாறுபலன்கள் தந்தைகாலத்தி லிருவர்க ளனுபவமென்றே. 46
கொடுங்கதிர்தனக்கு தனத்ததிபன்காண் கூர்பஞ்சமத்தாதியோடு
தொடுஞ்சுபர்பார்வைநாடியேயிருக்கில் தொல்புவிதந்தைக்குச்செல்வம்
நடுங்கியருணம்போம் நாரியர்கலகம் நலமதாம் தந்தையின்பூமி
கடுங்கதிர்ப்பார்வை யிருந்திடில்விரயம் கன்னியர் நட்பினிலென்னே. 47
இலக்கினம்தனக்கு ஐந்தாதிபலன்கேள் இடரில்லையதிலம்மான்வர்க்கம்
துலக்கமொன்றில்லைவர்க்கமேயிரண்டு சுயார்ச்சிதநிலைதனில்விர்த்தி
பெலக்குமம்மாதேயேகனாந்தனிமை பெலமொருசுயார்ச்சிதந்தன்னில்
கலக்கமில்லாமல் சௌக்கியமுளனாம் கதித்தனரிப்பலன்நிலையே. 48

### வேறு

அரசனே பாலாகேளா யாறிடந்தன்னால் நம்மை
சிரசினில் ரோகமுண்டாம் தியங்கிய ருணங்களில்லை
முரசொடு சத்துருக்கள் முயன்றவ ரீனமாவர்
விரைரோகம் பின்னால்பாலா வேதைகள் படுத்துமென்னே. 49

அரியினில் செவ்வாய்நிற்க அறிவதுக் காதில்ரோகம்
தெரிப்படும் வார்த்தைதன்னால் தேர்ச்சியே யில்லையென்க
இருமூன்றில் சுபரும்பாவி யிருந்திட மயக்கமுண்டாம்
பெருவது யிருபான்மேலே பேதகம் ரோகந்தானே. 50
கனமதால் சுகங்கள்தாரம் கன்னியின் றிசையில்கொள்வன்
தனமுளான்பெண்பால்மூலம் தரைமிசை யெவர்க்கும் நல்லன்
பெலமதாய் வீதிக்கீழ்மேல் பெலன்றென்பால் மனையதாகும்
தலமதில் மனைவிநன்மை சாற்றுநற்குணமுள்ளானே. 51
பெருவது மூன்றாமாதிப் பெலனுச்ச மாகிநிற்கத்
தருவது சகோதரங்கள் சாற்றுவாய் பெண்பாலைந்து
வருவது யோகந்தானும் வலுவில்லைப் பெண்பாலாலே
மருவிய வாண்டுமுப்பான் மகிழ்ச்சியாம் ஜாதகற்கே. 52
மகிழ்ச்சியா மென்றுசொன்ன வலுவ தெவ்வாறுசொல்லும்
இகழ்ச்சியா மம்மான்வர்க்கம் யினியதாம் வீதிகீழ்மேல்
புகழ்ச்சியாம் பெண்பால் மூலம் பொருந்தவே மணமுண்டாகும்
நிகழ்ச்சியாம் சகோதரங்கள் நிலைநான்கு வாண்பால்சொல்லே. 53
பெருகிய வட்டமாதிப் பெலனெவ்வாறென்னில்தீர்க்கம்
வருவது ஐம்பதல்லால் வருமொன்பா னாண்டிற்கண்டம்
தருமதில் மத்தியமுப்பான் சார்ந்தைந்திற் கண்டமொன்றாம்
குருகியக் கண்டம் நீங்கிக் குணப்படும் செல்வனாமே. 54
படர்ந்திடும் பாக்கியாதிப் பல னெவ்வாறென்று கேட்கில்
திடமுடன் செல்வன்றந்தைச் சிறப்பில்லை யன்னியர்பூமி
மடம்சத்திரங் குடியிருப்பா யாலயத்தரு கிருப்பான்
இடமுப்ப தாண்டுக்கப்பா லினியசெல் வீகமென்னே. 55
இரவியு முச்சமாகி லினியவாண் டிருபத்தெட்டில்
விரவியே தந்தைமாள்வன் விலைபொருள் வியாபாரத்தால்
தரைமிசைப் பொருளைச் சேர்ப்பன் தரித்திரமில்லையென்று
விரவியே நந்தியீசர் விளம்பிய தறிந்திடாயே. 56

## வேறு

இரவியுடன் சனிகூடி யீராறுமூன்றில்
இருந்திடிற்கேள் மன்னவனே யினிமையாக
பெருமூத்தப் பிதாவினிடம் பிள்ளைவாழ்வன்
பேருலகி லிப்பலன்கள் பிரித்துப்பாரு

வரும்பிதா வியாபாரத்தொழில்கள் மூலம்
வருந்தியே யலைந்திடுவன் வண்மையீது
தரும்பலன்க ளிவ்விதமென் றுலகில்மன்னா
சாற்றிடுவாய் ஜாதகன்றன் றன்மையீதே. 57

## வேறு

கூட்டிய தந்தைகண்டம் கூறுவன் முப்பத்தாறில்
நீட்டிய வன்னைகண்டம் நிலைநாற்பதல் லாதொன்றில்
தாட்டிய முடனேகண்டம் தரைமிசைத் தொழில்கள்பூமி
மீட்டுவர் வியாபாரத்தால் விரும்பியத் தொழில்களாமே. 58
வண்ணமாம் லாபங்கேளாய் மருவிய ஜாதகற்கு
திண்ணமாய் வாலிபத்தில் சிறந்திடும் பூமிபொன்னும்
எண்ணமாய்க் கூடும்பந்துக்க ளிருபாகந் தனில்வழக்கு
பெண்ணினால் பாகமொன்று பெலன்தனம் சேரும்பூமி 59
பாரினில் விரயத்தாதிப் பலன்றனைப் பிரித்துப்பார்க்கில்
நேரினில் மனைரெண்டாகும் நிலையொன்று விர்த்தியென்க
பாரினில் ஜெயமுள்ளோனாம் பலபுண்ணிய விஷயந்தன்னில்
தேரியே விரயம்செய்வன் திரமுட னுரைத்திடாயே. 60
உரைத்திடு முதயந்தன்னி லுறுஞ்சிகப் புளனாம்ரூபம்
குறைத்திடுங் குள்ளனாகும் கொடியவர் தனக்குமீள்வன்
கரைத்திடும் வித்தைவாய்க்குக் கணிதமும் பலிதமுள்ளோன்
நிறைந்திடும் பின்னால்செல்வம் நிலையுள னிவ்வாறென்னே. 61
ஓங்கிய சகோதரங்க ளுறுமே வாண்பால்மூன்று
பாங்கிக ளிரண்டுவிர்த்திப் பலனெல்லாம் விர்த்தியொன்றாம்
ஏங்கியேப் போவான் சத்துரு விடரில்லை யினியசெல்வம்
தாங்கிப்பின் வருமென்றோது தரணியில் நந்திவாக்கே. 62
இயம்பெரும் புத்திராள் மூன்று யினியபெண்ணிருவராகும்
நயமுண்டாம் புத்திரன்றன்னால் நாடியே ரோகமுண்டாம்
ஜெயம்பெரும் பூமிநாற்கால் சிறந்திடச் செல்வங்காட்டும்
பயன்பெறு மம்மான்வர்க்கம் பலனில்லை யிவ்வாறோதே. 63

*மீன மூன்றாமோரையின் பலன் முற்றிற்று*

✲ ✲ ✲

## மீன நான்கா மோரையின் பலன்

நிலைமீனராசி நான்காவதோரை நிலையெனப்பிறந்தஜாதகற்கு
மலைவிலாவீதிப் பிரிவதுமூன்றா மன்னர்வீ டருகினில்கோவில்
கலைதிசைமுகப்பு யெதிரினில்நதிகள் காணலாமிரு பக்கம்விர்த்தி
இலைபூர்வபேதமென் றுரைத்திடுவ ரிப்பலனன் னியரிடமே. 64

### வேறு

கயமதில் நான்காமோரைக் கணிதமாய் ஜெனித்தபேர்க்கு
பயமில்லை தென்மேற்பாகம் பலன்கோவில் கங்கையுண்டாம்
அயல்மனை தனில்பிறப்பன் ஆதீனம் நிலைமூன்றாகும்
தயவுடையவன் காண்தந்தை தருஞ்சுகந்தனைச் சொல்வோமே. 65
சொல்லக்கே ளரசேதந்தை சூழ்பாட்டன் மூன்றுபேராம்
வெல்லக்கே ளதிலேயேகன் வேதாந்த நட்புள்ளோனாம்
வல்லவன் தந்தைகாலம் இருவர்க்க மதிலேயாகும்
அல்லல்கா ணதிலேயேகன் அன்னிய தேசமென்னே. 66
இந்துக்கைந் திடத்தாலம்மானியல்பினை யுரைப்போம்பாலா
முந்திய தந்தைவர்க்கம் மூவர்காண் விர்த்திரெண்டு
சந்ததி யம்மான்ரெண்டுத் தலத்தினி லிருபாகத்தில்
பந்துவில் கலமாகிப் பகைத்துமே நிற்பாரென்னே. 67
இலக்கினந் தன்னால் மேன்மை யிடரில்லை யினியரூபன்
துலக்கமாய் நிறஞ்சிகப்பு சொல்வது நெடியரூபம்
கலக்கமொன் றில்லை சிந்தைக் கருதிய மெய்யனென்க
வலுக்க கர்ப்பத்தில்தானே வருஞ்செல்வம் பிதுர்க்குண்டாமே. 68

### வேறு

பொன்னும் புந்திப் பிருகுடனே பொருந்தி கேந்திரகோணத்தில்
வின்னமில் லாமலேயிருக்க விளம்பும்தரணிக் கதிபதியாம்
பன்னுமாயுள் தீர்க்கமென்பர் பகரும்பாலா வெழுபதல்லால்
இன்னமிரண்டுத் தான்சேர்க்கை யியல்பாம் கண்டமாரகமே. 69
குருவும்பிருகு மிருவருமாய்க் கூடிலாயு ளெவ்விதங்காண்
பெருகுமரசே பரீக்ஷித்தா பெலன்கேள் பிருகுமீனத்தில்
பிருகுமுச்ச னானதினால் பேசுமுபயம் சரமிதற்கு
மருவுமாயுள் தீர்க்கமென வகுத்தார் நந்தீஸ்வர்தாமே. 70
இரண்டோ னொன்பானேகனுமாயினிய மன்னர்நட்பாகத்
திரண்டங்கிருக்க வெவ்விதத்தால் தீர்க்கம் சொன்னீ ரிதில்கூறும்

மருண்டபாவி புந்தியினால் வலுவுண்டெவ்வாறு விதஞ்சொல்லும்
பிரண்டபேதந் தனைக்குறித்திப் பின்னாலுரைப்போம்பலன்கேளே. 71

## வேறு

பொழிவதுதனத்தோன் கேந்திரப்பார்வைப்
பொருந்திடில் நாட்டமேதாழ்வாம்
திருந்தியநேத்திரம் பழுதில்லைசெல்வம்
சிறந்தநல்வாக்கு முள்ளவன்காண்
அழிந்திடாசெல்வ மாதீனம்நீங்கி
யறிவொடு சுயார்ச்சிதமதனில்
பொழிந்திடச்செல்வ முடையவன்பூமிப்
புகழ்குணங் குடும்பவிர்த்தியனே. 72

## வேறு

சூழுமூன்றால் சகோதரங்கள் சொல்வாராணு விர்த்தியதில்
தாழும்நான்கு விர்த்தியொன்று சார்ந்தபெண்ணாந் தனியொருவன்
வாழும்செல்வ மிருவரதில் வண்மைகுடும்ப விர்த்தியுளன்
நாழும்பூமி புந்திதொழில் நலம்பொன்வரு மென்றிவ்விதமே. 73

## வேறு

உண்மைகேள்நான்கா மாதியின்பலன்க ளுறுமன்னைவொன்றுடநான்கில்
அன்னவ்வாறாண்டி லன்னைமாரகமாம் அதிகபூமிகளும் பின்விர்த்தி
திண்ணமாய்நாற்கால் விர்த்தியாய் சேர்க்கைச் சிறந்திட வித்தையில்லாபம்
உன்னியத்தன்மை யுடையவன் மனையிலுரைத்திடுங் கெடுதிஜாதகற்கே. 74
ஐந்தினுக்கதிப ரதற்கைந்தாமாதி யம்புலிதனக் கைந்தாமாதி
தந்திடும்மன்னர்க்கைந்தவனோடுச் சனிபாவர் சகிதராயிருக்கில்
முந்தியேபுத்திராள் பெண்பிறந்தப்பால் முற்றிலும் புதல்வர்களிலைகாண்
தொந்தமாயைந்துநிலையாண்பால்ரெண்டுசொல்வதுப்பெண்மூன்றாமென்னே. 75

## வேறு

வெய்யவ னாறாமாதி மிகுவானொன் காரிராகு
பையவே யிவர்கள் பார்வைப் பத்தினுக் கிருக்குமாகில்
தையலர் வழக்குநேரும் சஞ்சலமிகவேயுண்டாம்
துய்யநல் ருணங்களுண்டாம் சுகமில்லை ஜாதகற்கே. 76
முன்னமே செல்வன்கீர்த்தி முதிர்ந்தநல் யோகஞ்சொன்னீர்
பின்னுமந்தியத்தில் துன்பம் பேசியதெவ்வாறு சொல்லும்
மன்னனே கேளாயாறோன் வருங்கதிற் குருவுக்காகும்
பன்னிய ருணங்கள் ரோகம் பற்றியே நீங்குமென்னே. 77

## வேறு

அட்டமந்தனக்கு விரயம்நற்பலன்க ளறிவது களத்திரமுபயம்
நட்டமாமென்று வொன்றதுவிர்த்தி நலமுளோன் களத்திரவழியில்
திட்டமாய்ப்பூமி பொருள்களுங்கூடும் செல்வர்கள் பிறக்கநற்சிறப்பாம்
கஷ்டமேயில்லை களத்திரம்வடகீழ் கதிபெரும் வீதிகீழ்மேலே. 78
வீதிகாண்கீழ்மேல் தென்பக்கஞ்சந்து விகற்பமாம் அம்மனைப்பாதி
ஆதியாய்நின்ற நிலையதுவேறாம் அதிலிருபாக மென்றோதும்
நீதிகாண்தேன்பால் மனைவடமுகப்பு நிலைசகோதர மிதில்மூன்று
கோதியமனையில் பெண்குடும்பங்காண் குணந்தந்தை செல்வமீனமுமே. 79
கதித்திடுங்கண்ட மட்டமந்தன்னால் கண்டுரைத்திடுதல் கேளரசே
பதித்தனர்மூன்று வாறுட நான்கு பத்தினில்கண்ட மங்குளதாம்
விதித்தனனிருபத் தேழினிற்கண்ட மிகுசுரப் பீடையாலென்க
மதித்தனனாயுள் ஜன்மத்தினிலுரைத்தோம் வண்மைகேள்பாலாவிப்பலனே. 80
மிக்கபாக்கியத்தின் பலனதையறிதல் வெய்யவன்றனக்கு பாக்கியாதி
தக்கமன்னவனால் பார்வையங்குறினும் தந்தைக்கிரண்டிடம்பூர்வம்
திக்கதுமேடம் கன்னியின்றிசையிற் திரமிலாச்சுயார்ச்சித நிலையாம்
பக்குவம் பிதுர்கள் பூர்வீகமெல்லாம் பகைஞரால் விரயமாமென்றே. 81
ஒன்பதுள்ளேழு விரயாதிபிருகு வோங்கிய மாரகனிரவி
அன்பொடுத்தந்தை மாரகமிருபான் அப்பாலோர் மதியாண்டுசெவ்வாய்
இன்பமாய்சேர்க்கை யிவ்வாண்டிற்றந்தை யிடர்வயிறு போக்கினால்மரணம்
துன்பமில்லை பிதுர்க்குமேல் செல்வமடைவன் சுகமுளன் செல்வீகமரசே. 82
மீரியபத்து யதற்குபத்தாதி விண்மதிதனக்குப் பத்தாதி
மாரியேபார்வையடைந்திடத்தொழில்கள் வாணிபம் பூமியாலென்க
தேரியலாபம் துலை திசைதெருகார் றெறிந்திடுமத் திசைதன்னில்
கூறினர்பூமி வியாபாரம்நன்மைக் குணமொடுவதிக லாபமுமே. 83

## இதுவுமது

பரவியவிரயப்பல னெவ்வாறென்னில் பற்றியமனை யிரண்டிடமாம்
தரைமிசைபூமிக் கட்டடம்விர்த்தி சஞ்சலமிரு தர்மவிரயம்
உரவினில்விரயம் ஊர்பிரயாண முற்றிடல்நற்பதவியுமாய்
திரவியம்கல்லவழி தனில்விரயம் செய்வர்காண் ஜாதகற்பலனே. 84

*மீனலக்கின நான்கு ஓரைக்கும் செய்யுள் - 84*
*முன்லக்கினம் 10-க்கு செய்யுள் - 889*
*ஆக மொத்தம் செய்யுள் - 973*
*மீன நான்காமோரையின் பலன் முற்றிற்று*

## கவனிப்பு

மிகவு மறிவிற் சிறந்த உத்தம சோதிட சாஸ்திரிகளே

கடல்சூழ்ந்த நெடிய விவ்வுலகத்தின்கண் கணிப்பருஞ் சோதிடமும் ஆரூடமுமுளவாயினு மதனை பிறருக்குப் பயன்பட வெடுத்தோதாது தம்மளவேயாக மறைத்துத் தாமும் மறைந்து போகின்றதே நம்தேசத்தினர்க் கியல்பாயுள்ளமை யாவர்க்குந் தெரிந்தவிஷயமே ஆங்கினுமிக்க வபூர்வமான இவ்வாரூட சாஸ்திரத்தைத் தம்மட்டில் தாமே மறைத்துவைக்க எவ்வளவு முயன்றும் பொருந்தாமையும், முன்னம் பலபேர் தாம்மாரூட சாஸ்திரத்தைப் புகழ்ந்தெழுதி விளம்பரப்படுத்தி வெளியிட்ட பின்ன ரதனை நோக்கின ரியாவரும் பலநாளும் விரும்பாராயினார். அப்படிக் கிதனையுமெண்ணி யிகழாவண்ணமுந் தஞ்சந்தேக நிவர்த்தியாமுன் வீணே காலஹரணஞ் செய்யாவண்ணமு மிவ்வாரூட சாஸ்திரத்தையு மனுகூலமான விதமாக இந்நூலுடன் சேர்த்து அச்சிட்டு வெளியிடலாயிற்று.

அன்றியும், இவ்வாரூடத்தின் சிறப்பு மாக்ஷிமைபொருந்திய மாந்தர்கள் வந்து நின்ற நிலையாதியாய்த் தத்தமர் மனதிலெண்ணிய சிந்தனைகளு மின்னுமதன் சம்பந்தமான அரிய விஷயங்களையு மெடுத்தோது மித்தகைப் பெருமையுடைய, இவ்வரிய நூலைக் கண்ணோக்கமிடுங்கால் அளவிடற்கரிய ஆனந்தத்தை யடைவீர்களென்று மிகவுறுதியாக நம்புகின்றனன்.

இங்ஙனம்

ஜோஸியம்

ஆர். அ. ப.

## ஆரூட விபரம்

பிரசனை யல்லது ஆரூடம் கேட்க வருபவர்கள் எந்த ராசியில் நின்று பலன் சொல்லென விரும்புகிறார்களோ, அந்த இராசியாதில் தற்கால கிரகங்களை அமைத்துக்கொண்டு பலன் சொல்லவும்.

சிவமயம்

பரிக்ஷித்துமகிபதிக்கு

ஸ்ரீ நந்திகேசுவரர் திருவாய் மலர்ந்தருளியப் பிரசனையல்லது

# ஆரூடப் பலன்

## 1–வது மேடம்

பெருகியமேட மதிலாரூடங்கள்
பெலமொடுக் கேட்பரேயாகில்
வருமிதில்பாவிப் பார்வைகளிருக்க
மன்னர்கள் வழக்கினைக்குறித்தாம்
தருமிதில்சுபர்கள் கலந்துமேபார்க்கில்
தலமதில்நிலை பூமியென்க
வருமிதில்மதிக்குப் பாவர்கள்பார்வை
வந்திடில் பெண்டனைக் குறித்தே. 1

### வேறு

சார்ந்தமேடந் தனில்நிலைமைச் சாற்றுங்காலம் ஜீவனிதில்
சேர்ந்தேவருங்காண் திட்டெனவே சேரும்பொருள்கள் தாமிசமாம்
சேர்ந்தசோர மாகுமிதுத் துணிவொன்றில்லை விரயமதாய்
தேர்ந்தக்குடத்தின் திசைபோகும் தியக்கமுண்டா மறைவென்றே. 2
செல்வமுடனே மேடமதில் சிறந்துநின்று ஏறதனில்
அல்லலுடனே தான்கேட்கு மாரூடங்க ளன்னியர்க்காம்
தொல்லைக்குடும்பந் தனில்விரயம் சூழ்ந்தபூமி யன்னியர்க்கும்
எல்லையுள்ளும் விரயமென விடராய்ச்செல்வா னெனவோதும். 3

### வேறு

நிலைமனைமூவர் வழக்கெனலாகும் நேசன்காணேகனால் நன்மை
கலைமதிக்கதிபர் பார்வையாயிருக்கில் கன்னியர்ப்பகை யுளவழக்காம்
விலையொடுபூமியது தனைப்பிரிவாய் வேந்தர்கள் வழக்கெனலாகும்
அலைவதுவிரயம் பொருளினாற்கலகம் ஆகுமென் றுரைத்திடுநிலையே. 4
நிறைவதாம்தொழில்க ளெவ்விதமென்னில் நேசனோடடுத் தன்னியதேசம்
குறைவிலாசுபங்க ளடையவேவேண்டிக் குடும்பமாந் திசைதனிற்செல்லல்
தரைமிசைத்தனங்க ளதிகாரமூலம் தருவித்தையாற் பலனென்க
திரையிலாச்செல்வம் பூமிபொன்வருத்து தேவாலயம் சொல்லலென்றே. 5

### வேறு

சோரமே மேடந்தன்னில் சூழ்ந்திடச் செல்வதெவ்வாறு

வீரமாம் பாவிப்பார்வை மிகுமாறோன் விரயத்துள்ளோன்
சேரவும் பார்வையங்கச் சிறந்ததா லாடையொன்று
பார்தனில் விரயமென்றுப் பற்றியே கேட்பானென்றே. 6

## வேறு

வருடமேடந் தனில்நிலைமை யாருடங்கள்
வருநிமித்தங் கடாவென்றுத் துள்ளியோடில்
தருமிதனால் பலனெவ்வா றென்னிலேகன்
சார்ந்தன்னிய தேசமதில் தனித்துச்சென்றான்
பெருகியதா யிப்பலன்காண் பிதுர்க்குப்பீடைப்
பேதகத்தைத் தான்கேழ்ப்பன் பெலன்காணின்னம்
குருகிவிழும் மரக்கட்டை சிரத்தின் மீதுக்
குணமில்லைக் கொடுந்துயரம் விரயரோகம். 7
சிறந்தன்னிய தேசமதில் சென்றா னென்றீர்
தியக்கமது நிலையில்லை யெவ்வாறு சொல்லும்
நிறைந்தமதி சரமதிலே நிற்கின் பாலா
நிலையதனால் பெண்ணிருவர் தன்னைக்கொண்டு
குறைந்தபிணி சஞ்சலத்தோ டன்னியதேசம்
கூட்டுறவாய் வாணிபங்கள் செய்யவேண்டி
பறந்தலைந்து நஷ்டத்தை யடைந்துத் துன்பப்
படுவரென ருணப்பீடைப் பகருந்தானே. 8
செல்வமுளப் பிதுர்தனக்குப் பீடையென்றீர்
சிறந்தமதி யுபயத்தில் சேயினோடு
கல்லிலா கோட்களுடன் பார்வையாகில்
கண்டித்த சுரபீடைப் பிதுர்க்குண்டாகும்
வெல்வதிதைத் தான்குறித்து அவிழ்தப்பார்வை
வேதியன்றன் திக்கதனில் சென்றானென்க
தொல்லையதாம் தென்கீழ்பா லவுழ்தவாதி
சுகமாகும் நாடியங்கு செல்வான்றானே. 9

## கோசரம்

உண்டாம் நிலைமைமே டத்திலுறுதி யாருடமதாகில்
மிண்டாய்ப் பாவிகேந்திரத்தில் மேவுங்காலம் சஞ்சலமாம்
தெண்ட மரசர்தம்மாலும் சேர்ந்தபந்துக்கள் பகையாம்
அண்டியிருந் தோர்பகைகாட்டும் அறையுமாடுந் தொழிலீனம். 10
கொண்டபெண்டீர் தனைபகைத்தால் கோட்கள்பெண்ணால் தனவிரயம்

கண்டீரிரண்டு பாகத்தாற்கலகம் சத்துருபொருள் விரயம்
சென்றநிலைமை விட்டேகல் செய்யுந்தொழிலும் சிறப்பில்லை
நின்றநிலைமை தான்விலகல் நேசமுள்ளோர் பகையாமே. 11

### வேறு

தெரிவதினிப்பலனறிதல் பாக்கியாதி சிறந்த விரயத் ததிபன்மன்னனாக
பிரிவதினிப்பத் ததிபன்காரியோடு பேதியாமேழாதி பதியுங்கூடில்
சூரியமனைதனைவிட்டுப் பிரிதல் மூவர்க்கூடிவிவகாரமதில்கலகங்காட்டும்
உரியசகோதரன்பகைத்தல் மரணஜலகண்ட முற்றிடுதல்மனையிருவர்பாகமாமே

வருவதினிப்பலன்கேளு மேழாமாதி வருலாபத்ததிபதியு மகிழ்ந்துபத்தில் பெருகிவரும் சசிபார்வைப் பெறுவாராகில் பெலவீனமழைதனிலே பேதமாம், உரியசனிப்பார்வை யதிலிருக்குமாகில் ஓடமதில் கங்கையோரத்தில்பேதம், தெரிவதினிமதியிரவி கூடிநின்றால் தேகமதில் பிணியுண்டாந் திரமையீதே.

## 2-வது ரிடபம்

விடைதனி லாரூடங்கள் வேந்தர்கள் பொருள்மூலத்தால்
தடமிதில் பாவிப்பார்வைச் சார்ந்துட னிருக்குமேனும்
குடதிசை பிரயாணங்கள் கொள்கையைக் குறித்துக்கேட்பர்
உடனிதில் சுபர்கள்பார்வை யுற்றிடில் பெண்வழக்காம். 14

### வேறு

இன்பமாயிடபந் தனில்கேட்போர் தமக்கு
யிடரில்லையினியப் பெண்வருத்து
துன்பமேயில்லையதில் நாற்கால்கூடும்
சோரமங்கில்லைப் பொன்வருத்து
அன்பொடுபெண்பால் பொருளதில்சேரும்
ஆதீனப்பூமி பெண்மூலம்
தென்புடன்வருத்து மன்னர்கள்வழக்கு
தீரமாய்ஜய மதிலோதே. 15

### வேறு

கண்டாரிடபந் தனில்நின்றுக் கருதிக்கேட்டு பின்மேடம்
சென்றால்சிறப்புப் பொருள்கூடும் சேர்வன்பெண்பால் தியக்கமில்லை
துண்டாய்ப் பூமி யிருவருக்குச் சோரக்கலகம் வழக்குண்டாம்
மிண்டாமன்னியர் தன்னாலே மிகுந்தசெல்வமுண்டாமே. 16

## வேறு

நாடியரிடபந்தன்னில் வந்துமிதுனம் நலமொடு கேட்பாராகில்
நீடியமரங்கள் தன்னையேகொள்ளல் நிலையொடுக் கட்டம் செய்ய
தேடிய அவுழ்த வாதியைக்காணல் திரஞ்ஞானக் கேள்வியையுறுதல்
வாடியவுறவின்வழி போகக் கேட்டல் வரும்நிலை யிவ்விதப்பலனே. 17
திரமுள்ளவிடையில் ஆருடப்பலன்கேள் நிலைலக்கி னாதிபனுபயம்
அரமுள்ளவரசன் பார்வையங்கிருக்க அதிகாரிப்பொருள் கலகங்கள்
தரமுள்ளநீலன் மங்கலன்பார்வைச் சார்ந்துமே யிருந்திடில்பலன்கேள்
விரவிய அன்னியதேச சஞ்சாரமிருவாய்ச் செல்லக்கேட்டிடுவர். 18
அன்னியதேச சஞ்சார மென்றீ ரதில் சுகமெவ்விதஞ்சொல்லும்
உன்னியதரசே வோதினரிருவர்லொருபெண்பால் பூமிநற்பொருளும்
வின்னமாயன்னிய ரனுபவமென்று வேந்தர்கள் மூலமாய் விரயம்
பண்ணியப்பலபேர் கூடியேநட்பாய் பல்விரயந்தனைச் செய்வார். 19
விரையமேசெய்துபின்பது ஜெயமாய் வேந்தர்கள் தனக்குமேவழக்காய்
குறைவிலாலாப மடைவதுநிலைகாண் குணமுள்ளப் பெண்ணினால்லாபம்
தரைமிசைவிரயந் தானில்லைலாபம் சார்ந்திடும்மனை தனிலும்
நிரைவதாய்மனைகள் கட்டடம்நங்கை நிரைந்த செல்வங்களுண்டாமே 20

## வேறு

இன்பமா யிடபத்தாதி லாருடங்கள்
இடரில்லா திதில்கேட்கி லினிதுசொல்வோம்
துன்பமில்லை யேகன் வாகனத்திலேறி
துலைநின்று மேடமதில் சொல்லக்கானில்
அன்புடையோர் குடும்பத்தில் கூடல்நட்பு
அதிகசுக மங்கலமு மாடைபூணல்
வன்புடைய வழக்கதனை நிவர்த்திசெய்ய
வருவன்கா னிவ்விதமாய் மதித்தலென்னே. 21

## வேறு

கூடியேயொருவன் வஸ்திரமதனைக் குருகியே கழுத்திடையணிதல்
தேடியமதனால் சுபத்தினைமுடிப்பன் சிறந்திடு மரசர்கள்வழக்கு
நாடியேஜெயமாம் பெண்ணிருவருக்கு நயம்பொருள் தன்னையேகுறித்து
நீடியவழக்குச் சஞ்சலமதனால் நிலைபேதம் செல்வனென்றோதே. 22

## 3–வது மிதுனம்

ஓதினர்ப்பிருகு மதியுடன்பார்வை யுற்றுபயந்தனிலிருக்க

நீதியாயரசன் பார்வையங்கிருக்கில் நிலையிருபெண்ணதி லொருபெண்
பேதியாதிருந்து சுபத்தினை முடித்துப் பிதுருவர்க்கந்தனில் கர்மம்
ஆதியாய்நின்ற நிலைதனைவிட்டு வரிதிசை செல்வனொன்றோதே. 23

## வேறு

அரிவது மிதுனந்தன்னி லாரூடங் குறிக்குங்காலம்
தெரிவது மனைவிதன்னைச் சிதரிடல் பொருள்வின்னங்கள்
உரியநற் பாவி பார்வை யுற்றிடில் நாற்கால்ஜீவன்
குருகிய விரயமொன்றுக் கோள்கலகத்தைக் கேட்பன். 24
கேட்பனென் றுரைத்தீர்நல்லோர்க் கிளைமதிப் பார்வையங்கு
தாட்படப் போமோ மேன்மை சஞ்சல மெவ்வாறுமன்னா
ஆழிதில் புந்தியாக்ஷி யானதால் குருவுக்காக
தாழ்வதால் சுபர்களாலும் சஞ்சலமடைவனென்னே. 25

## வேறு

மேதினியில் தண்டதனில் நின்றுபின் மேடம்
மிகவருவ ராமாகில் சஞ்சலமே யில்லை
யீதின்கன லாபமதிகம் பெறுவன்காணு
மிதில்பூமிப் பொருளாபரண மொன்றைக்கொண்டு
பேதகமாய்ப் பெண்பாலைப் பிரித்துவழக்குரைத்தல்
பெருமேடந் தனில்நின்று மிதுனத்தில் வரிலோ
நீதிமன்னர் வழக்குடனே மாலவன்மா மறையோர்
நேர்வழக்கா மதில்ஜெயமுண் டென்றுரைப்பீர் தானே. 26

## வேறு

மருவியநந்தியீசர் மன்னவன் றன்னைப்பார்த்துப்
பெருகிய தென்றுசொல்வார் பீதகன் புந்திசெல்வம்
தருந்திரந் தனிலேநிற்கச் சார்ந்தநற் பார்வைதன்னால்
கருதிய விரோதத்தோடு காளையே யன்னியஞ்சென்றான். 27
தண்டதில் நாற்கால்ஜீவன் சார்ந்திடவிரயமொன்று
துண்டதா மிரவிசெவ்வாய் சூழ்சனிப் பார்வையங்கு
கண்டிடில் வடகிழக்குக் கருமைகாண் நிறஞ்சிகப்பு
உண்டதில் சிரசில்வெண்மை யோதிடுங் கொம்புபேதம். 28
பேதமா மிடப்பக்கத்தின் பெருகியக் கொம்புதாழ்வு
சாதகமாகத் தாழ்ந்துத் தளர்ச்சியாய்க் குறுகிநிற்கும்
ஓதியப் பொருள்மூலம் உருங்கலகங்க ளுண்டாம்
வீதியிலிருந்த நாற்கால் விரோதத்தால் போச்சுதென்றே. 29

## வேறு

சார்ந்தமிதுனந் தனில்நிலமை சாற்றுங்கலகம் கூந்தல்தனை
சேர்ந்தேயொருவன் கைக்கொண்டு திரமேகட்க மகரமதாய்
தேர்ந்தே செல்வா னிதன்பலன்கேள் திரமாம்பாவி யுபயத்தில்
வீழ்ந்தேநிற்ப ரிதன்பலன்கள் விளம்பக்கேளு மன்னவனே. 30
பலன்கள்ஜேஷ்ட சகோதரர்க்கும் பாலன்றனக்கும் பிணிகண்டு
தலங்கள்விட்டுத் தலமாறி சார்ந்த தூதன் றனைக்கண்டு
நலங்கள் தெரியத் தான்வேண்டி நாடிவந்தா னிமித்தமிதால்
குலங்கள் தன்னில் புத்திரனே கூறுங்கர்ம சஞ்சலமே. 31

## 4–வது கடகம்

கண்டிடக் கடகந்தன்னில் கருத்துட னரசேகேளாய்
மிண்டியசுபர்கள் பார்வை மிகுத்திட வரசர்மூலம்
தெண்டனை யடையும் செய்தித் தியங்கிய சஞ்சலமாங்கேட்பன்
சண்டனால் பார்வையாகில் தரும்பலன் வழக்காமென்றே. 32

## வேறு

சிறந்த கடகந்தனிலே யரசனுச்சம்
சேர்ந்தசுபர் பார்வையினால் தீமையெவ்வாறு
திறம்புந்தி யரசேகேள் திருதியம்பின் விரயம்
சிறந்தபிருகு விதற்குத் தேய்மதியுமாக
நிறம்வேந்தனாறாதி நிலைக்கொடுமை யல்லால்
நீலனுடன் நிலமகனும் நேர்வெய்யோ னிவர்கள்
அறிந்தபலன் மேன்மையதா மதில்நன்மை தருவர்
அறியக்கே ளின்னமினி யாதித்தநிலையே. 33

## வேறு

நிறந்தான்கடகந் தனில்நிலைமை நேருமன்னியர்ப் பெண்பாலை
திறங்காண்கொண்டுப் போகவிதில் தேர்ந்தே வந்தா னாருடம்
சிறந்தபுருடன் றலபேதஞ் செய்யமனதில் தானெண்ணம்
மறந்தான் பொருள்க ளில்லையென மயங்கிக் கெட்டானெனவோதே. 34
கேட்டவுடனே பெண்பாலே கிளைகள்கர்ண பூஷணத்தை
நீட்டிக்கொடுத்தாள் சந்தோரம் நிலையாய்கங்கை யருகினிலே
நாட்டிலுள்ளோர் காணாமல் நாடிச்செல்வோ மென்றுரைத்துக்
காட்டிலிருவர் தான்கூடிக் கலந்துசெல்வரெனவோதே. 35
கலந்துசெல்வா ரென்றுரைத்தீர் கன்னிதனக்கு வயதென்ன
உலர்ந்தேயிருப்பா ளரசேகே ளுறுதிபத்துப் பின்னொன்பான்

ஜலந்தானிறங்கிச் சத்தியமே தாவென்றுரைத்தாள் தையலவள் 36
அலர்ந்துவிட்டாகாதென்று அடித்தானலறி யவள்சென்றாள்.

## வேறு

ஆர்கடகத்திற்றேவே யரசனால் வழக்குவென்றீர்
சேரதி லட்டமாதிச் சேய்ம்திப் பாவர்பார்வை
கூறதில் நிற்கச்செல்வங் குணமில்லை வழக்கல்லாது 37
நேரினில் சோரர்துன்பம் நிலையுள்ளதென்றுகூறே.
சார்ந்ததில் சோரமென்று சாற்றியதெவ்வாறுசொல்லும்
சேர்ந்திடும் நிறமோவெண்மை திரம்துலை மருவிமச்சம்
சேர்ந்திடும் கரத்திற்காணும் சொல்வது தாதுவர்க்கம் 38
நேர்ந்திடும் மித்திராள்தன்னால் நிலைபேத மென்றுகூறே.
கூறுநீ யிருந்திடங்கள் கொள்கைசொல் லிரண்டிடத்தில்
தேறினர் மரத்தின்சந்து திரம்பெட்டிபூ பேழையாகும்
பாரினி லுயரந்தன்னில் பற்றியநிலையே யாகும் 39
வாரமாந் திங்கள் தன்னில் மறைவுநற் படுமிவ்வாறே.

## வேறு

துணிநல்கடகந் தனில்நிமித்தம் சொல்லக்கேளும் பெண்ணொருத்தி
அணிகள்பூண்டு கங்கைதனை யாடிசிரத்தின் மீதிருத்தல்
கணிதல்பிருகு புந்திமதிக காரியிவர்கள் தான்பார்க்கில் 40
பணிதலிதற்குப் பலன்பாலா பகர்வோம் கேளும்புவிமீதே.

## வேறு

கேழ்வியொன்றுளது வெவ்விதமென்னில் கிலைமதியொடு புந்திகாரி
தாழ்விலாப்பிருகு வெவ்விதமிருப்பர் தன்மைசொல் லின்னமிப்பலனை
பாழில்லையரசே பற்றியக்கடகம் பகரிடபந்தனில் முடவன் 41
ஆழ்வில்லாமற்றோரு பயத்திலிருக்கில் அதன்பலனுரைத்திடக்கேளும்.
பாரினிலன்னிய தேசசஞ்சாரம் பலமுடனிருவர்காண் கூடி
நேரினிற்றென்கீழ் திசைதனில்செல்வர் நிலையதைக்குறித்துமே கேட்பர்
கோரியநிமித்தந் தனில் செல்வமுளதாய்க் குணமொடு சுபமதை முடித்தல் 42
நாரியர்தன்னால் பொருள்வருத்துண்டாம் நலமதாம் காரியம் ஜயமே.

## 5-வது சிம்ஹம்

நிலையுடனே சிங்கமதி லாருடங்கேட்கில்
நிலையிதுகாண் பூமிவிவ காரமொன்று
பலமருகில் சுபர்பார்வைக் கலந்துநிற்கில்
பார்வையரால் பொருள்வருத்துப் பணிந்துகேட்பர்
பெலனில்லாப் பாபிகளின் பார்வையாகில்

பேதகமா யோர்நாற்கால் ஜீவன்தானும்
தலமதனை விட்டேகும் தன்மைதன்னால்
சார்ந்தபல னாரூடம் தனித்தங்கோதே.

## வேறு

அரியில்பலன்க ளாரூடம் அறிதல்கா ணன்னியர்மனையைப்
பிரியமுடனே தான்கொள்ளல் பெண்பால்வழக்கு யதிற்செல்லல்
தெரியுமரசர் வழக்கதனைச் சேர்ந்துக்கேட்க பொருள்விரயப்
பிரியும்நாற்கால் ஜீவனதைப் பேதிர்தறைவ னெனச்சொல்லே. 44

## வேறு

சொல்வதுவிரவித்துலைதனில் நிற்கில் சூழுமானிடர்தனைக் குறித்தும்
வெல்வதுமேடம் கலைகடகங்காண் மேவிடிவிதிற்பல னாற்கால்
அல்லவேரிடப மரியேதேள்கும்பம் அமர்ந்திடி லதுபொருள்பூமி
செல்லல்காண்கன்னி மீன்சிலைதன்னில் செங்கதிர்நின்றிடில் பலன்கேள். 45
வல்லபமன்னியர் பொருள்தனைக்கொள்ளல் வாணிபமதுதனைக் குறித்தும்
தொல்லையாமன்னிய தேசசஞ்சாரம் சூழ்புவிதனில் செல்லக்கேட்பன்
எல்லைவிட்டகலா னிருவராய்க்கூடி பின்பமாய்த்தொழில்பூமி தனிலே
வில்லெனுந்தொழிலால் ஜீவனம்புரிவன் மேதினிதனி லிவ்வாறுபலனே. 46
கதித்திடுஞ்சிங்கம் பூமியில்வழக்குக் கன்னியால் கலகம்மெவ்விதங்காண்
துதித்தவாறாதி நிலமகன்மதியும் சூழ்ந்துமேபார்வையங்கிருக்கில்
விதித்தனரிதனால் பூமியுமிருவர் விதங்கீழ்பா லருகினில்நடையாய்
பதித்தனர்பெண்பால் திக்கதுத்தென்கீழ் பற்றியவாராலால் வழக்கே. 47
தனமதைவிரயஞ் செய்வன்காணிலனால் தழைத்தமண்ணடி நாற்கால்கலகம்
இனத்தினிற்கலக மரசரால்விரயம் இருமாதந்தன்னிலோர் கர்மம்
வனத்தினிலலையும் பிரயாணமொன்று வந்திடும் சஞ்சாரத்தொழில்காண்
கனத்துடன் கூடிக் கலகமேசெய்வன் காரிழைப்பகையு முண்டாமே. 48
இணங்கியசிங்கமதில் நாற்கால்தன்னை யெடுத்துரைத் திடுதல்காணரசே
குணங்குறியுளதாய் நிறஞ்சிகப்பதிலும் குறுகிய வெண்மைகாண் முதுகில்
வணங்கிடமாரம் காதினிற்புள்ளி வருமறை முகந்தனி னென்க
அணங்கியமதியாண் டதிற்பொருள்விரய மமர்ந்திடுமெனப் பலனோதே. 49
திரமெனும் சிங்கந்தனில்நிமித்தங்கேள் சேய்தனையெடுத்துக்கொண்டொருவன்
கரமதிற்கோலை யூன்றியேவருதல் கதிர்சரந்தன்னிலே யிருக்க
அரமுடன்குறித்த காரியமரசர் அதில்விரயங்கள்காண் வழக்கு
வரமுடன்தெய்வ வாலயம் செல்ல மனதினில் குறித்தனென்றுரையே. 50

## வேறு

கண்டிட வதிகாரத்தில் கருதுவ னிருவராக
மிண்டியப் பூமியாலே மிகவழக் குளதாய்ப் பொருள்கள்
துண்டிய விரயமாகுந் தோல்வியொன் றில்லையென்க
அண்டியப் பேர்களோடு வாலயந் தென்கிழக்கே. 51

## 6–வது கன்னி

கன்னியி லாருடங்கள் கதித்திடுங் கர்ப்பந்தன்னில்
உன்னியப் பலன்கள் பெண்ணை புறுமணம் செய்யல்பூமி
வன்னமாம் பாவிப்பார்வை வந்துட னிருக்குமாகில்
அன்னிய தேசம்செல்ல ஆலயங் குறித்துக்கேட்பன். 52
வின்னமொன் றில்லைபெண்பால் மிருகர்ப்ப மென்றுகேட்பன்
உன்னிய வாடைபொன்னை யுடன்விரயங்கள் செய்து
பின்னையே தலபேதங்கள் பிரிந்துபின் போகவெண்ணம்
தன்னிலை தனிலுஞ்சோரம் சார்ந்திடக் கேட்பானென்றே. 53
கேட்பது புந்திமேடம் கிளர்நண்டு கோல்சுராவில்
தாட்பட புந்திநிற்கில் தரணியை விட்டேபோகல்
ஆட்படுமெருது கோள்கா ணரிகுடந் தன்னில்நின்றால்
வாட்படும் சுபமுடிக்க மன்னனை யெதிர்த்துக்காணல் 54
காணல்காண் கன்னிமீனம் கதித்தயாழ் சிலையில்தானே
பூணல்கா ணாடைபொன்னைப் பொருந்தியே கேட்பனென்க
ஆணுவம் பாவிப்பார்வை யடைந்துடன் கூடினாலும்
வாணிபந் தொழில்கள் புந்தி வரும் நிலை யறிந்துகூறே. 55

## வேறு

நின்றகன்னிதனில் நிமித்தங்கேளாய் பெண்பால்
நிறமாடைப் புஷ்பங்கள் நேசரோடு
சென்றிடல்காண் மீனதிசை யிருந்துத்தேளில்
சிறந்துசெல்ல லதிற்பலன்கள் திறமைகேளாய்
தென்திசையிற் பெண்ணதனை சுபமுடிக்கத்
தீரமதா யதற்கிருவர் கூடும்வார்த்தை
அன்றிலம்மா னிதில்பேத முரைத்தாகாதென்
றன்னிய தேசந்தன்னை யடைவன்றானே. 56
அடைவதிலும் பெண்ணதனை சுபமுடித்தல்
அதிகாரம் வழக்குஜய மடைதல்காரி
நிடைதனத்தோன் பார்வையதில் நிற்கச்செல்வம்

நிலையுளதாம் சுபதர்மம் நெறியாய் செய்தல்
துடைதனிலே ரணமுளதாய் வந்துகேட்பன்
சொல்வதுகாண் பெண்மூலம் பிணியுள்ளோனாம்
தடைவதிரு வர்க்கமதில் பொருள்மூலத்தால்
சார்ந்துவரும் விவகாரந் தனிலேவிர்த்தி 57
விடைசிலையில் வந்தொருவன் மற்றொருவன் றன்னை
விவகார மிட்டழைக்கின் மேதினியிப் பலன்காண்
சகலமுடன் ருணமூல மன்னியப் பிரதேசம்
கலங்கிசெல்ல வெண்ணமதைக் கருதிக்கேட்பன்
துடங்குமன்னா வழக்கதனில் குறித்துஜெய முளனாய்த்
தோன்றியன்னிய தேசமதிற் சுகமுளனாய் வாழ்வன்
தலமதனில் கன்னியெனு மிராசிபல னிதுவாம்
சாற்றிடுவ ரினித்துலையிற் சார்ந்து நிற்கப் பலனே. 58

## 7-வது துலாம்

ஓதியத் துலையிற்றானும் உறுமணம் பாவர்பார்வை
நீதியா யிருக்கில் பூமி நிலையொடுப் பொருளைக்கேட்பன்
வாதிகள் வழக்குண்டாகும் வரும்சுபர் பார்வையாகில்
தீதிதி லில்லைபூமி திரம்பொருள் குறித்தேகேட்பன். 59

## வேறு

கண்டறுலையி லாரூடம் கருதுங்காலம் காரிமுதல்
துண்டாமரவு யதில்பார்வைச் சூழ்ந்துவிருக்கின் வழக்கினையே
அண்டிக்கேட்பா னதிலரசன் அமர்ந்தசுபர்கள் பார்வையானால்
தொண்டர்க்கூடும் கட்டடங்கள் சூழுமனைகள் விர்த்தியென்றே. 60

## வேறு

நலமதாந்துலையில் நிமித்தங்கள்கேணீ
நாடியே தையலாள் காயை
பெலமொடுப்பிரிவு விரண்டதாய்க் கரத்தில்
பேதமில்லாமற் பெண்ணொருத்தி
கலகமொன்றில்லாள் கர்ப்பமேயுடையாள்
கங்கைநீர்க்குடமெதிர் வருதல்
நிலையதாமிதற்குப் பலன்றனை யறிதல்
நேசன்காண் பிறகுநற் பலனே. 61
பலமிதில்கனிட்ட சகோதரன் றனக்குப்
பலன்ஜீவ னங்களைக் குறித்தும்
தலமதில்சுபங்கள் முடிக்கவே பெண்பால்

தரணியி லலைவரிரண் டிடத்திற்
துலைதனக்கைந்தா மிடத்தினிற் பெண்பால்
சொல்வது வதிலிரு பெண்கள்
வலுவதில்கனிட்டப் பெண்சுப முடிப்பன்
வருமம்மான் கலகத்தா லென்னே 62

## 8-வது விருச்சிகம்

கதித்ததே ளதிலாரூடங் கருதியப் பலன்யாதென்னில்
விதித்திடும் பூமிதன்னை விலையதாயன்னியர்க்குப்
படுத்துபின் கேட்பாரிவ்வாறு பாபிகள் சகிதமானால்
உதித்திட விரயம்நாற்கால் உறும்சுபர் பொருள்வருத்தே 63

### வேறு

சிறந்ததேளில் சேய்பாவிச் சேர்ந்தங்கிருக்கப் பூமிதன்னை
விரைந்தேகேட்பான் சுபர்பார்வை யுண்டாயிருக்கவிருமனைகாண்
நிறைந்தன்னியர்க்கு நிலைசெய்யல் நேசம்பிரிவு தானுரைத்தல்
குறைந்தமதியின் பார்வையதில் கூடிலரசர் வழக்கென்னே. 64

### வேறு

செல்வமாந்தேளில் நிமித்தங்கேளரசே திரமொடு வமங்கலியொருத்தி
கல்லலாம் விறகு கட்டியேசிரசில் காட்டியே யெதிர்வரல்கருவி
அல்லலாய்க்காணல் மாதுர்க்குரோகம் அறிந்திடலதில் நாற்கால்ஜீவன்
மெல்லியவிரய மரசரால்பகைகள் மெய்யினில்ரோகமே விடுமே. 65

### வேறு

கனந்தரும் தேளில்பூமிக் கலகமெவ்விதங் காண்சொல்லும்
மனந்தனர் வின்றிமன்னா வரும்சப்த மாதியாறோன்
தனந்தனத் ததிபர்பார்வைச் சார்ந்திடில் மூவருக்குள்
இனந்தனில் விவகாரங்கள் இருவரும் மேகமென்றே. 66

தாவியற் தேளில்நாற்கால் தலம்விட்டுப் போதல்கேட்பன்
பாவிகள் பார்வையங்குப் பற்றியே நோக்குண்டாகில்
மேவிய நாற்கால்சோரம் மிகுதுலைத்தென்கீழாகும்
ஏவிய தொருவன்வந்து விடரிலாப் புலமேசொல்வான். 67

## 9-வது தனுசு

சிலைதனில் கேட்பாராகில் சிதறியப் பொருள்தானென்க
அலைவது புத்திராள் தானும் அன்னியதேசம் செல்லல்
குலைவதா மரசர்மூலம் கூடிய வழக்கைப்பற்றி

நிலைதனை விட்டபேதம் நிலையதைக்குறித்துக்கேட்பன். 68

## வேறு

பேதியாதிதற்கு தனுவதிலரசே பிறர்பொருள்தனை யபகரித்தல்
நீதியாம் பெண்ணின்கர்ணபூடணத்தை நேசித்துவாங்கியேசெல்வம்
ஓதியமனை யாளுடன் கூடி உணர்வொடுத் தலபேதமாரல்
ஆதியாம்பூர்வந்தனையன்னியர்க்கு அடைத்திடகேட்பனென்றோதும். 69

## வேறு

பிறையுந்தி நீலன்செவ்வாய்ப் பெருஞ்சிலைக் கதிபர்பார்வை
நிறைவுடனிற்கப் புத்திராள் நிலைதனைக் குறித்துக் கேட்பர்
நிறைமதிநீலன்கூடி நெடியதாந் தனுவுக்கேழிற்
விரைவிலா திருக்கமன்னர் வழக்கினைக் குறித்துக்கேட்பர் 70
சொல்வது வழக்குவென்றீர் சுகமில்லை யெவ்வாறங்கே
வெல்வது வுபயந்தன்னில் விளங்கிட விபரமீது
அல்லலே யில்லையின்னம் அரசேகே ளட்டமாதி
தொல்லையாம் பார்வைதன்னால் சூழ்ந்திடலன்னியதேசம். 71

## 10–வது மகரம்

மருவிய மகரந்தன்னில் வரும்நாற்கால் விரயந்தன்னை
குருகிய மன்னர்மூலம் கோள்பகை தனைக்குறித்தும்
தருமிதில் சுபர்கள்பார்வைச் சார்ந்திட லன்னியதேசம்
பெருகியே போதென்றுப் பெலமுடன் கேட்பானென்றே. 72
மைந்தனே மகரந்தன்னில் மருவிய வாரூடங்கள்
விந்தையாய்க் கேட்பாராகில் மிகுசோரமென்று சொல்லும்
சந்ததிக் கரத்தில்தந்தைத் தரும்பொருள் விரயமென்று
சிந்தையுங் கலங்கிக்கேட்பான் திரம்பெண்பால் தனைக்குறித்தே. 73
குறித்ததுப் பொருளாமென்றீர் கூறிடு மெவ்விதங்காண்
கரியவன் றனக்கிரும்புக் கனவெள்ளத் திறவுகோல்காண்
தரித்தசங் கிலியினோடும் தரும்விரயங்க ளென்பர்
மரித்தனன் போதைவஸ்து வளமுடையவன்கா ணென்னே. 74
சந்திரன் றனக்கேழாகச் சார்ந்திட மகரமீதுப்
பிந்திய திருவரோடுப் பெலனன்னிய தேசஞ்செல்லும்
சுந்தர முள்ளாள்தன்னைச் சுகமுட னழைத்தானேகன்
முந்தியே யறிந்து முன்னோன் முடிவிடன் போர்செய்தான்காண். 75
போர்தனைக் குறித்ததெவ்வாறு புலமதுப் பெண்ணின்வீதி
ஏரதில் நிற்கும்வீதி யிடரில்லைத் தென்வடல்தான்

நேரினில் தென்பான்சந்து நிலைமேற்கு வாசலாகும்
பாரினி லெதிரில்தானும் பலமுள்ள கங்கையுண்டே. 76

## 11-வது கும்பம்

குறிப்பொடு கும்பந்தன்னில் நின்றுகேட்கில்
குணமொடு சுபந்தனை முடிக்க
நெறிப்படும் பெண்ணைக் குறித்திரண்டிடத்தில்
நேசமாய்க் கேட்டதில் பெண்பால்
தறிப்படும்வார்த்தை யுரைத்தன ரதனால்
சஞ்சலம் சார்ந்தன னென்க
பிரிப்படுங்கலகம் சத்துருக்கருகில்
பேதமாம் சாலியால் வழக்கே. 77
சார்ந்திடுங் கும்பந் தனிலரசாங்கம்
தருஞ்ஜீவ னங்களைக் குறித்தும்
நேர்ந்திடுமனைவி தன்னையே குறித்தும்
நிலைசுபர் பார்வையங் கிருக்கிற்
சேர்ந்திடும் பூமிப் பொருள்தனைக் குறித்தும்
திரம்பெண்ணை யன்னிய தேசம்
கவர்ந்து கொண்டிடவும் வந்துமேகேட்பன்
கலக்க மில்லாமலே வுரையே. 78

## 12-வது மீனம்

அரசனேமீன மமர்ந்துபின் கேட்கில் ஆதீனப்பூமியைக்குறித்தும்
முரசொடு வன்னிய தேசசஞ்சார முற்றிலுங் கங்கையாத்திரையாய்
சிரசினிலிருக்கும்நோய் தனைக்குறித்தும் தேவாலயங்களைக்குறித்து
சரசமாமனைவிக்கலகியாயென்றும் தரைமிசைக்கேட்பனென்றோதும். 79
மீரியமீனந் தன்னிலே சுபர்கள் மேவிநின்றிடுங் காலந்தன்னில்
காரியின் பார்வையதிலில்லாதிருக்கில்கன்னியர் வழக்கினைக்குறித்துப்
போரினாலன்னிய தேசமே செல்லல் பூரண மதிப்பார்வை யாகில்
நேரினில்சுபங்கள் ஜலயாத்திரைக்கு நேர்ந்திடும் பலனெனச்சொல்லே. 80

**நந்திப்பிரசனை யெனும்**
**ஆருடப்பலன்**
**முற்றிற்று**



எட்டாறு பன்னிரண்டில் லிருந்திட ராகுகேது
கட்டிடான் காரிசெவ்வாய் கதிர்மதி யெவரானாலும்
சட்டமா யிருந்துவாழ்ந்து சலிப்புடன் மனைவிசேதம்
பொட்டென அழிந்துதானும் புகழ்மனை நாசமாமே. 1
ஆறெட்டுப் பன்னிரண்டில் அமர்ந்திடி லரசன்சுங்கன்
சேரவே புதனுந்திங்கள் சேர்ந்திடில் சிதருஞ்செல்வம்
நாளரை தனிற்சாவாகும் நாயகிவனமே போவாள்
பாரென வழக்குச்சண்டை பற்றிடும் மனைபாழாமே. 2
ஆறினுக் குடையோனோடு அரசனும் புதனுங்கூடில்
தாக்குமே வயதுநூறு சந்திரன் புதனும் நோக்கில்
சேர்க்குமே வயதுவெண்பான் செல்வமும் யோகமுண்டு
தூக்குமே யெதிரிநில்லான் துணைவனும் முத்தியாமே. 3
லாபத்துக்குடையோன் றன்னை நலமுடன் ராகுகேது
தாபமாய் செவ்வாய்கேது தன்னிலே யொருவர்நோக்கில்
கோபமும் சிலேத்மவாயும் பித்தமும் தனக்குரோகம்
சாபமும் வருமேதுன்பம் தரித்திர மனையாம்பாரே. 4
தனமதுக் குடையோன்றன்னை தயவுடன் தீயோர்நோக்கில்
கனமுடன் யிலாபம் செம்பொன் கடன்பட லழிவுசேதம்
இனமுடன் வாழ்வதில்லை யினிபுத்திரனும் சாவான்
அனல்நெறி யழிவுசேதம் அடிமனைக் கோலப்பாழே. 5
வாக்குமே லெட்டில்லாபம் வளர்பிறை யரசன்நோக்கில்
தாக்குமே தனமுஞ்செல்வம் தையலு மகிழ்ச்சியுண்டாம்
காக்கும் முதலிலாபம் கற்றவர் புதல்வர்நேசம்
சேர்க்குமே மனையிற்பூமி திரவிய முதலுண்டாம். 6
கண்டிடல் வாக்குநாலு கனமுள்ள லாபமெட்டில்
நின்றிடில் காரிதீயர் நிலவரம் நின்றுபார்க்கில்
இன்றுள்ள மனைவிமைந்தார் நாசமாஞ் சேதங்கூறும்
குன்றிடும் யோகஞ்செல்வம் குலமனைப் பாழதாமே. 7
வன்னமாம் நான்கிரண்டில் வளர்மதி யரசனின்றால்
என்னமே வயதுநூறு வேற்றமும் போகும்வாழ்வு
மன்னவன் புகர்தானிரண்டில் வந்திடில் வயதுநூறு
தன்னவன் மனையையாண்டுத் தழைத்தவன் வாழ்வதாமே.8
பூத்திடு மேலும்பத்துப் பிறந்திடு மாதாகேளாய்
கோத்திரம் பத்தும்வாழ்ந்துக் கிளையுடன் கூடிச்சேர்ந்து
பேத்திர மனைவிமைந்தர்ச் செல்வமும் சிறப்புலாபம்
பாத்திரம் பூசைதீக்ஷைப் பல லாபம் விளங்கும்பாரே. 9

வருத்தசஞ் சலங்கள் நீங்கும் வருந்தனம் பெருகுமிக்க
தரித்திர மகன்றுபோகும் தரணியில் கீர்த்திமிக்க
கருத்துடன் கல்விகேள்விக் கனநகை யணிகைநட்புப்
பொருந்திடும் புத்திராள் விர்த்திப்பெருமை சேர்மனையாம்பாரே.10
மன்னவ னேழில்பத்தில் மனையிரண்டில் நிற்கநோக்க
தன்னவர் தாயார்தந்தை சம்பத்து மிகவுஞ்செல்வம்
நின்னவம் மனையோனாகில் நிலைதருப் பூமிநாற்கால்
அன்னவன் பொசிப்புவின்னம் அகம்வய தென்பதாமே. 11
காரிதா னேழுபத்தில் காரகன் மதிசேய்பார்க்க
பாரியால் பெர்ருளும்சேதம் பலபிணி யவர்க்குமுண்டு
வீரியப் பலனும்குன்றும் வேந்தர்தன் பகையுமுண்டாம்
நாரியர் மனையுந்தோற்று நாற்பதில் பாழதாமே. 12
தோற்பது மனைவிமைந்தர் துணைவரும் யெதிரிபேச
காப்பது மானம்கல்விக் கறைபடு லாபம்செம்பொன்
வாய்ப்பது களவுபோகும் வருவதுக் கடன்தானாகும்
ஆர்ப்பது வணிநில்லாது அகலுவானவ் விடம்விட்டே. 13
அகமது யெடுத்தோனாகில் அகன்றவன் பகலேசாவான்
முகமுட நிருந்துதானு முழைத்துமே யிறந்துவுண்பான்
பகைகளும் வழக்குச்சண்டை பாலரும் பிரிந்துசாவார்
துகையது மாதமைந்திற் தொடுத்திடுந் திண்ணந்தானே. 14
வல்லவ னிரண்டாமாதி வருத்தமாய்ப் பகைநீசங்கள்
நல்லவர் சேர்ந்துநோக்க நலமில்லை வயதெட்டாகும்
கல்லவன் முடவன்சேயுங் கதிர்நாகங் கூடிநோக்கில்
இல்லவ னிறப்பா னைந்திலிடிபடும் மனைபத்தாண்டில் 15
நேத்திரங் குடும்பந்தன்னில் நிற்பவர்ச் சத்துருமாகில்
சாத்திய செலவுண்டாகும் சஞ்சல வருத்தஞ்சேதம்
போற்றிடுங் காரிநாகம் புண்ணியர் சேர்ந்துநோக்கில்
காற்றினா லனலால்வீடுக் கண்டிடும் பதிபாழமே. 16
சாடிய விரண்டாமாதி சனியுடன் தீயர்கூடில்
தேடியப் பொருளஞ்சேதம் தனம்நகைக் கள்ளர்கொள்வார்
நாடிய வயதுநான்கில் நன்மனை விற்கலாகும்
வாடிய மனைவிமைந்தர் வளர்மனை யிழக்கலாமே. 17
கண்டிடும் மிரண்டாமாதி கதிக்கநல்லுச்சம் பெற்றால்
நின்றிடும் வயதுநூறு நிலவரம் குருவே நோக்க
கொண்டிடும் வயது நூறுக் குறைபடா யோகஞ்செல்வம்
வெண்டிடும் மகம் இருப்பு விளங்கிடும் வயது நூறே. 18

| | | | |
|---|---|---|---|
| ல-ர-வி செ-சு ராச-சந் | | | |
| | | | பு |
| | | | |
| | | | கே |

## மனைக்கு க்ரக மடைக்க விபரம்

கீழ்மேல் 10, தென்வடல் 12, ஆகக்குழி 120, இதை 12-ல் கழிக்கச் சரியாய்ப் போனபடியால், லக்கினம் மீனம் மேற்படி துருவம் 120 ஐ, சூரியன் தசையாகிய 6-ல் பெருக்க, 720, இதை 12-ல்கழிக்க சரியாய்ப் போனபடியால், 12-வது ராசியாகிய மீனத்தில் சூரியன் மேல்கண்ட துருவம் 120 ஐ, சந்திரன் தசையாகிய 10-ல்பெருக்க 1200, இதை 12-ல் கழிக்க சரியாய் போய்விட்டபடியால், 12-வது ராசியாகிய மீனத்தில் சந்திரன் மேற்படி துருவம் 120 ஐ, செவ்வாய்தசையாகிய 7-ல் பெருக்க 840, இதை 12-ல் கழிக்க சரியான படியால் 12-வது ராசியாகிய மீனத்தில் செவ்வாய் மேற்படி துருவம் 120 ஐ, புதன் தசையாகிய 11-ல் பெருக்க, 2040, இதையும் முன்போல் 12-ல் கழிக்க மீதி 4 வந்தபடியால் மேஷாதியாக 4-வது ராசி கடகத்தில் புதன், இதுபோலவே மற்றெல்லாக் கிரகங்களுக்கும் பார்த்துக் கொள்ளவும் எப்போதும் ராகுவுக்கு 7-ல் கேதுவைப் போடவும்.

### வாசல் விட

தெற்குபார்த்த மனைக்குக் கிழக்கேயிருந்தும், வடக்கு பார்த்த மனைக்கு மேற்புறமிருந்தும், கிழக்குப் பார்த்த மனைக்கு வடக்கேயிருந்தும், மேற்கு பார்த்த மனைக்குத் தெற்கேயிருந்தும், அளந்து அதை 9-பங்கு செய்து சூரியன், சந்திரன், குஜன், புதன், குரு, சுக்கிரன், சனி இவ்வாறு பார்த்துக்கொள்ளவும்.

### சூரியனில் வாசல்விட

### வெண்பா

பரிதி யுடன்கூடிப் பாங்கில்லா வாசல்விடக்
குருகும் பொருளுங் குறுகிவிடும் - தரணிதனில்
சந்ததியு மற்பமாந் தன்மனைவி யாள்பிரிவா
ளந்தமனை யாகாதென் றரை. 19

### சந்திரன்

சந்திரனில் வாசல்விடத் தனதான்ய சம்பத்து
இந்திரனைப் போல் வாழ்ந்திருப்பன் - சந்ததமும்

மாதேவி லக்ஷிமியும் வந்தே குடியிருப்பாள்
காதலுட னிப்பலனைக் காண். 20

## செவ்வாய்

கொடிய செவ்வாய் வாசல்விடக் கொம்பனைகளுமடிவார்
மிடியா தரித்திரம் மிகுகரகம் - குடியிருப்பன்
காட்டேரி வீரன் கருப்பன் கருங்கூளி
காட்ட மிலா வாசல்விடக் கருது. 21

## புதன்

மேலும் புதன் வாசல்மிக்க பாலும்பழமும்
சீலமுடன் சந்தானம் செல்வமிக-தாலமதில்
சந்ததமும் விர்த்தித் தனம்பாக்கியம் பெருகுஞ்
செந்தா மரை யெனவே செப்பு. 22

## வியாழன்

அரியகுரு வாசல்விட யரசர்தே வாலயமாம்
பெரியதன பாக்கியமெனப் பேசுங்கால் நெறியில்லை
கன்னிசுகம் நிஷ்டூரங் காணுந் தலமீது
மன்னர் புகழுங் கீர்த்திமான். 23

## வெள்ளி

வெள்ளிதனில் வாசல்விட வேண்டாங்காண் விட்டக்கால்
நல்லவிருளில் சோரம் நாடுங்காண் - இல்லமதில்
படுக்கப்பயமாகும் பலனில்லை கன்னிசுகம்
இடுக்க முண்டாமென்றே வியம்பு. 24

## சனி

காணுசனி வாசல்விடக் கலகம்பிணி நோயாம்
வீணான துன்பம் விளையுங்காண் - காணாத
பேருலகுங் காய்ச்சல் பெண்டுபிள்ளை தான்கெடுதி
ஊருக்கு மாகா னென்றோது. 25

## ராகு கேதுக்கள்

பாம்பிரண்டில் வாசல்விடப் பலகாலமும் விசனம்
வீம்புடனே கிருஷி விளையுங்காண் - சோம்பலுடன்
நித்திரையு மேலதிகம் நிஷ்டூரமே வருதல்
அத்தனையு மவர்க்கென் றுரை. 26

## சிற்பம்

மயனருள் கருடன்யோனி மனைதனில் வந்துசேர்ந்தால்
கயமுள்ள திருவேசேர்வாள் கனமுள்ள மக்கள்பேரும்
இயல்புள்ள காலமட்டு மிந்திரனைப் போலவாழ்வார்

தயவுடன் மயனாற் சிற்பம் சாற்றுவ தரிந்திடாயே. 27

## பூனை

துலங்கிய மனைகள்தன்னில் தூளமே ஜனிக்குமாகில்
நலங்கியே பெண்டீற்பிள்ளை நாசங்கள் செய்யும்பின்னும்
இலங்கியே தேசம்விட்டு விறக்கவே யோடப்பண்ணும்
அலங்கியக் கொங்கைமாதே அய்யமும் நடக்கும்பாரே. 28

## சிங்கம்

சிங்கமே மனையில்வந்து சிறப்புடன் ஜனிக்குமாகில்
தங்கமே மொழியுமப்பா சதிருடன் மக்கள்பேறாம்
பொங்கமாங் குயிலினாலே பூமியுள்ளளவும் வாழ்வாள்
மங்கமா மயனாற்சொன்ன சாஸ்திர சிற்பந்தானே. 29

## நாய்

ஈன்றதோர் மனைகள் தன்னிவிசைந்த சுங்கனார் வந்தால்
ப்ஞ்சபாண்டவ ரைப்போலப் பதியைவிட்டகலப்பண்ணும்
கண்டமா மிடரும்நோயுங் கண்ணீரும் விழுகப்பண்ணும்
வண்டனிக் குழலினாளே வகுத்ததை யறிந்திடாயே. 30

## நாகம்

நன்றுசேர் மனைகள் தன்னில் நாகமே ஜெனிக்குமாகில்
என்றுசேர் மனையாருக்கு விந்திரப்பதமேயாகும்
என்றுசேர் வசனமெல்லா மியல்பெரும் புகழாமென்று
மன்றுசேர் மயனார்சொன்ன சாஸ்திர சிற்பம் தானே. 31

## எலி

குந்தியே மனைகண்டன்னில் குலாவியே ஜனிக்குமாகில்
விந்தையாய்பிள்ளைப் பெண்டீற் உடம்பினில் பிணியுண்டாகும்
அந்திய மர்த்தநாசம் அகஃது யறிந்துபோகும்
தந்திய நூலின்வல்லோன் சாற்றிய சிற்பந்தனே. 32

## முயல்

வாயசு யோனிதானும் மனையதில் ஜனிக்குமாகில்
தீயவே திண்ணமாகும் செல்வமும் பெருமைபோகும்
நேயமாம் பெண்டீர்பிள்ளை நிச்சய மரணமாகும்
மாயமாம் மயனார் சொன்ன சாஸ்திர சிற்பந்தானே. 33

## யானை

நேயமா யானையோனி நிலையென மனயில்சேர்ந்தால்
மாயவன் மாதுசேர்வாள் வையகம் புகழுஞ்செல்வம்
யீயவே பெண்டீர்பிள்ளை யியல்புடன் சுகமாய்வாழ்வார்
மாயமா மயனார்சொன்ன சாஸ்திர சிற்பந்தானே. 34

யாதாமொருவர் மனைசல்லியம், நீர்சல்லியம் சொல்லுமென்றாலும் அல்லது நிருபம் அனுப்பிவைத்தாலும் அப்போது அடியளந்து துல்யமாக நாழிகையைக்கண்டு அதிலிருந்து லக்கினக் கிரகங்களமைத்து சந்திரனுடன் எந்த கிரகம் கூடினதோ அந்தக் கிரகத்திற்குச் சல்லியமாம்.

சந்திரராசியில் கிரகம் கூடாமலிருக்கும் 28 அரையில் கிரகங்களை அடைக்கில் அப்போது சந்திரனுடன் கூடியிருக்கும் அவை யெப்படியென்றால்,

இச்சல்லியத்திற்கு நான்கு சந்திரனுண்டு அவை லக்கின சந்திரனென்றும் ராசிசந்திரனென்றும், தினசந்திரனென்றும். உச்சந்திரனென்றும் நான்கு சந்திரனாம்.

## அதன் விபரம்

லக்கினாதிபதி எந்த நக்ஷத்திரத்தி லிருந்தானோ அந்த நக்ஷத்திரத்தை கார்த்திகை அரையில் வைத்து எண்ணி அன்று நக்ஷத்திரம் எந்த அரையில்வருகிறதோ அந்த அரையில் லக்கினசந்திரனும் சந்திரனின்ற ராசியாதிபதி எந்த நக்ஷத்திரத்தி லிருந்தானோ அந்த நக்ஷத்திரத்தை கார்த்திகை அரையில் வைத்து எண்ணில் அன்று நக்ஷத்திர அரையில் ராசி சந்திரனுமாம்.

உதயாதிசென்ற நாழிகையை இரண்டே அரைக்கால்கழித்து வந்த வட்டம் எத்தனையோ அதை 15- நாழிகைக்குள்ளாகில் கார்த்திகை முதலும் 15-க்குமேல் 30-கடிகைக்குள் மகமுதலாகவும் 30-க்குமேல் 45-க்குமேல் அனுஷமுதலாகவும் 45-க்குமேல் 60-கடிகைக்குள் அவிட்ட முதலாகவும் எண்ணி அன்று நக்ஷத்திரத்தை கார்த்திகை அரையில் வைத்து எண்ணி அன்று நக்ஷத்திரத்தரை உச்சியில் சந்திரனே யாம்.

இந்த நான்கு சந்திரனையும் அடைத்துக்கொண்டு நவக்கிரகங்களும் எந்தெந்த நக்ஷத்திரங்களி லிருக்கின்றார்களோ வெனத்தெரிந்து, அந்த முறைபடிக்குக் கிரகங்களையும் அந்த சக்கரத்தி லமைத்து எந்தகிரகமாவது,இந்த சந்திரர்களில் ஒருசந்திரனுடன் சம்பந்தமுண்டானால் அந்த கிரகத்திற்கு உரியசல்லியம் அந்த அரையில் அக்கிரகத்தின் ஆழத்தில் சல்லிய முண்டெனவறிக.

# நொண்டி வணக்கம்

## தனனா தன தனன தனனா
## தனன தனன தனதன தன தனா

சீர்பெருகும் பூசல்யம் - மொழிந்திட
திருகுரு நாதன்பொற் பாதங்காப்பே
கார்நிறத் திருமாலின் பொற்பதங்
கருத்துடன் பணிதிந்தனை விரித்துரைப்பேன். 1
அருள்பெருங் குருசாமி - தனையிப்போ
அர்ச்சனை செய்தேமிக பக்ஷமாய்சொல்வேன்
திருவுடை யோர்கணிதர் கவிவல்லோர்
சிறப்பா மற்றோர்பதமும் செப்பியுரைப்பேன் 2
சல்லியம் மனைக்கூடா - துணிந்தது
சமுத்திரம் தனக்குங் குக்கலொப்பாம்
புல்லிய மொழியெனவே - தெரிந்தும்
பொறுப்பார் பிழையெனவே யுரைப்பேனிதை 3
வினவியக் கடிகையினால் - லக்கினம்
விளங்கும் நவக்கோள்க ளாற்றுதங்கும்
சல்லியத் தின்கரணமதி - யிருவர்கூடி
சிலையுந் தலைமண்டைப் பிரிதியரை. 4
மதியொடு மதிகூடில் - மதியரை
மாறாத ஜலமெனக் கூறாய்நீயே
பதிமகன் மதிகூடில் - ஓடெலும்புப்
பருத்தசெங் சற்பாம்பல் பித்தளையாமே. 5
புந்தி மதியுங்கூட புதனலாப
பொன்னுநா யெலும்புடன் நன்னுஞ்சாடியே
மந்திரி மதிகூட - ஆவெலும்பு
மறையோ னெலும்புங்கல் லுறவதிலே. 6
புகர்மதி யுடன்கூடில் - கருங்கல்லும்
புக்கிடுங் குரிஞ்சிவெள்ளி சுக்கனெலும்பு .
நிகர்சனி மதிகூடில்-எலும்பாய்
நீண்டமயிர்க் கரியுடன் தோன்றும்பாறை. 7
அரவுடன் மதிசேரில்-பழங்கேணி
அரியெலும் புடன் புற்றும் செருஞ்சாடியே
பிறையுடன் கேதுகூடில்-பாம்பெலும்பு
பேசலாம் கேணியுரை மோசம்போகாதே. 8
துலைசிலை மிதுனமதில்-மதியுடன்
துன்னியக் கேதுவும் முன்னுமரையில்
மலைமுலையார் நீராடும் கேணியொன்று
மறைந் திருப்பததனைத் தெரிந்துசொல்லே. 9
சொல்லிடப் புவியோர்களி உன்றனைத்
துதிப்பார் மிகக்கனமாய் மதிப்பார்பாகு
வல்லமை பெரியோர்களிடம் நூறாண்டு
வணங்கிநீ தொண்டு புரிந்தாலும் கொடுக்கார் 10
(தனனா)

## நந்திவாக்கியம் முற்றிற்று

